# நலப்பொருளியல்

[WELFARE ECONOMICS]

திருமதி யசோதா சண்முகசுந்தரம்






தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண் — 572

# நலப் பொருளியல்

ஆசிரியர்
திருமதி யசோதா சண்முகசுந்தரம், எம்.ஏ., எம்.லிட்.,
பொருளாதாரத்துறை,
சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினுன் காண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழி லேயே கற்று வந்தனர். 1968ஆம் ஆண்டிலிருந்து தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.) 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளி லும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர் கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம் மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடை பெற்று வருகிறது. இவ்வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப் பதற்குத்தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக் கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெரு முயற்சியைக் குறிப் பிட்டுச் சொல்ல வேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவர வியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றுன 'நலப் பொருளியல்' என்ற இந்நூல் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 572 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 607 நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப் படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாண வர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னை யின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# முன்னுரை

பொருளியற் சிந்தனை உருவாகிய முறையினை ஆராய்வது உள்ளக்கிளர்ச்சியூட்டும் ஒரு முயற்சியாக இருக்கும் என்ற எண்ணம் எனக்குக் கல்லூரி நாள்களிலேயே தோன்றியதுண்டு. 19, 20ஆம் நூற்றுண்டுகளில் நிலவிய கருத்துகள் தொடர்பாக எழுந்த சில சிக்கல்கள், அக் காலத்தைவிட இக் காலத்திய பொருளியல் கோட்பாட்டு வளர்ச்சிக்கு அதிக அளவு முக்கியத்துவம் வாய்ந்தனவாக இருப்பது தெரியவந்தது. ஆரம்பகாலக் கேம்பிரிட்ஜ் நூல்களைப் பூர்வாங்க முறையில் ஆராய்ந்து ஆய்வுப் பொருளை வரையறை செய்தபோது, பிகோவின் சிந்தனை, மார்ஷலின் மரபு வழியிலிருந்து சற்றே விலகி, ஒரு தனி வகையில் அமைந்திருப்பதைக் காண முடிந்தது. பிகோவின் சிந்தனையில் காணும் கொள்கை அடிப் படைகள், கெயின்ஸின் கோட்பாடுகளிலிருந்து வேறுபட்டவை அல்லவாயினும், பிகோவினுடைய கோட்பாடுகளில் அடிப்படை யான சில புதுமைகள் காணப்படுவதையும், அவை கெயின்ஸிய சிந்தனையாளர்களால் புறக்கணிக்கப்பட்டன என்பதையும் எல்லோ ரும் ஒப்புக்கொள்கின்றனர்.

நலப் பொருளியல் கோட்பாடு பற்றிய இந்நூலில் பிகோவின் சிந்தனையின் மையக் கருத்துகள் ஆராயப்பட்டிருப்பதுடன், தற்காலச் சிக்கல்களில் அவற்றைப் பரிசோதனை முறையில்கூடப் பொருத்திப் பார்க்கும் முயற்சி பல காரணங்களுக்காக விலக்கப் பட்டுள்ளது. திருமதி ஊர்சுலா ஹிக்ஸ், 'பொது நிதியியல்' (1948) என்ற நூலின் முன்னுரையில், புதுவதாகத் தோன்றிய நலக் கோட்பாட்டினைப் பொதுநிதியியலின் மூலமாக வருமானப் பங்கீட்டுக்குப் பயன்படுத்த முயன்றுள்ளார். ஆனால், இத்தகைய பயன்படுத்துதல் குறித்து அவரோ அல்லது மற்ற நலப் பொருளியல் வாதிகளோ முழுமையாக எவ்வித நூலும் எழுதியதாகத் தெரிய வில்லை. இது வருந்துதற்குரியதாகும்; என்னைப்போல் இவ்வாறு

வருந்திய வேறு பலருடைய முந்தைய முயற்சிகளிலிருந்து யான் ஒரு படிப்பினையைக் கற்றுக்கொண்டேன். இத்தகைய முயற்சியில் ஈடுபடுவது, வெறும் வாய்வீச்சைக் காட்டுவதாக அமையுமே யல்லாது, உண்மையான பலன் ஏதும் விளையாது என உணர்ந் ததும், அத்தகைய முயற்சியை யான் கைவிட்டுவிட்டேன்.

தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனத்தாரின் வேண்டுகோளுக் கிணங்க இந்நூல் பெரும்பாலும் பாடப்புத்தக வடிவில் எழுதப் பட்டுள்ளது. ஆகவே நலப் பொருளியலின் எந்தவொரு குறிப்பிட்ட தொகுதியையும் ஆழ்ந்து ஆராயாமல் அதன் எல்லா அம்சங்களையும் பொதுப்படையாகவே எடுத்துக் கூறியுள்ளேன். பொருளியலைப் போலவே நலப் பொருளியலும் எல்லை வரையறுக்க முடியாத ஒன்றாகும். அந்நிலையின் ஒவ்வொரு தொகுதியையும் ஆழ்ந்து ஆராய்ந்து பல நூல்கள் எழுதுவதற்கு வாய்ப்பு இருக்கின்றது.

இந்த நூலினை எழுதுவதற்கு இந்திய, பிரிட்டிஷ் பொருளியல் அறிஞர்கள் பலர் பல வகையிலும் எனக்கு உதவியாகவும், உறு துணையாகவும் இருந்திருக்கிறார்கள். சென்னை மாநிலக் கல்லூரிப் பேராசிரியர் திரு. எஸ். வேலாயுதம் அவர்கள் எனது ஆராய்ச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் கவனித்துச் சீராக வழிகாட்டி வந்தார்கள். பொருளியல் கோட்பாட்டின் அடிப்படைத் தத்துவங்களை எனக்குப் போதித்ததுடன், இந்த ஆராய்ச்சித் துறையில் நான் தொடர்ந்து ஈடுபடவேண்டுமென இடைவிடாது வலியுறுத்தியும் ஊக்கமளித்தும் வந்தார்கள்.

பேராசிரியர் டாக்டர் ஆர். பாலகிருஷ்ணா அவர்கள் பொரு ளியலில் ஆராய்ச்சி நடத்துவதற்கான முறைமை இயலைக் கற்றுக் கொள்வதற்குப் பலவிதமான வாய்ப்புகளை ஏற்படுத்தித் தந்தார் கள். நான் ஆராய்ச்சிகளை நடத்துவதற்கான வசதிகளைச் செய்து கொடுத்த அவர்களது பெருந்தன்மை அளவிடற்கரியது. இந்த நூலில் கண்டுள்ளபடி, கோட்பாட்டுக் கருத்துகளுக்கு ஓரள வேனும் என்னால் மெருகு கொடுக்க முடிந்ததென்றால், அது அன்னாரின் பேருதவியினால்தான் என்றால் மிகையாகாது.

கோட்பாட்டு முறையில் பொருளியலை ஆராய்ச்சி செய்வதற்கு உள்ள வாய்ப்புகளை எனக்கு உணர்த்தியதுடன், என்னுடைய ஆராய்ச்சிக்கு 1963 முதல் 1966 வரை மேற்பார்வையாளராகவும் இருந்து, ஊக்கமும் ஆக்கமும் அளித்த பேராசிரியர் டாக்டர் வி. சண்முகசுந்தரம் அவர்களுக்குப் பெரிதும் கடப்பாடுடையேன். அவர்களுடைய ஆலோசனையும் வற்புறுத்தலும் இல்லாவிட்டால்

எம். ஏ. பட்டத்திற்குப் பொருளியலைத் தேர்ந்தெடுத்து, அதன்பின் பொருளியல் ஆராய்ச்சியிலும் யான் தொடர்ந்து ஈடுபட்டிருப் பேனோ என்பது ஐயமே. என்னுடைய ஆராய்ச்சிக்கு உதவியாக இருந்த மற்ற இந்திய, பிரிட்டிஷ் அறிஞர்களின் அறிவுரையினையும் ஆலோசனைகளையும் பெறுவதற்குரிய வாய்ப்பினை உண்டாக்கித் தந்தமைக்கு நான் டாக்டர் சண்முகசுந்தரம் அவர்களுக்கு என் றென்றும் கடமைப்பட்டுள்ளேன்.

என்னுடைய ஆராய்ச்சியின்போது 1964-65ஆம் ஆண்டில் பிரிட்டனுக்குச் சென்று வரும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது. அப்பயணத்தின்போது ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகத்தின் ஆல் சோல்ஸ் கல்லூரியின் பேராசிரியர் சர் ஜான் ஹிக்ஸ் அவர்கள், பொருளியலில் இதுகாறும் அறிந்துகொள்ளப்படாத சில துறைகளை உணர்ந்து கொள்வதற்குப் பேருதவியாக இருந்தார்கள். அன்னாரின் மனைவியார் ஊர்சுலா ஹிக்ஸ் அம்மையார் அவர்கள் இந்த ஆய்வுப் பொருளில் எனது முடிவுகள் சில உருப்பெறுவதற்குப் பெரிதும் துணை புரிந்தார்கள். ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டாக்டர் ஐ. எம். டி. லிட்டில் அவர்கள் இந்த ஆய்வுப் பொருளின் மையக் கருத்தில் மிகுந்த ஆர்வம் காட்டியதுடன், இப்பொருளை ஆராய்வதற்குரிய சில அணுகு நெறிகளையும் காட்டி உதவினார்கள். டாக்டர் ஹிலாமின்ட், டாக்டர் இ. ஜே. மிஷின் ஆகியோரும் இவ்வாராய்ச்சிக்குரிய முறைமை இயல் குறித்துத் தங்களுடைய அறிவார்ந்த ஆலோசனைகளைக் கூறினார்கள்.

இத்தனை அறிஞர்களின் அறிவுரையும் ஆலோசனையும் கிடைத் தும், இந்த நூலில் குறைகள் எவையேனும் இருக்குமாயின், அவற் றுக்கெல்லாம் யானே முற்றிலும் பொறுப்பு என்பதையும் தாழ்மை யுடன் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

ஆசிரியர்

# பொருளடக்கம்

பக்கம்

1. **நலப் பொருளியலின் நோக்கமும் சிறப்பும்** 1

பொருளியலில் நலப் பொருளியல் நலப் பொருளியலின் தோற்றம் நலப் பொருளியல் என்றால் என்ன? நலப் பொருளியல் கோட்பாடு நலப் பொருளியலின் பண்புக் கூறுகள் நலப் பொருளியலின் முக்கியத்துவம் புதிய சப்பிதாயக் கொள்கையுடன் நலப் பொருளியலின் தொடர்பு

2. **பிகோ கோட்பாட்டின் பின்னணி** 29

நலப் பொருளியல்பற்றித் தொன்மைக் கருத்துகள் இறுதிநிலைப் பகுப்பாய்வின் செல்வாக்கு ஹாப்சானியக் கொள்கை பிகோவின் மரபு கோட்பாடு ஆக்கப் பொருளியலும் நலப் பொருளியலும் தொன்மைக் கோட்பாடுகளும் நவீன நலப் பொருளியலும் - தொன்மை நலப் பொருளியல் : ஒரு திறனாய்வு ஹார்ட்லிப்பின் 'இன்ப உலகம்' தொன்மைப் பொருளியல் சிந்தனைகள் தொன்மைக் கண்ணோட்டம்.

3. **பிகோவியன் பகுப்பாய்வின் அமைப்பு** 80

முன்னுரை — சில கோட்பாட்டு முரண்பாடுகள் — பிகோவின் முறைமையியல் யூகங்களும் தெளிவிலக்கணங்களும் - அறவியல், மற்றும் கொள்கை அம்சங்கள்.

4. **புதிய நலப் பொருளியலின் தோற்றம்** 96

புதிய நலப் பொருளியல் பாரிட்டோவிலிருந்து தொடக்கம் பாரிட்டோ பிகோ தெளிவிலக் கணங்கள் — லெர்னர், ஹோட்டலிங் முதலியோரின் கருத்துகள் — ஹிக்ஸ் கால்டார் சிந்தனைக் குழு — சைட்டோவஸ்கியின் இரட்டைத் தெளிவிலக் கணம் - பகுப்பாராய்ச்சியாளர்களின் வரிசை

5. நலப் பொருளியலின் அணுகு நெறிகள் .... 131

உட்பொருள் விளக்கம் பிகோவின் பொருள் விளக்கம் கேம்பிரிட்ஜ் கோட்பாடு– பாரிட்டோ வழிக் கருத்து பொருள் நலமும் வாழ்க்கைத் தரமும் பிகோவின் பொருள் விளக்கத்தில் காணும் குறை வெவ்வேறு பொருள் விளக்கத்திற் கேற்ப வெவ்வேறு அணுகு நெறிகள் - பொருளியல் கோட்பாட்டில் நலக் கருதுகோள் –தொகுதி நலக் கோட்பாடு : மூவகைக் கருத்துகள் - நலப் பகுப் பாய்வு : மூன்று நிலைகள் - இருவகை அணுகு நெறிகள் கலவை அணுகு நெறிகள்.

6. சில முக்கிய கோட்பாட்டுச் சிக்கல்கள் ... 150

பொருளியலில் ஆக்கக் கூறுகள் - நலப் பொருளியலில் மீக்கோள் தரங்களின் தேவை மீக்கோள் தரங்களின் பங்கு - நலப் பொருளியலில் மீக்கோள் தரங்களின் வரம்பு ஆக்க-தரஞ்சூழ் சர்ச்சை நலப் பொருளியலின் விதியமைப்புத் தன்மை - நலப் பொருளியலில் நேர்காட்சி வாதம்.

7. பொருள் நலத்தை அளவிடல் .... 176

நலப் பொருளியலில் முக்கிய கருதுகோள்கள்— அளவுடைப் படிமுறைப் பயன்பாட்டுச் சர்ச்சை பயன்பாட்டின் ஆரக்கால் ஒப்பீடுகள் பொருள் நலத்தை அளவிடல்.

8. திறனாய்வு .... 198

தொகுப்புரை—பிகோவின் பகுப்பாய்வும் பிகோவிற்குப் பிற்பட்ட பகுப்பாய்வும் - பிகோவிற்குப் பிற்பட்ட கோட்பாட்டின் குறைபாடுகள்.

மேற்கோள் நூற்பட்டியல் .... 212

கலைச்சொற்கள் .... 214

# 1. நலப் பொருளியலின் நோக்கமும் சிறப்பும்

## பொருளியலில் நலப் பொருளியல்

'பொருளியல்' என்னும் சொல்லுக்குப் பொருளியல் அறிஞர்கள் பலர் பலவிதமான விளக்கங்கள் கூறியுள்ளார்கள். அவற்றுள் பெரும்பாலானவை - 'பொருள்வள நலத்திற்கான காரணங்களை ஆராய்வதே பொருளியல்'[1] என்னும் கருத்தை ஒட்டியதாகவே அமைந்துள்ளன. பாரிட்டோ (Pareto), மார்ஷல் (Marshall), ஜே. பி. கிளார்க் (J. B. Clark), கானன் (Cannan) போன்ற அறிஞர்கள் கூறியுள்ள பொருள் விளக்கங்கள் யாவும் இக் கருத்தையே பொதுவான அம்சமாகக் கொண்டிருக்கின்றன. பொருள்வள நலத்தை அடிப்படையாகக் கொண்ட இப் பொருள் விளக்கத்தை லயோனல் ராபின்ஸ் (Lional Robbins) என்பார் வன்மையாகக் கண்டித்துள்ளார். இவ் விளக்கம் 'ஏறுக்கு மாறானது' (Perverse) என்பதும் 'தவறான எண்ணத்தைத் தோற்றுவிப்பது' (Misleading) என்பதும் அவரது கருத்து. 'இத்தகைய விளக்கம் உண்மைப் பொருளியலை ஓரளவு காட்டுகிறதேயொழிய, அப் பொருளியலின் தன்மையை முழுதும் விவரிப்பதாக இல்லை. எந்தப் பொருளும் (Economic goods) அதன் தகுதியைத் தேவையை நிறைவு செய்வதால் மட்டும் பெறுவதில்லை. அப் பொருளுக்கும், அதன் மதிப்பீட்டுக்கும் (valuation) உள்ள தொடர்பு காரணமாகவே அத் தகுதி கிடைக்கிறது'[2] என்று ராபின்ஸ் கூறுகின்றார். மேலும், பொருள் சார்பான பொருள் விளக்கமானது, 'நாமறிந்த பொரு

[1] M·rsha'', A: 'Principles of Economics' (Eighth E. L. B. S. edn. 196') p. I.

[2] R bbins, L: 'An essay on the nature of significance of Econo-Eic Science' (London, 1932), pp. 21 22.

ளியலைத் தவறான முறையில் திரித்துக் காட்டுகிறது' என்றும், 'அதன் தன்மையைப் போதுமான அளவில் தெளிவுபடுத்த அது தவறி விட்டது' என்றும் ராபின்ஸ் குறை கூறுகின்றார். பொருள்வளக் காரணங்களின் அடிப்படையில் பொருளியலுக்குக் கூறப்படும் பொருள் விளக்கங்களை, விஞ்ஞானப் பகுப்பாய்வினால் (Scientific Analysis) வென்றுவிடலாம் என்ற கருத்தையும் ராபின்ஸ் ஏற்க மறுக்கிறார். எனினும், அவர் இவ்வாறு ஏற்க மறுப்பது பொருள் விளக்கத்தை மட்டுமேயாகும். 'பொருளியல் விவரிக்கப் புகும் அறிவுத் துறையின் தன்மையை அவர் மறுக்கவில்லை.' பொருளியல் முறையை (Method of Economics) விவாதிப்பதிலேயே ராபின்ஸ் தமது கவனம் முழுவதையும் செலுத்துகிறாரேயன்றி, பொருளியலின் இறுதி விளைவில் அவர் கருத்துச் செலுத்தவில்லை. எனினும், எந்த ஓர் அறிவுத் துறைக்கும் குறிக்கோள் (objective) ஒன்று இருந்தே யாகவேண்டும். இந் நியதிப்படி, பொருளியலுக்கும் ஒரு குறிக்கோள் உண்டு. மனித வாழ்வின் பலவகைப்பட்ட அம்சங்களில், மனிதன் மேற்கொள்ளும் எல்லா முயற்சிகளின் நோக்கமும், விளைவும் சமுதாய நலனையே குறியாக்க் கொண்டு விளங்குவதால், 'சமுதாயத்தின் பொருள்வள நலனை இயன்ற அளவு உச்சநிலைக்கு உயர்த்துவதே பொருளியலின் (Economic Science) குறிக்கோள்' என்று நாம் கொள்வது பொருந்தும்.

'பொருளியலின் நுதல்பொருள் (Subject-Matter), பொருள் நலமே' (Economic welfare) என்னும் கொள்கைக்குச் சமீப காலத்தில் அதிக ஆதரவு பெருகி வருகின்றது. ராபின்ஸைப் போலவே, பென்ஹாம் (Benham) என்பாரும் பொருள்நலத்தைப் பொருளியல் தரமாகக் (Economic standard) கருதுவதைக் கடுமையாக எதிர்க்கிறார். எனினும், 'இதுபோன்ற ஒரு தனிக் கருத்தானது (concept) பொருளியல் கோட்பாடு முழுவதிலும் செல்வாக்குப் பெற்று நிலவும் பொழுது, அக் கருத்தை வெறும் நுதல்பொருளாக மட்டும் இல்லாமல், சற்று உயர்நிலையை எட்ட முனைகிறது. ஆகவே, அக் கருத்துத் தவிர்க்க முடியாத வகையில், பொருளியல் தரமாக ஆகி விடுகின்றது'[3] என்று பென்ஹாம் வருந்துகிறார்.

## நலப் பொருளியலின் தோற்றம்

பொருளியல் கோட்பாட்டிலிருந்து (Economic Thought), நலப் பொருளியலைத் (Welfare Economics) தனியாகப் பிரித்து ஒரு தனித் துறையாக உருவாக்கிய பெருமை ஏ. சி. பிகோ (A. C. Pigou) என்பாரைச் சாரும். அவர் எழுதிய 'செல்வமும் நலமும்' (Wealth

[3] Benham, F. C: 'Economic Welfare' Economica, June, 1930, p. 173.

and Welfare) என்ற நூல் பின்பு 'நலப் பொருளியல்' (Economics of Welfare) என்னும் நூலாகப் பல பதிப்புகளாக வெளிவந்தது. நலப் பொருளியல் என்னும் தனித்துறை உருவாவதற்கு அது வழி வகுத்தது. 'பிகோவுக்கு முன்னர், மகிழ்வுப் பொருளியலும் (Happiness Economics) அதற்கு முன்னர்ச் செல்வப் பொருளிய லுமே (Wealth Economics) புழங்கி வந்தன. நலப் பொருளியலைத் தோற்றுவித்தவர் பிகோவே யாவார்'. உண்மையில், நலப் பொரு ளியலில் அடங்கக் கூடிய பல கருத்துகளை ஆங்கிலத் தொன்மைப் பொருளியல் வாதிகள் (Classical economists) கூறிச் சென்றிருக் கிறார்கள். தத்துவஞானிகள் (Philosophers), இறைமை நூலார் (Theologians), பிரசார எழுத்தாளர்கள் (Pamphleteers), சீர் திருத்தவாதிகள் ஆகியோரின் எழுத்துகளில் எல்லாம் நலப் பொருளியலின் வித்துகள் காணப்படுகின்றன. 'சமுதாயக் கொள்கை, சமுதாய நலம் ஆகியவைகளின் சிக்கல்களில் பொரு ளியல் எப்பொழுதுமே கவனம் செலுத்தி வந்திருக்கிறது.'[4] 'கோளங் களில் சுழற்சியை ஒழுங்குபடுத்தும் விதிகளைக் கண்டுபிடிப்பதற்கு ஒத்திசைக் கோட்பாடு (Doctrine of Harmony), கெப்லருக்குத் (Kepler) தூண்டுதலாக அமைந்தது போன்று'[5] பொருளியல் விதி களை (Economic Laws) வகுப்பதற்கு ஏற்ற வகையில் சமுதாயத்தில் ஒத்த நலன்கள் (Harmony of Interests) நிலவி வருகின்றன என் னும் தத்துவம் ஆரம்ப காலப் பொருளியல் அறிஞர்களுக்குத் தூண்டுதலாக இருந்தது. இத்தகைய செல்வாக்கினை - இயற்கை விதியை (Natural Law) வகுத்த தத்துவஞானிகள் முதல் பயன் பாட்டுக் கொள்கை வாதிகள் (Utilitarian), தொன்மைப் பொரு ளியல் வாதிகள் வாயிலாக லிந்தால் (Linthal), பான்வீசர் (Von-weiser), ஃபிஷர் (Fisher) போன்றவர்களின் புதிய சம்பிரதாயப் பொருளியல் நூல்கள் வரையிலும் அனைவருடைய எழுத்துகளிலும் இயற்கை விதியை (Natural Law) வகுத்த தத்துவஞானிகளின் சிந்தனை ஓட்டத்தின் சாயலைக் காண முடிகின்றது. வாழ்க்கை வளத் துக்கு உத்தமச் சூழ்நிலை (optimal situation), அதாவது நிறைவுப் போட்டி மூலமாக நல்வாழ்வு (well-being) உருவாவதையே பொரு ளியல் நூல்கள் யாவும் வலியுறுத்துகின்றன'. தொன்மைப் பொரு ளியல் வாதிகளும் (Classicists), இயற்கை முறைக்கு ஏற்ற அரசாட்சி வேண்டுமெனக் கூறும் இயற்கைப் பொருளியல் வாதிகளும் (Physiocrats) இதையே வலியுறுத்துகிறார்கள். இத்தாலியில் 18ஆம்

[4] Samuelson, P. A: 'Foundation of Economic Analysis' (Harvard, 1947), p. 203.

[5] Streeten Paul: 'Appendix in Myrdal G. The political element in the Development of Economic Theory' (Second edition) (London, 1955) p. 208.

நூற்றாண்டில் வெளியான பெரும்பாலான பொருளியல் நூல்களின் தலைப்புப் பக்கங்களில் 'Felicitu Publica' என்பது இடம் பெற்றுள்ளது. ஜெரமி பெந்தாம் (Jeramy Bentham), மற்றும் ஜே. எஸ். மில் (J. S. Mill) போன்ற பயன்பாட்டுக் கொள்கைவாதிகள், நலப்பொருளியலை தங்களின் பொருளியல் கொள்கையின் இன்றியமையாக் கூறுபாடாகக்கொண்டிருந்தார்கள். பிகோ, மார்ஷல் ஆகியோரின் நூல்களை மேற்போக்காகப் பார்க்கும் பொழுது, தொடக்க கால எழுத்தாளர்களின் நூல்களில் காணப்பட்ட சில கருத்துகளுக்குப் புது மெருகேற்றி விரித்து விளக்கி, நலப்பொருளியலை உருவாக்கியிருக்கிறார்கள் என்பதை அறியலாம்.

இக்கால நலப் பொருளியல் புதிய வழிகளில் வளர்ந்துள்ளது. உற்பத்திக்கான செல்வாதாரங்களின் (Productive resources) ஒதுக்கீடு, பகிர்வு (Distribution) ஆகிய இரண்டினையும் புதிய சம்பிரதாயப்படி பகுப்பாய்வு செய்தலும், (Neo - classical analysis), நுண்ணினப் பகுப்பாய்வு (Micro-Analysis) செய்தலும் இன்றைய நலப் பொருளியலின் இரு பரிமாணங்களாகும். புதிய சம்பிரதாய காலத்தில் (Neo - classical period) பொருள்வளத் தன்மை விதியைப் (Rule of Scientific Materiality) புகுத்த நடந்த முயற்சியானது, சமூக மதிப்பு (Social Value) அல்லது 'பொருள் நலம்' (Economic Welfare) என்னும் துறையில் பெரும் சர்ச்சையை உண்டாக்கியது. நலப் பொருளியலானது, கொள்கைப் பரிந்துரைகளை (Policy-recommendations) உருவாக்குவதற்கு வழிவகுக்கும் வகையில் முன்னேற்றமடைந்து, அதே நேரத்தில், மதிப்புத் தீர்ப்புகள் (Value judgments) ஓரிரு முற்கோள்களால் (Presuppositions) மட்டுமே ஆனவை என்ற நிலைக்கும் குறைந்து விட்டது. இத்தகைய திருப்பம் ஏற்பட்டதற்கு அரசியல் பிரசாரகர்களே (Political Pamphleteers) காரணம் எனலாம். இதைத் தொடர்ந்து பொருளியல் நலக் கோட்பாடானது, கொள்கை வகுப்பதற்கேற்ற அரசியல் சார்பற்ற பொருளியல் தெளிவிலக்கணமாக (Non - Political criterion) உருப்பெறத் தொடங்கியது.

நலப்பொருளியலைத் தோற்றுவித்தவர் பிகோ அல்லர் என்றும், பாரிட்டோ, பாரோன் (Baro e), எட்ஜ்வொர்த் (Edgeworth) ஆகியோரே ஆவர் என்றும் இன்னொரு கருத்தும் நிலவுகிறது. இந்தச் சர்ச்சையில், 'புதிய நலப்பொருளியல்' (New Welfare Economics) என்று வழங்கப்பெறும் நவீன நலப்பொருளியல் சம்பிரதாய பிகோவியன் பொருளியலிருந்து, தனியாகப் பிரிக்கப்பட்டு இங்கு ஆராயப்படுகின்றது. புதிய நலப்பொருளியல் என்பது

பாரிட்டோவின் நலப்பொருளியலின் அடிப்படையில் முற்றிலும் மாறுபட்டு அமைந்துள்ளது. இனி, பிகோவியன் நலப்பொருளியல் பற்றிய பொருள் விளக்கங்களைச் சற்று விரிவாக ஆராய்வாம்.

## நலப் பொருளியல் என்ருல் என்ன ?

'நலம்' (Welfare) என்பது மிகவும் விரிந்த எல்லையையுடைய ஒன்று. எனவே, அதன் உள்ளடக்கம் பற்றி விரிவான விவாதத்தில் பிகோ இறங்கவில்லை. ஆனால், அவர் இரண்டு முற்கோள்களை வகுத்துக் கொண்டிருக்கிருர்: முதலாவது 'உணர்வின் நிலைகளும், அவற்றின் உறவுநிலைகளும் நலத்தின் அடிப்படைக் கூறுகள்' என்பது. இரண்டாவது, 'மிகுதி (Great), குறைவு (Less) என்னும் இருவகை இனத்தின்கீழ் நலத்தைக் கொண்டுவர முடியும்' என்பது. பிகோ சமீப காலத்தில் எழுதியுள்ள கட்டுரையொன்றில் இக் கருத்தை இன்னும் விரிவாக விளக்கிக் கூறியுள்ளார். மனிதனின் வருவாய் அல்லது உடைமைகள் என்ற அளவையில் பொருள்வள நலத்தை இலேசாக மதிப்பிடுவது உண்மையான நலம் அன்று. பொருள்வள நலமானது நலத்திற்கு ஒரு வழிவகையாக இருக்கலாம். ஆனுல், பொருள்வளநலமும் நலமும் ஒன்றல்ல' நலத்தின் ஓர் அங்கம் என்றுகூடப் பொருள்வள நலத்தைக் கூற முடியாது' என்று விளக்கிய பிகோ, 'ஒரு மனிதனுடைய மேம்பட்ட மனநிலையையோ அதில் அடங்கியுள்ள மனநிறைவையோ நலம் குறிப்பதாகக் கொள்ள வேண்டும்' என்றும், 'ஒரு மனிதனின் பொருள்நலமானது அவனுடைய பயன்பாடுகளினுல் (Utilities) ஆனது'[6] என்றும் குறிப்பிட்டுள்ளார்.

பொருள் நலத்திற்கும், பொருள் சார்பற்ற நலத்திற்கும் (Non-Economic Welfare) இடைப்பட்ட வேறுபாடு தெளிவாக இல்லை. அறிஞர் கானன் இவ் வேறுபாட்டைத் தெளிவுபடுத்த ஓரளவு முயன்ருர். 'செல்வத்தைப் பொருள்வள நலமென்று ஒருவாறு சொல்லலாம். 'பொருள்வளம்' (Material) என்ற சொல்லின் பொருள் படிப்படியாகப் 'பொருள் வளமில்லாதவற்றைக் (Non-Material) குறிப்பதாகவும் ஆகிவிடுகிறது. ஆனுல், இந்நிலை பொருள்வள நலத்தின் காரணங்களை ஆராய்வதற்கு வசதியாக அதை ஒரு தனித்துறையாக ஆக்கிக்கொள்வதற்குத் தடையாக இருக்கவில்லை.'[7]

[6] Pigou. A. C.: 'Some Aspects of Economic welfare', American Economic Review, June. 1951, pp. 288-289.

[7] Cannan, E: 'Wealth A Brief Explanation of the causes of Economic Welfare' (London, 1924 Reprint, 1943), p. xiii.

பொருள் நலத்திற்கும், பொருள் சார்பற்ற நலத்திற்கு மிடையே வேறுபாடு காண்பதில் உண்டாகும் இச் சங்கடத்தைத் தீர்ப்பதற்காக அறிஞர் ராபர்ட்சன் பொருள் நலத்தைக் குறிப்பிடுவதற்கு 'Ecfare' என்னும் ஒரு புதிய சொல்லை உருவாக்கிக் கொண்டார். இவ்வாறு வேறுபாடு காணும் முயற்சியை ராபின்ஸ் வன்மையாகக் கண்டிப்பதையும் பொருட்படுத்தாமல், 'என்னால் முடிந்தால் இந்த வேறுபாட்டை நிலைபெறச் செய்வேன்' என்று ராபர்ட்சன் உறுதியாகக் கூறுகின்றார்.

'முழுமையான நலத்தின் ஒரு பகுதியே பொருள் நலம்' என்ற பிகோவின் கருத்தும் மிகுந்த கண்டனத்திற் குள்ளாகியுள்ளது. பொதுநலத்தின் ஒரு பகுதியாகப் பொருள்நலத்தைக் கருதுவது 'தவறான கொள்கை' ஆகும். நலம் என்பது பல இயல்புகள் ஒருங்கிணைந்த (Harmonious) ஒன்றாகும். நலம்பற்றிய பொதுவான கொள்கையிலிருந்து பிகோ தமது கோட்பாட்டைத் தொடங்குகிறார். 'நியாய உணர்வுடைய எவரும் மதிப்புடையதெனக் கருதும் எல்லாவற்றையும் ஒருங்கிணைத்துத் தன்னுள் கொண்டது'* நலம் என்னும் கருத்துக்கு நேரடியாக உட்பொருள் கொடுப்பதற்குப் பதிலாக, அவ்வப்போது ஏற்றத் தாழ்வுகளுக்கு உட்படக்கூடிய தேசிய வருமானத் தொகையின் (National Dividend) நலத்தைக் காட்டும் குறியீடாகப் பிகோ கொள்கின்றார். இன்னும் துல்லியமாகச் சொல்லவேண்டுமானால் தேசிய வருமானத் தொகையின் அளவு (Volume), பகிர்வு (Distribution), மாறுந்தன்மை (Variability) ஆகிய முப்பரிமாணங் களையுடையதாக பிகோ தமது பொருள்நலக் கோட்பாட்டை வகுத்துள்ளார். மாறுந்தன்மை என்னும் மூன்றாவது பரிமாணத்தை 1912 முதல் 1924 வரை ஒரு குறுகிய காலத்திற்கே பிகோ தம் கோட்பாட்டின் ஒரு கூறாகக் கொண்டிருந்தார். அதற்குப்பின், அவர் அதைப் புறக்கணித்துவிட்டார்.

மொத்தத்தில், வருமானத்தை நிபந்தனை ஏதுமின்றி நலத்துக்கு ஒப்பாகக் கருதும் போக்கு தவறானது என்றே சொல்ல வேண்டும். முதலாவதாக, அவை ஒன்றுக்கு ஒன்று மாற்றுகளா (Alternatives) என்றறிவது மிக முக்கியம். இரண்டாவதாக, மாறும் சுவைகளைக் (tastes) கருத்தில் கொண்டாலும், மாற்றுகளுக்கிடையில் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதைத் தவிர வேறு வழியே இல்லை. இந்த வேறுபாட்டின் தன்மைகள்

* Hicks, J. R. 'Essays in World Economics' (London 1959), p. ix.

இந்நூலில் நலத்தின் அளவை (Measurement of Welfare) பற்றிய பிற்பக்கங்களில் காணும் விவாதத்தில் விரிவாக ஆராயப்பட்டிருக்கின்றன.

## நலப் பொருளியல் கோட்பாடு

ஓர் உன்னதமான பொருளாதாரச் சமுதாயத்தில் (Ideal Economic Society) செல்வாதாரங்களின் உத்தமப்பங்கீடு (Optimum allocation of resources) எதிர்பார்க்கப்படுகிறது. ஆனால், நடைமுறை உலகில், பல்வேறு காரணங்களால் இத்தகைய உன்னதமான செல்வாதாரப் பங்கீடு நிகழ்வது இயலாத காரியம். உத்தம செல்வாதாரப் பங்கீட்டை நடைமுறையில் கொணர்வதற்குத் தனி நபர்களின் செயலினால் இயலாது எனத் தெரிய வருமானால், அப்போது அரசு தலையிடுவதற்குத் தெளிவான காரணம் உண்டாகி விடுகின்றது. இவற்றையெல்லாம் ஆராய்வது பொருளியல் ஒழுங்குமுறையின் (Economic Discipline) ஒரு பெரும் பிரிவாக அமைகிறது. இப் பிரிவே நலப்பொருளியல் ஆகும்.

அறிஞர் பிகோ 'நலப்பொருளியல்' (Economics of Welfare) என்னும் தமது நூலில், பொருளியலைப் பொருள்நலம் பற்றிய ஆராய்ச்சி என்று கொண்டே ஆராய்ந்துள்ளார் என்பது, அவர் தம்முடைய பொருள் விளக்கத்தை விடுத்து மார்ஷலின் பொருள் விளக்கத்தையே பின்பற்றியுள்ளதிலிருந்து தெரிகின்றது. 'பொருள் நலம் என்பது, பணம் என்னும் அளவுகோலுடன் தொடர்பு உண்டாக்கக் கூடிய சமூக நலத்தின் (Social Welfare) ஓர் அங்கமே' என்று அவர் விளக்குகிறார். எனினும், பணத்தின் அடிப்படையிலான இந்த அளவுகோலைத் தமது பிந்திய பொருள் விளக்கத்தில் அவர் வலியுறுத்தவில்லை. எனினும், நலத்தின் அளபுடைத் தன்மையை (Cardinality of Welfare) வலியுறுத்துவதை அவர் கைவிடவில்லை. 'உலகின் அல்லது ஒரு குறிப்பிட்ட நாட்டின் பொருள் நலத்தைப் பெருக்குவதற்கு முக்கிய காரணமாக விளங்கும் அம்சங்கள் பற்றி ஆராய்வது நலப் பொருளியலின் நோக்கமாகும்... அதாவது, வாழ்க்கையின் பொருளியல் அம்சங்களுடன் தொடர்புடைய நலத்தை மட்டுமே[9] நாம் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்கிறோம்' என்று பிகோ குறிப்பிடுகிறார். மிகுதி அல்லது குறைவு (Greater or less) ஏற்றம் அல்லது தாழ்வு ஆகியவை பற்றிய கோட்பாடுகளை முறையாகப் பயன்படுத்தி இந்த அம்சங்களை ஆராய இயலுமா? இயலாதா? என்பதை நாம் உணர்ந்துகொள்ள வேண்டும். அவ்வாறு இயலாதெனில்,

[9] Pigou, A. C: 'Economics of Welfare' (London, 1932), p. 11.

நலப் பொருளியல், அதன் ஒவ்வொரு பகுதியும், ஒவ்வொரு அம்சமும், அடையாளங்கூட இல்லாமல் அடியோடு அழிந்து போய்விடும்[10] என்பது அவரது கருத்து.

மார்ஷல் தம்முடைய விளக்கத்தில் நலத்தின் அளவையை வலியுறுத்தவில்லை. மாறாக, செயலுக்கான தூண்டுதல்களை (Motives) உண்டாக்கும் சக்தியின் அளவையை அவர் வலியுறுத்துகின்றார். 'பொருளியல் அறிஞர்கள் பயன்படுத்தும் அளவு கோலானது குறைபாடுடையதாக இருப்பதன் காரணமாகவே பொருள் நலம், பொருள் சார்பற்ற நலம் என்னும் பாகுபாடு உண்டாகியுள்ளதேயன்றி, முன்னதாகக் கொண்ட எண்ணம் (Preconception) காரணமன்று என்ற மார்ஷலின் கருத்து பிகோவின் கருத்துக்கு மாறாக இருக்கின்றது.'

நலப்பொருளியல் கோட்பாடு குறித்து முறையான ஆய்வை முதன்முதலில் தொடங்கியவர் பிகோவேயாவார். 'நவீன சமுதாயங்களில் நடைமுறையில் பொருள் நலத்தைப் பாதிக்கக் கூடிய முக்கியமான காரணங்களை வகைப்படுத்திக் கூறியவரும் அவரே யாவார். ஆயினும், புதிய நலப் பொருளியல் (New Welfare Economics) என்னும் பெயரில் பொருளியல் அறிஞர்கள் பலரும் எழுதியுள்ளனர். அவர்களுள் பலர், பிகோவியன் மாதிரியிலான நலப் பொருளியலை எதிர்க்கிறார்கள். அதற்கேற்றவாறு அவர்கள் நலப் பொருளியலுக்கு வேறுவகையான விளக்கம் கூறிக்கொண்டும், தங்களுடைய கருத்துகள் பிகோவின் எழுத்துகளில் வேறுன்றியவை அல்ல என்றும் கூறுகின்றார்கள்.

எந்த ஒரு பொருள் விளக்கத்திலும் நுதல்பொருளும் (Subject matter), முறைமையும் (Method) முக்கியமாக அமைந்திருக்க வேண்டிய இரு அம்சங்களாகும். நலப் பொருளியல் பற்றிய பொருள் விளக்கத்தைப் பொறுத்தவரையில், வரலாற்று முறைப்படி, நுதல்பொருள் என்னும் முதல் அம்சத்திலிருந்து முறைமை யென்ற இரண்டாவது அம்சத்திற்கு உரிய முக்கியத்துவம் இடம் மாறிவிட்டது என்பதை நலப்பொருளியல் பற்றிய பிற்கால விளக்கங்களிலிருந்து தெளிவாக அறியலாம்.

புதிய நலப் பொருளியல் (New Welfare Economics) பற்றி எண்ணற்ற நூல்கள் பெருகியுள்ள போதிலும், அதன் பொருள் விளக்கம் இன்னும் ஐயத்திற் கிடமின்றித் தெளிவு பெறவில்லை. இந்த நவீனக் கருத்து வளர்ச்சியானது பாரிட்டோவின் கொள்கை

[10] Pigou, A.C: 'Some Aspects of Welfare Economics' American Economics Review, June, 1951, p. 288.

அடிப்படையில் ஏற்பட்டுள்ள போதிலும், நலப் பொருளியலுக்குப் பொருத்தமான பொருள் விளக்கத்தை இன்னும் காண இயலவில்லை. பொருளியலை விளக்குவது எவ்வளவு கடினமோ, அதைவிட நலப் பொருளியலின் எல்லைகளை வரையறுப்பதும் கடினமாகத் தோன்றுகிறது. அடிப்படைக் கொள்கை, தரமதிப்பீடு (Standard of Judgment) பற்றிய விவாதங்களைப் பொருளியல் கொள்கை குறித்த விவாதங்கள் எழுப்பும் என்று வலியுறுத்தப் பட்ட போதிலும், அதை உத்தமச் சமூக நிலைமைகளுக்கான (Condition for social optimum) சூழ்நிலை பற்றிய மிக நுட்பமான விவாதம் என்று வரையறுத்துக் கூறலாம். இதைப் பின்வரும் இரு விளக்கங்களும் உறுதிப்படுத்துகின்றன. 'பொருளியல் கொள்கைகளுக்கான ஒழுங்குமுறையினை (property) வரையறுத்து, அதனைப் பயன்படுத்துவதற்குரிய வழிவகைகளை வகுக்க முயல்கின்ற பொருளியல் விஞ்ஞானத்தின் (Economic Science) ஒரு பிரிவே நலப் பொருளியல்'[11] என்பது எம். டபுள்யூ. ரெடர் (M. W. Reder) என்பவருடைய விளக்கம். எந்த ஒரு பொருளியல் கொள்கையாயினும், அது பொருளியல் அடிப்படையில் தரமானதா (sound), அல்லது தரமற்றதா (unsound) என்று பொருளியல் அறிஞர்களால் நிர்ணயிப்பதற்குரிய தெளிவான விதிமுறைகளை வகுக்க வேண்டிய அவசியத்தை இன்று வளர்ந்துவரும் விஞ்ஞானமுறைத் தராதரங்கள் (scientific standards) உண்டாக்கிவிட்டன.

நலப் பொருளியல் பற்றிய பொருள் விளக்கம் பல்வேறு தன்மையுடையதாக இருக்கிறது என்பதை மேலும் இரு விளக்கங்கள் உறுதிப்படுத்துகின்றன. ஐ. எம். டி. லிட்டில் (I. M. D. Little) என்பவர் பொருளியல் முறையின் ஓர் அமைப்பானது இன்னோர் அமைப்பைவிடச் சிறந்ததா, மோசமானதா என்றும், ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு மாற்றம் தேவைதானா என்றும் ஆராய்வதே நலப் பொருளியல்[12] என்று கருதுகிறார். 'நலப்பொருளியலானது எதிர்கால மாறுதல்களை மட்டும் ஆராய்வதன்று; ஏற்கெனவே ஏற்பட்டுள்ள மாறுதல்களினால் உண்டான விளைவுகளையும் ஆராய்வதாகும்' என்பதும் அவருடைய கருத்தாகும். இதற்கு மாறான விளக்கத்தை ஜே. எம். கிளார்க் (J. M. Clark) கூறுகிறார். 'பொருளியல் முறையானது, மக்களின் நலனுக்கு எந்தெந்த வழிகளில் சேவை செய்கிறது அல்லது ஊறு செய்கிறது என்பதை ஆராய்வதே நலப்பொருளியல். இவ்வாராய்ச்

11 Reder, M. W: 'Studies in the theo y of Welfare Economics (New york, 1947). p. 18.

Little, I. M. D: 'A critique of Welfare Economics' (Second Edition, Oxf rd, 1957).

சிக்கு விஞ்ஞானத் தராதரங்களைப் பயன்படுத்துவதற்கு முக்கியத்துவம் கொடுப்பதே நவீன மாதிரியாகும்' என்கிறார் அவர். 'திட்டமிட்டு மேற்கொள்ளப்படும் முயற்சியினால் ஏற்படும் விளைவுகள் எனக் கூறத்தகுந்த தனிப்பட்ட அல்லது சமூக நல அம்சங்களே நலப் பொருளியலுக்குரிய நுதல்பொருளாகும்' என்பது மற்றொரு விளக்கம். இவ்வாறாக, நலப்பொருளியல் என்னும் சொல்லானது அண்மைக் காலமாக வரையறையின்றிப் பயன்படுத்தப்படுகிறது. அதே சமயத்தில், பொருளியலில் நலப்பொருளியல் என்னும் சொல் துல்லியமான பொருள் வரையறை எதையும் கொண்டிருக்கவில்லை என்ற போதிலும், போதிய அளவு பொருள் தழுவிய பயனுள்ள ஒரு கலைச்சொல்லாக அமைந்துள்ளது எனலாம்.

## நலப் பொருளியலின் பண்புக் கூறுகள்

பொருள் நலத்தை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒன்று உற்பத்தி பற்றியது; இரண்டாவது பகிர்வு பற்றியது. முதல் பிரிவு பெரும்பாலும் ஆக்கப் பொருளியல் தத்துவங்களினால் (Principles of Possitive economics) இயங்குவது; சமூக நலத்தை மேம்படுத்தும் முற்கோள்கள் (Proposition) யாவும் இதில் அடங்கும். வேலை வாய்ப்பு அமைப்பு (Organisation of Employment) சமூகத்தின் நிகர உற்பத்திப் பொருள்களைச் சரிசமமாக்குதல் (Equalization of social net products), விலைவாசிகளின் போக்கை இறுதி அடக்க விலைக்குச் சமமாக நிலைநிறுத்துதல் ஆகியவை பற்றிய நடவடிக்கைகள் யாவும் முதல் பிரிவின்கீழ் அடங்கும். இப் பிரிவில் காணும் அம்சங்கள் யாவும் விஞ்ஞான முறையிலான புள்ளி விவரங்களின் அடிப்படையில் அமைந்தவை. எனவே, இவை பற்றிய முடிவுகள் மறுக்க முடியாதவை எனக் கோட்பாட்டுப் பொருளியல் அறிஞர்கள் (Theoritical economists) கருதுகிறார்கள். பகிர்வு பற்றிய பிரிவைப் பொறுத்த வரையில், எந்த ஒரு குறிப்பிட்ட வகை வருமானப் பகிர்வினால் கூடுதலான சமூக நலம் உண்டாகும் என்பதை முற்றிலும் பொருளியல் காரணங்களைக் கொண்டு தீர்மானிக்க இயலாது. எனவே, இதைப் பற்றிய விதியமைப்புகளை (Prescription) வகுப்பதில் அவ்வறிஞர்கள் கவனம் செலுத்தவில்லை.

இச் சங்கடத்தைச் சமாளிக்க பிகோ தமது பகுப்பாய்வில் மேற்கொள்ளும் முயற்சி பாராட்டத்தக்கதாக உள்ளது. தனிப்பட்டவர்களின் பொருள் நலன்களுக்கும், சமுதாயத்தின் பொருள் நலன்களுக்குமிடையே நிலவும் தொடர்பையும், தனிப்பட்டவர் தமது பொருள் நலனை மேம்படுத்துவதற்கு மேற்கொள்ளும் முயற்சியினால் எந்த அளவுக்குச் சமுதாயத்தின் பொருள் நலனில் மேம்பாடு ஏற்படும் என்பதையும் பிகோ முக்கியமாக ஆராய்கின்றார். இது

'இருப்பதையும்', 'பற்றாக்குறையையும்' ஆராய்வதாகும். 'இச் சிக்கல், கோட்பாடு பற்றியது என்பதும், அதே சமயம் தூய்மை (pure) யானது என்பதும் தெளிவு'.[13]

பிகோவின் நலப்பொருளியலில், நலப்பொருளியலின் இரு பரிமாணங்களை - அதாவது உற்பத்தித்திறன், பகிர்வு ஆகிய இரண்டைப் பற்றி ஓரளவு கண்டோம்.

இதே கோட்பாடுகளிலிருந்தே புதிய நலப் பொருளியலும் தொடங்குகிறது. மற்ற எப்பொருளின் உற்பத்தியும் குறையாமல் (குறைந்தது) வேறொரு பொருளைக் கூடுதலாக உற்பத்தி செய்வதும், அந்த உற்பத்தித் 'தரம் மிக்கது' (efficient) என்று கொள்ளலாம். அதுபோலச் செல்வாதாரங்களை மறு ஒதுக்கீடு செய்யும் பகிர்வுத்துறையில், இப்பொழுதுள்ள உற்பத்திப் பொருள் களைச், சமூக உறுப்பினர்களிடையே பகிர்ந்தளித்து, வேறு எவருடைய நிலையும் மோசமாகாமல், ஒருவருடைய நிலையை உயர்த்த இயலுமானல், அதைத் தரம் மிக்க (efficient) பகிர்வு என்பர். இந் நிலையைத்தான், நலத்தை உச்சநிலைக்கு உயர்த்தக் கூடிய உத்தம நிலை (Optimum position) எனக் குறிப்பிடுவார்கள். மேற்கூறியது புதிய நலப் பொருளியல் சிந்தனையின் போக்காகும். உச்ச நலம் (Maximum welfare) அல்லது உத்தம நலம் (Optimum welfare) என்னும் ஒரே நோக்கத்தை ஒரு சாரார் கண்டிக்கிறார்கள். 'இது ஒருபொருள் அல்லது இருபொருள் கோட்பாட்டுக்கு வழிசெய்கிறது. தேசிய வருமானத்தின் அளவு, பகிர்வு ஆகிய இரண்டும் ஐயத்திற்கிடமான இரு தனி அடிப்படைகளின்மேல் எழுப்பப்பட்ட உச்ச நலத்தை உயர்தனிக் குறிக்கோளாகக் கொண்டது'[14] என்று இவர்கள் தங்கள் கண்டனத்திற்குக் காரணம் கூறுகிறார்கள்.

## நலப் பொருளியலின் முக்கியத்துவம்

இனி, நலப்பொருளியலின் முக்கியத்துவம் குறித்தும், அதன் செயல் எல்லை பற்றியும் சற்று ஆராயலாம். 'பொருளியல் குறிக்கோள்களை ஈடேற்றுவதற்கான சாதனங்களைக் கண்டுபிடிப்பதற்கான வாய்ப்பினைப் பொருளியல் நல்குகிறது; இவ் வாய்ப்பு, இதுவரை அறியப்பட்டுள்ளவற்றைவிட மிகவும் பயனுடையது. இந்த ஆய்வுப் பொருளின் குறிக்கோளும் காரணமும் அதன்

13 Fraser, L. M: 'Economic Thought of Language' (London, 1947), p. 40.
14 Hutchison, T. W: 'Positive Economics and Policy Objectives' (London, 1964), p 159.

வடிவமாக அமைந்துள்ளன. அதேபோன்று, அதன் செயல் எல்லையைக் கட்டுப்படுத்துவனவும் அவையே. 'நலத்தை மேம்படுத்து வதற்குரிய எளிய நடைமுறை சாத்தியமான நடவடிக்கைகளை உருவாக்குவதே நலப்பொருளியலின் குறிக்கோள்' என்று பிகோ கருதுகின்றார். இக் குறிக்கோளைக் கருத்தில் கொண்டால், நலத் திற்கான காரணங்களை ஆராய்வதே நலப்பொருளியல் அறிஞர் பணியாக அமையும். 'மனிதரின் மகிழ்ச்சியை மேம்படுத்துபவை எவை? மனிதரின் மகிழ்ச்சிக்கு ஊறு செய்பவை யாவை? மக்களின் தேவைகள் எவை? அத் தேவைகளை எந்த அளவுக்கு நிறைவு செய்ய இயலும், எந்தெந்தத் தேவைகள் நிறைவுறாமல் இருக்கின்றன, நிறைவுறாத தேவைகளை எந்த அளவுக்குக் குறைக்க முடியும்?[16]' என்ற முக்கியமான கேள்விகள் எழுகின்றன. சுருங்கச் சொல்லின், சிறந்த நடவடிக்கைகளைக் கண்டுபிடிப்பதற்காகவும், அதற்குரிய பரிந்துரைகளைச் செய்வதற்காகவும் நலப் பொருளியல் பெரும் பாலும் ஆராயப்படுகிறது எனலாம்.

நலப் பொருளியலின் இத்தகைய விதியமைக்கும் பண்பின் விளைவாகப் பொருளியல் நிகழ்ச்சிகளும், கொள்கைகளும், 'பொரு ளியல் முறைப்படி விரும்பத் தக்கவைதாமா? எனத் தீர்மானிப் பதற்கு உதவக்கூடிய தராதரங்களை வகுப்பதற்குமுடிகிறது. அதன் மூலமாக, 'அறவியல் பண்பும்' (Ethical force) நிலைநாட்டப்படு கின்றது. எனினும், பெரும்பான்மையோரால் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ள, அல்லது, மெய்ம்மை விஞ்ஞானத்தின் (Science of what is) ஒரு பகுதியாக விளங்கும் மதிப்புத் தீர்ப்புகளுக்கு (Value judgments) உட்பட்ட நிலையிலேயே நலப் பொருளியல் தனது பணிகளை நிறைவேற்றியாக வேண்டும். அறிஞர் கிராஃப் (Graaff) எழுதியுள்ளதுபோல், புதிய நலப் பொருளியலின் குறிக் கோளிலும் செயல் எல்லையிலும் எத்தகைய அடிப்படை மாறுதலையும் காண முடியவில்லை. 'பொதுவான வாத முற்கோள்கள் (premises), அதாவது பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்ட வாத முற்கோளி லிருந்து பகுத்தறியக்கூடிய குறிப்பிட்ட தடைகளை (Injunction) உணர்ந்தறிவதே கோட்பாட்டு நலப் பொருளியலின் நோக்க மாகும்' என்று கிராஃப் கூறுகின்றார். நலப் பொருளியலின் இந்த மூல முயற்சியின் அடிப்படையிலேயே பரவலாக ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ள மதிப்புவாத முற்கோள்களிலிருந்து கோட்பாட்டு விளக் கங்கள் (Theoretical exposition) கூறப்படுகின்றன. ஆனால் விஞ்ஞானத் தகுதியை (Scientific status) நிலைநாட்ட மேற்

16 Rada Myster, A: 'Welfare Economics and Economic Policy' Economica, August, 1949, p. 202.

கொள்ளும் முயற்சியானது, கொள்கைகள் பற்றிய விவாதத்தில் குழப்பத்தை உண்டாக்கியுள்ளது. நலப் பொருளியலின் வரை முறைகளுக்கும் (Methodology welfare economics) பொறுத்த நுகர்வோர் நடத்தைக் கோட்பாட்டுக்கும் (Theory of consumer behaviour) ஒற்றுமை காணப்படுகின்றது. இவை இரண்டும் பொதுவான பயன்பாட்டுச் சிந்தனையிலிருந்து தோன்றியமையால், பொதுவான அம்சங்களை உடையனவாகவும் அமைந்துள்ளன. இரண்டும், மிக விரிவான பொதுமைகளிலிருந்து (Generalisations) பகுத்தறியப்படுபவை; ஆனால், ஒன்று ஆக்க பூர்வமானது (positive); மற்றொன்று தரஞ்சூழ்ந்தது (Normative). இரண்டும் தர்க்கக் கணிதப் பகுத்தாய்வின் மூலம் முடிவுகளைக் காண முயல்வது.

நலப் பொருளியல் இவ்வாறு பல வரையறைகளுக்குட்பட்டதாக இருந்தபோதிலும், இன்றியமையாத சிக்கல்களுக்கு 'ஓரளவேனும் தீர்வு' காண அது உதவுகின்றது. முக்கியமற்ற சிக்கல்களுக்கு முழுத் தீர்வு காண்பதற்கு உதவி புரிவதைப் போலவே, முக்கியமான சிக்கல்களுக்கு ஓரளவு தீர்வு காணத் துணை செய்வதும் முக்கியமானதாகும். மேலும், முன்னணி அறிவுக் கருத்துப் பொருள் (propaedeutic abstraction) மாத்திரமாகக்கூட, நலப் பகுப்பாய்வு ஓரளவு பயன் தருவதாகும் என்பதை மறுக்க இயலாது. நலப் பொருளியல் ஆதரவாளர்கள் பொருளியல் நிகழ்ச்சிகளை நலப் பகுப்பாய்வின் மூலம் ஊகித்தறிய முயல்கிறார்கள்; பொருளியல் நிலைமைகளும் கொள்கைகளும் சிறந்தவையா, மோசமானவையா என்றும், அவை பொருளியல் முறைப்படி விரும்பத்தக்கனவா, ஒதுக்கத் தக்கனவா என்றும் நலப் பகுப்பாய்வின் மூலம் தீர்மானிக்க இயலும். இந்த வாதத்தைத்தான் ஒரு சாரார் மறுக்கிறார்கள். நலப் பகுப்பாய்வின் மூலம் உருவாகும் மதிப்புத் தீர்ப்புகள் (value judgments) உறுதியற்றவை என்று அவ்வெதிர்ப்பாளர்களின் கருத்து. நடைமுறைப் பயன்பாட்டைப் பொறுத்த வரையில், நலப் பொருளியல் வாதிகளின் செயல்முறைகள் அவ்வளவாக மனநிறைவளிப்பதாக இல்லை. இக்கருத்தை லைபன் ஸ்டீன் என்பார் உறுதிப் படுத்துகின்றார். அவர், 'பொருளியல் கொள்கைகளின் தேர்வுக்குரிய சிந்தனைக் கருவிகளுள் ஒன்றே நலப் பொருளியல் ஆகும். சமுதாயத்தின் பொருளியல் வாழ்க்கையில் ஜனநாயக அரசுகள் பெருமளவில் தலையிட்டு வரும் இந்நாளில், இக்குறிப்பிட்ட கருவி அநேகமாகப் பயனற்றுப் போய்விட்டது'[16] என்று குறிப்பிடுகின்றார்.

16 Leibenstein, H., 'Notes on Welfare Economics and the theory of Democracy' Economic Journal, June, 1962, p. 299.

இதுகாறும், நலப் பொருளியலின் தோற்றம், நுதல்பொருள் அப் பொருளின் முக்கியத்துவம் ஆகியவை பற்றி ஆராய்ந்தோம். இனி, நலப் பொருளியலின் மையக் கருத்துப்பற்றிக் கூறப்படும் சில குறைபாடுகள் குறித்தும், பொருளியல் கோட்பாட்டின் மையக் கருத்துப்பற்றித் தெரிவிக்கப்படும் ஐயங்கள் பற்றியும் இங்கு சிறிது ஆராயலாம். நிறைவு, மகிழ்ச்சி, பயன்பாடு மற்றும் இவை போன்ற உள்ளத் தொடர்புடைய நிகழ்ச்சிகள் ஆகிய அறவியல் கொள்கைகளைப் பெரிதும் தழுவியதாக நலப் பொருளியல் அமைந்துள்ளது என்பது முதலாவது குறைபாடு. பெந்தாமின் தத்துவஞ் சார்ந்த விளக்கம், மார்ஷலின் நீதிநெறி சார்ந்த விளக்கம் ஆகியவற்றின் ஏற்றத் தாழ்வுகளை நோக்கும்போது, பொருள் நலத்தின் முன்னோடிகளாகக் கருதப்படும் மகிழ்ச்சி, நிறைவு, பயன்பாடு ஆகியவற்றிலிருந்து பொருள் நலத்தை எவ்வாறு வேறுபடுத்தலாம் என்று கூறுவது எளிதானதன்று. அறநெறி அடிப்படையிலான மேம்பாட்டுக்குரிய பண்பைப் பொருள் நலம் பெற்றிருப்பதால், ஆக்க விஞ்ஞானத்தில் இடம் பெறுதற்குரிய தகுதியைப் பொருள் நலம் உடையதாயிருக்கிறது என்று மட்டும் கூறலாம். 'பொருள் நலம்' என்பது ஒரு புதுமையான சொல் என்னும் ஒன்றைத் தவிர, பொருளியல் பகுப்பாய்வுகளில் இச்சொல்லைப் புகுத்தும் அளவிற்கு அதில் முக்கியத்துவம் ஏதுமில்லை' என்று சொல்லி ஹட்சிசன் பொருள் நலத்தையே ஒதுக்கித் தள்ளிவிடுகின்றார்.

நலப் பொருளியல் பற்றி லயோனல் ராபின்ஸ் கூறும் கண்டனம் முக்கியமான ஒன்றாகும். அவர் நலப் பொருளியலுக்குக் கூறப்படும் பொருள்வளச் சார்பான பொருள் விளக்கத்தை (Material stic definition) ஏற்க மறுக்கிறார். 'இறுதி விளைவுகளைப் பற்றிக் கவலைப்படுவது பொருளியல் அறிஞரின் வேலையன்று: குறிக்கோள்களை அடைவதற்கான வரையறுத்த வசதிகள் குறித்துக் கவனம் செலுத்துவதே பொருளியல் வல்லுநரின் வேலை' என்கிறார் அவர். இறுதி விளைவுகள் பொருள் வளச் சார்புற்றதாகவோ, பொருள் வளச் சார்பற்றதாகவோ இருக்கலாம். ஒருவகையான குறிக்கோள்களையடைவதற்கு இன்னொரு வகைக் குறிக்கோளைத் தியாகம் செய்ய வேண்டிய நிலை ஏற்படுமானால், அப்போது அதில் பொருளியல் அம்சம் அடங்கியுள்ளதாகக் கூறவேண்டும். 'எனவே, பொருள்வள நலத்தின் (Material welfare) காரணங்களை ஆராய்தலே பொருளியல் எனக் கூறுவது தவறானதல்லவா? பொருளியல் எதைப் பற்றிய ஆராய்ச்சியாக இருப்பினும், பொருள்வள நலம் பற்றிய காரணங்களுக்கும் பொருளியலுக்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லை'. இந்தப் பொருள்நலம் அல்லது நிறைவினை பொருளியல் நடவடிக்கையின் இறுதி விளைவாகக் (end product) கொள்ளலாமே

யன்றி, அந்நடவடிக்கையின் ஓர் அங்கமாகக் கூற இயலாது என்று அறிஞர்கள் விவாதிப்பதையும் ராபின்ஸ் கண்டிக்கிறார். பொருளியல் பகுப்பாய்வின் மையக் கருத்திற்கு முற்றிலும் மாறுபட்ட ஓர் பொருள் நிறைவு (Economic satisfaction) என்று அவர் கருதுகிறார். 'நமது பொருள் விளக்கத்திற்குப் பெரிதும் முரண்பட்டதாக இருப்பதால், அதைக் கருத்தில் கொள்ளாமல் அடியோடு ஒழித்துவிடுவதே நல்லது' என்கிறார் ராபின்ஸ். கடந்த காலத்தில், பொருளியலுக்குப் பொருள் வளச் சார்பான பொருள் விளக்கம் கூறப்பட்டிருப்பினும், பின்னர் அந்த விளக்கம் மாறுதலடைந்து, 'பற்றாக்குறைப்' (scarcity) பொருள் விளக்கமாக மாறிவிட்டது. பொருளியலின் உட்பொருளும் பொருள்வளச் சார்புடையது அன்று. பொருளியலின் பொருள்வளம் (Materialism) போலிப் பொருள் வளமாகும் (Pseudo-materialism) உண்மையில் அது பொருள் வளமே அன்று. எனினும், ராபின்ஸ் இவ்வாறு வன்மையாக மறுப்பது பொருளியலின் விளக்கத்தை மட்டுமேயாகும். 'அது விவரிக்கப் புகும் அறிவுத் துறையின் தன்மையினை' அவர் மறுக்கவில்லை.

இவ்வாறு, நலப் பொருளியலுக்கு எத்தனையோ எதிர்ப்புகளும், மறுப்புகளும் தெரிவிக்கப்பட்டபோதிலுங்கூட, இன்று பொருளியல் பகுப்பாய்வின் பெரும் பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டிருப்பது நலப் பொருளியலேயாகும்; நவீன பொருளியல் கோட்பாட்டின் வலுவான அரண்களில் ஒன்று நலப் பொருளியல் என்றுகூடக் கூறலாம். நலப்பொருளியல் பற்றிய பிகோவின் நூல் கேம்பிரிட்ஜில் வெளியான பின்னர், அப் பொருளியல் முறை எவ்வாறு செயல்படுகிறது என்பதை மட்டுமன்றிப் பொருள்வள மாறுதல்களினால் நலத்தில் உண்டாகும் விளைவுகளையும் விளக்கிக் கூற வேண்டியது தங்கள் கடமையெனப் பொருளியல் அறிஞர்கள் கருதி வருகின்றார்கள். 'பொருளியல் கோட்பாட்டின் பகுப்பாய்வுச் சாதனங்களின் துணையினால் அளவிடவும், கையாளவும் கூடிய சமூக விளைவுகளைப் பற்றியே நலப் பொருளியல் பெரும்பாலும் ஆராய்கிறது. விஞ்ஞானப் பகுப்பாய்வுக்குத் தகுதியற்றதாகக் கூறி அதை ஒதுக்கித் தள்ளுவதற்கு எவ்வளவுதான் முயற்சி மேற்கொண்டாலும், அது ஆராயும் பொருளானது மனித குலத்தின் நலன் பற்றியதாக இருப்பதால், அதை ஒதுக்கித் தள்ளும் முயற்சியெல்லாம் தோல்வியையே தழுவும்'.[17]

நலக் கோட்பாட்டிற்கு விஞ்ஞான முறையிலான விளக்கம் கொடுக்கும் வகையில், மதிப்புக் கோட்பாட்டுடன் (Value theory)

17 Goshen, G. J.: 'Ethics and Economics' Economic Journal Vol. 3, 1953, p. 379

நலக் கோட்பாட்டை ஒப்புமைப்படுத்தி ஃபிரேசர் (Fraser) கூறியுள்ள விளக்கமும் இங்கு ஆராயத் தக்கது. இவ்வொப்புமை மிகவும் நெருக்கமானது. 'தேர்வானது (Choice) பகுத்தறிவுக்குட்பட்டதாக இருக்க வேண்டும் என்ற முடிவிலிருந்து மதிப்புக் கோட்பாடு தனது முக்கியத்துவத்தைப் பெறுகின்றது. நலமானது உச்ச நிலைக்கு உயர்த்தப்படுதல் வேண்டும் என்னும் முடிவின் அடியாகப் பிறந்தது நலப் பொருளியல்.' பகுத்தறிவுக்குட்பட்ட தேர்வின் கோட்பாட்டு விளைவுகளை ஆராய்வது ஒன்று; மற்றொன்று, குறிப்பிட்ட செல்வாதாரங்களுக்குட்பட்டு நலத்தை உச்சநிலைக்கு மேம்படுத்துவதற்கான நிலைகளையும், அக் குறிக்கோளை அடைவதற்குச் சமூக அமைப்பு தோல்வியடைவதற்கான காரணங்களையும் ஆராய்வதாகும். எத்தகைய குறிப்பிட்ட நிலைமைகளில் உச்ச நலம் அடங்கியிருக்கிறது என்பதைத் தீர்மானிப்பது நலப் பொருளியல் அறிஞர்களுக்குக் கடினமான காரியமாக இருப்பது போலவே, எத்தகைய குறிப்பிட்ட நிலைமைகளில் பகுத்தறிவுக்குட்பட்ட தேர்வு அடங்கியுள்ளது என்பதை அறிந்துகொள்வதும் கடினமாக இருக்கிறது. எனவே, மதிப்புப் பொருளியல் (Value economics) எந்த அளவுக்கு விஞ்ஞான முறையில் அமைந்ததோ, அந்த அளவு நலப் பொருளியலும் விஞ்ஞான முறையில் அமைந்திருக்கிறது என்று சொல்வதற்கு ஆதாரம் உண்டு. இதற்கு மாறாகப் பொருளியலைப் பகுத்தாயும்பொழுது, அறவியலின் (Ethics) ஓர் கிளையே என்னும் கருத்தும் நிலவுகின்றது'. 'நலத்தின் பொருள், உள்ளடக்கம் பற்றிக் கணிசமான 'அளவு உடன்பாடான கருத்து உருவாகுவதைப் பொறுத்தே, எந்தப் பொருளியலும் மனித நலனுக்கு நடைமுறையில் வழிகாட்டுவதாக அமையமுடியும்''[18].

## புதிய சம்பிரதாயக் கொள்கையுடன் நலப் பொருளியலின் தொடர்பு

மார்ஷல் கோட்பாட்டின் தோற்றத்திற்குக் காரணமாக இருந்தவை பயன்பாட்டுத் தத்துவமும் இறுதிநிலைக் கொள்கையுமேயாகும் என்று கூறலாம். நவீனப் பயன்பாட்டுக் கோட்பாட்டு வாதத்தைச் சேர்ந்தவர் மார்ஷல் என்பது அறிஞர் ஷீம்பிட்டரின் (Sehumpeter) கருத்து. ஆனால், இறுதிநிலைப் பயன்பாட்டுக் கொள்கையை மார்ஷல் தன்னந்தனியாக உருவாக்கினார் என்று கெயின்ஸ் (Keynes) கூறுகின்றார். இக் கொள்கையை அடித்தளமாகக் கொண்டுதான் மார்ஷலின் கோட்பாடு அமைந்துள்ளது என்பதும் கெயின்ஸின் கருத்து. அடிப்படையில் பார்த்தால், பொருளியல்

[18] Wolfe, A. B: 'On the content of Welfare' American Economic Review, June, 1941, p. 221.

என்பது செல்வம்பற்றிய விஞ்ஞானம் (Science of Wealth); அந்த விஞ்ஞானமோ மனநிறைவின் (Satisfactions) அளவை அளவிடுதலேயாம்.

அறவியல் (Ethics) வாயிலாகவே மார்ஷல் பொருளியல் துறையினுள் நுழைந்தார். "மார்ஷலுக்கு முந்திய தலைமுறையைச் சார்ந்த பொருளியல் வாதிகளிடையே ஆதிக்கம் செலுத்திவந்த பயன்பாட்டுக் கொள்கைகளிலிருந்து மார்ஷல் ஒருபோதும் வெளிப்படையாக விலகிச் சென்றதில்லை" என்று கெயின்ஸ் தமது நினைவுக் குறிப்பில் (Memorium) குறிப்பிட்டுள்ளார். ஆனால், இப்பொருளினைக் கையாள்வதில் சிட்ஜ்விக்கை (Sidgwick) விடவும் மிகவும் எச்சரிக்கையுடன் மார்ஷல் நடந்துகொண்டிருக்கிறார் என்பது புலனாகிறது. ஏனெனில், அவர் தமது நூலில் எந்த ஒரு குறிப்பிட்ட அறிவியல் கோட்பாட்டுடனும், பொருளியல் ஆய்வுகளைப் பிணைத்துள்ளமைக்கான சான்றுகள் காணப்படவில்லை. தன்னல முனைவு நுண்கணிப்பைப் (Hedonistic calculus) பயன்படுத்துவதனால் பொருளியல் சிக்கலுக்குத் தீர்வு கண்டுவிட இயலாது; மாறாக, மனிதனுடைய உயர்தர வினைத்திறனின் மூலமாகவே அத் தீர்வினைக் காணமுடியும் என்பது அவர் கருத்து. நன்மையே செய்தல் வேண்டும் என்ற ஆர்வத்தில், மனித நலத்துடன், குறிப்பாகத் தொழிலாளர் வர்க்கம் போன்றோரின் நலத்துடன் நேரடியாகத் தொடர்பு கொண்டிராத அறிவார்ந்த பகுதிகளுக்குக் கூட (Intellectual values) அவர் மதிப்பளிக்க விரும்பவில்லை.

மார்ஷலின் பயன்பாட்டுப் பகுப்பாய்வின் பலனாக, நுகர்வில் நுகர்வோர் உபரி (Consumer's surplus), தேவைகளை நிறைவு செய்வதையே பொருளியல் பயனாகக் கொண்ட உற்பத்தியில் பயன்பாட்டிலிருந்து பெறுவதாகிய இறுதிநிலை உற்பத்தித் திறன் (Marginal Productivity) ஆகிய முக்கிய கோட்பாடுகளும் தோன்றின. இறுதியாக அவருடைய கோட்பாடு முழுவதையும் 'உச்ச அளவு மனநிறைவுக் கோட்பாடு' (Maximum Satisfaction Doctrine) என்று பொதுப்படையாகக் கூறிவிடலாம்.

உச்ச அளவு மனமகிழ்ச்சியை விரும்புகின்றவர் என்ற முறையில் அறிஞர் மில்லுடன் (Mill) மார்ஷலை ஒப்பிடலாம். கொடிய வறுமையினையும், இழிதொழில் செய்வதையும் அடியோடு ஒழிக்கவேண்டும் என்ற விருப்பம் இருவருக்கும் உண்டு. அதற்கு அவர்கள் கூறும் காரணங்களும் ஒரே மாதிரியானவை. எனினும் இருவருக்கும் ஒரு வேறுபாடு உண்டு. இந்த விருப்பத்தை நிறைவேற்றுவதை ஊக்குவிக்கும் சாதனமாக 'இன்பம்' (pleasure) அமையும் என்று மில் கருதினர்; ஆனால் மார்ஷல் அவ்வாறு கருத

வில்லை. "மற்றவர்கள் வகுத்த விதிமுறைகளை பெந்த்தாம் சீற்றத்தோடு வெறுத்தது போன்று, மார்ஷல் யாருடைய கருத்துகளையும் வெறுக்கவில்லை. எனினும் மொத்த மகிழ்ச்சியை ஆதரிக்க அவர் முயன்றார்.[1]" பணக்காரர்கள்மீது வரி விதிப்பதால் உண்டாகும் தீமையைவிட, ஏழை எளியோர்மீது வரி விதிப்பதால் ஏற்படும் தீங்கு மிக அதிகம்.

மார்ஷலின் தலைமையிலான புதிய சம்பிரதாயக் கோட்பாட்டு வாதிகள் தங்கள் கொள்கைகளைத் தமக்குமுன் வாழ்ந்த தொன்மைப் பொருளியல்வாதிகள் அமைத்த அடித்தளத்தின் மீதே உருவாக்கினார்கள். எனினும் தொன்மைப் பொருளியல் வாதிகளின் தன்னல முடிவு அணுகு நெறியைப் (Hedonistic approach) புதிய சம்பிரதாயவாதிகள் ஏற்றுக்கொள்ளவில்லை; தன்னல முடிவு அணுகுநெறி இன்றியே ஒருவகைக் கோட்பாட்டு முறையை உருவாக்க அவர்கள் முயன்றார்கள். தனிப்பட்டவர்களும், அரசினரும் மேற்கொள்ளும் நடவடிக்கைகளினால் தனி மனிதர்களுக்கு உண்டாகும் நலன்களையும் கொள்கை முடிவுகளையும் ஒப்பிட்டுப் பார்ப்பதற் குரிய வழிவகை ஒன்றைக் கண்டுபிடிப்பதற்கு மார்ஷல் முயன்றார். 'அறநெறி அளவுகோல்' (Moral thermometer) ஒன்றைக் காண்பதில் ஈடுபட்டிருந்த பெந்த்தாமின் நோக்கமும் இதுவாகவே இருந்தது. ஆனால் ஒரு வேறுபாடு. தன்னல முனைவு உட்பொருள்களை (Hedonistic implications) மிகுதியாக உடைய இன்பம் (pleasure), துன்பம் (pain), மகிழ்ச்சி (happiness) என்பன போன்ற சொற்களைப் பெந்தாம் மிகுதியாகக் கையாண்டார்; மார்ஷலோ அச்சொற்களை விடுத்துத் தன்னல முனைவு உட்பொருள் குறைவாக உடைய நலன் (benefit), பயன் என்பன போன்ற சொற்களையே பயன்படுத்தினார்.

மில்லின் தத்துவங்களின் மூலமாகவே பொருளியலுக்கு மார்ஷல் அறிமுகமானார் என்பதை முன்னரே குறிப்பிட்டோம். தொன்மைவாதக் கோட்பாட்டு மூவர்களாகிய ஆடம் ஸ்மித், மால்த்தஸ், ரிக்கார்டோ ஆகியோருக்கும், புதிய சம்பிரதாயவாதியாகிய மார்ஷலுக்குமிடையே ஒட்டுறவை உண்டாக்கியவர் மில்லே ஆவார். மில்லின் தத்துவத்தைத் தம்முடைய கோட்பாடுகளை நிலைநிறுத்துவதற் குரிய ஆதாரமாக மார்ஷல் பயன்படுத்திக் கொண்டார். ஆயினும், பெந்த்தாமியக் கொள்கையுடைய ஒரு பயன்பாட்டுவாதியாக மார்ஷலைக் கருத இயலாது; அதேசமயம்

1. Edgeworth. F.Y. 'Reminiscences in Memorials to Alfred Marshall' Edited by Pigou A. C, P. 71.

மில்லின் கொள்கைப்படி அமைந்த ஒரு சுதந்திர அரசியல் சமூகச் சீர்திருத்தவாதியாகவும் அவரை எண்ண இயலாது.

1885ஆம் ஆண்டில் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் பேராசியர் பாசட்டுக்குப் (Prof. Fawcelt) பதிலாக மார்ஷல் பேராசிரியராக நியமனம் பெற்ருர். அவர் அப்பதவியை ஏற்றவுடன் ஆற்றிய உரையில், தலையிடாமைக் கோட்பாட்டை (Laissez faire Doctrine) மதி நுட்பத்துடன் பயன்படுத்துவது குறித்து விளக்கினுர். செல்வத்தை உயர்த்துகின்றவையெல்லாம் பொதுநலத்தையும் உயர்த்தியாக வேண்டும் என்ருர். ஒரு குறிப்பிட்ட அளவு பணத்தினுல், பணக்காரருக்கு உண்டாகும் இன்பத்தைவிட ஏழைக்கு அதிகமான இன்பம் உண்டாகும் என்பதை நிரூபித்துக் காட்டினுர். இதன் மூலம், எந்த ஒரு சமூக அல்லது தொழில் மாறுதலினுல் ஏற்படும் பண ஆதாயத்திற்கும் (Money gain), அதே மாறுதலினுல் மகிழ்ச்சியில் ஏற்படும் நிகர உயர்வுக்குமிடையே உள்ள தொடர்பை நிருணயிப்பது எளிதாகும் என்று விளக்கினுர். இதுவே சீரான 'பொருளியல் ஆய்வுமுறை' (Economic organon) என்றும் மார்ஷல் கூறினுர்[2].

விருப்பம் (Desire) அல்லது மனநிறைவை (Satisfaction) அளவிட இயலாது என்பது மார்ஷலின் கருத்து. 'இக் குறையினை, குறிக்கோள் அல்லது செயலாக்கச் சக்தியினைக் கணக்கிடுவதற்குப் பொருளியல் அளித்திருக்கும் அளவிடு முறையைக் கொண்டு ஈடு செய்துகொள்ளலாம்; எத்தனை குறைபாடுகள் இருப்பினும், அக் குறைபாடுகளுடனே செயலைத் தூண்டும் விருப்பம், அச் செயலினுல் விளையும் மனநிறைவு ஆகிய இரண்டுக்கும் இந்த அளவீடு உதவிபுரியுமாறு செய்யலாம்' என்று மார்ஷல் கூறியுள்ளார். அவருடைய இக்கருத்தில் மூன்று அம்சங்கள் அடங்கியுள்ளன: (1) செயலுக்கான குறிக்கோள் அல்லது இயக்க சக்தி: (2) செயலைத் தூண்டும் விருப்பம்; (3) செயலினுல் உண்டாகும் மனநிறைவு. ஒருவர் தாம் விரும்புவதைப் பெறுவதற்கு எவ்வளவு பணம் கொடுக்கத் தயாராக இருக்கின்ருரோ அந்தத் தொகையைக்கொண்டு முதலாவதாகிய செயலுக்குரிய குறிக்கோள் அல்லது இயக்க சக்தியை அளவிடலாம் என்கிருர் மார்ஷல். இந்தப் பணத்தின் கூட்டுத்தொகையே குறிக்கோள் சக்தி (Force of motive) ஆகும். இரண்டாவதாக, விருப்பங்களையும் மனநிறைவுகளையும் அளவிடும் சாதனமாகவும் பணத்தைப் பயன்படுத்தலாம்.

[2] Marshall A. The present position of Economics. Inaugural Lecture at Cambridge. 1885. '[Ref. A. C. Pigou: Memorials to Alfred Marshall]

பணத்தின் இறுதிநிலைப் பயன்பாடு மாறாதது எனக்கொண்டால் ஒருவன் தான் விரும்பும் ஒரு பொருளை எப்படியும் வாங்கிவிடவேண்டும் என்ற எண்ணத்தில் அவன் உண்மையாகக் கொடுக்கும் விலையைக் காட்டிலும் எவ்வளவு தொகை அதிகமாகக் கொடுக்கத் தயாராக இருக்கிறான் எனக் கணக்கிட்டால், அந்த அதிக அளவு விலையே மகிழ்ச்சியின் அளவீடு என்று மார்ஷல் குறிப்பிடுகின்றார்[3].

தலையிடாமைச் (Laissez-faire) சூழலில் மன நிறைவு உச்ச அளவை எட்டும் என்பது தொன்மைப் பொருளியல்வாதிகளின் கருத்து. ஆனால், இக் கருத்திலிருந்து மார்ஷல் மிக மாறுபடுகின்றார். தலையிடாமைக் கொள்கையைக் காட்டிலும் பொது நலனுக்கு அதிக அளவு உகந்ததாக இருக்கக்கூடிய வழி வகைகளாகத் தனி நபர் செயல் முறைகளை மாற்றியமைப்பதற்குரிய சாத்தியத்தை அவர் ஆராய்ந்தார். முக்கியமாகத் தடையிலாப் போட்டியில், பெருகிவரும் செலவினத் தொழில்களில் அளவுக்கு அதிகமான முதலீடும், குறைந்துவரும் செலவினத் தொழில்களின் தேவைக்குக் குறைவான முதலீடும் ஏற்படும் என்று அவர் நிரூபித்தார். ஆகவே, தலையிடாச் சூழலில் நிறைவான சமநிலையில் (Perfect equilibrium) உண்டாகும் நிறைவுப் போட்டியில் (Perfect competition), குறைந்து செல்லும் விளைவின்கீழ் (Decreasing return) உற்பத்தியாகும் பொருள்களின்மீது வரி விதிப்பதால், கிடைக்கக்கூடிய வருமானத் தொகையை, வளர்ந்து செல்லும் விளைவின் கீழ் (Increasing return) உற்பத்தியாகும் பொருள்களுக்கு உதவித் தொகையாக (Subsidy) வழங்குவதன் மூலம், ஒரு சமுதாயத்தில் மொத்த மனநிறைவை உச்ச அளவுக்கும் அதிகமாக உயர்த்த முடியும் என்றும் மார்ஷல் மெய்ப்பித்தார். மார்ஷலின் இக் கருத்தைப் பின்னர் ஏ. சி. பிகோ, ஆர். எப். கான் இருவரும் விரிவாக விளக்கிக் கூறினார்கள்.

மார்ஷலுக்கு முன்னர் பலர் பல காரணங்களைக் காட்டி, உச்ச அளவு மன நிறைவுக் கோட்பாட்டினால் உண்டாகும் பயன்கள் குறித்து ஐயங்களை எழுப்பி இருக்கிறார்கள். எனினும், முழுக்க முழுக்கக் கோட்பாட்டு அடிப்படையில் அது பற்றி ஐயத்தை முதன் முதல் எழுப்பியவர் மார்ஷலேயாவார்.[4] 'சம்பந்தப்பட்ட அனைவருக்கும் உச்ச அளவு மன நிறைவு உண்டாவதற்கு முழுவதும் சமநிலைச் சூழல் உத்தரவாதமளிக்கிறது' என்ற வால்ராசின் கொள்கை

[3] Marshall, A: 'Principles of Economics' (London 1922) p. 181.
[4] Schumpeter, J. A: 'History of Economic Analysis' (New York, 1952), p. 1070

யுடன் மார்ஷலின் இக் கருத்தை ஒப்பிட்டுப் பார்ப்பது பொருத்த மாக இருக்கும்.

வருமான ஏற்றத் தாழ்வுகளுக்கு இடமளிப்பினும், வளர்வதும் குறைவதுமான செலவினத் தொழில்களின் மூலமாக, உச்ச அளவு மனநிறைவும், போட்டிச் சமநிலையும் ஒருங்கமைவதில்லை என்று மார்ஷல் விளக்கினர். எனவே, முழுமையான போட்டியைக் கண்மூடித்தனமாகப் போற்றுகிறவர்களே புதிய சம்பிரதாய வாதி கள் எனக் கருத இயலாது.

தலையிடாமைச் சூழலில் உண்டாகும் மன நிறைவைவிட அதிக அளவு மனநிறைவு உண்டாவதற்குரிய விதிமுறை ஒன்றை மார்ஷல் வகுத்தார். 'ஒரு வர்க்கத்தினர் என்ற முறையில் உற்பத்தியாளர் கள், நுகர்வோரைவிட மிகவும் ஏழைகளாக இருந்தால், அளிப்பைக் (supply) கட்டுப்படுத்துவதன் மூலமாக நிகர மனநிறைவை அதிகரிக் கலாம்; அப்போது தேவை நெகிழாமல் இருக்கத் தேவை விலையும் உயரும். ஒரு வர்க்கத்தினர் என்ற முறையில் நுகர்வோர், உற்பத்தி யாளர்களைவிட மிகவும் ஏழைகளாக இருப்பின், சமநிலை அளவுக்கு அதிகமாக உற்பத்தியை அதிகரித்து, உற்பத்திப் பொருளை நட்ட விலைக்கு விற்பதின் மூலம் நிகர மனநிறைவை அதிகரிக்கலாம்' என்பது மார்ஷல் வகுத்த விதியாகும், இவ்வாருக, தன்னிச்சை யான அல்லது கட்டாயமான முறையில் மறுபகிர்வு (Redistribu- tion) செய்து மன நிறைவை அதிகரிப்பதற்குரிய விரிவான முற் கோள் (Proposition) ஒன்றை மார்ஷல் வழங்கியுள்ளார்.

ஒருபக்கம் மனிதரோடும் மறுபக்கம் செல்வத்தோடும் தொடர் புடைய பொருளியல் விஞ்ஞானம் பற்றிய ஓர் ஆய்விலிருந்து மார்ஷல் தமது ஆராய்ச்சியைத் தொடங்கினர். பொருளியல் விஞ்ஞானம் மனிதனின் சேவகனுகவும், அவனுடைய நலத்தை மேம்படுத்துவதாகவும் விளங்க வேண்டுமானல், அவ்விஞ்ஞானம் செல்வத்தோடு அதிக அளவு தொடர்புடையதாக இருக்க வேண்டும் என மார்ஷல் வலியுறுத்தினர். அவருக்கு முந்திய தொன்மைப் பொருளியல் வாதிகள், பொருளியல் முறையைத் தேவைகளை நிறைவு செய்யும் ஒரு கருவி என்றே கருதி வந்தார்கள். தேவைகளை நிறைவு செய்யும் ஒரு வழிமுறைதான் பொருளியல் நடவடிக்கை; இத்தகைய நடவடிக்கையில் உள்ளடங்கியுள்ள மனிதப் பண்புகள் அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தவை அல்ல என்பதும் அவர்க ளுடைய கருத்து. இக் கருத்தை ஏற்க மார்ஷலின் மனம் ஒப்ப வில்லை. மனித வாழ்வில் பண்பு வளர்ச்சிதான் மிக முக்கிய மான அம்சம் என்று அவர் கருதினர். எனவே, அவர் தேவைகள்

பற்றிய தம்முடைய பகுப்பாய்வில் 'செயல்முறை விஞ்ஞானத்தையே' (Science of activities) மிகமிக வற்புறுத்துகின்றார்: தேவைகள் பற்றிய விஞ்ஞானத்தை' அவர் அவ்வளவாக வற்புறுத்தவில்லை. இவ்விரண்டுமே ஒன்றுக்கு ஒன்று உறுதுணையாக விளங்குபவை ; ஒன்றில்லாமல் இன்னொன்று முழுமை பெறுவதில்லை.

நல்வாழ்வு விஞ்ஞானம் (Science of well-being) பற்றிய அளவு முறை ஆராய்ச்சியில் மார்ஷலின் முக்கிய சாதனையாக விளங்குவது அவருடைய 'நுகர்வோர் உபரிக் கோட்பாடு' (Doctrine of consumer's surplus) ஆகும். இக் கோட்பாடு பெருமளவில் அபிவிருத்தி அடைந்துள்ளது. 'ஒரு குறிப்பிட்ட பொருளின்மீது செலவிடப்படும் தொகையானது மொத்த வருமானத்தில் பெரும் பங்காக இருக்குமானால், பயன்பாட்டைப் பணத்தின் அளவில் அளவீடு செய்வது பொருத்தமாக இராது. அதேபோல், வாழ்க்கையின் இன்றியமையாத் தேவைப்பொருள்களினால் உண்டாகும் தேவை நிறைவினை அளவீடு செய்வதும் சரியாக இருக்காது' என்று ராபர்ட்சன் (Robertson) கூறியுள்ளார். 'கொள்கையளவில் அளவிடக்கூடியவற்றை, நடைமுறையில் துல்லியமாக அளவிடுவது எப்பொழுதும் இயலக்கூடிய காரியமல்ல'[5] என்ற முடிவுக்கு அவர் வருகின்றார். பண வருமானத்தின் இறுதிநிலைப் பயன்பாடு மாறுகின்றபொழுது, அதனை அளக்கும் அளவுகோல் திரிந்துபோவதால் நினைத்த காரியத்திற்கு அது பயன்படாமல் போய் விடுகிறது.

சமூக மேம்பாட்டுக்கான ஒரு சாதனமாக நுகர்வோர் உபரிக் கோட்பாடு பயன்படுமாறு செய்து விடலாம் என மார்ஷல் முதலில் பெரும் நம்பினார். ஆனால், நாளடைவில் அவரே அதில் நம்பிக்கை இழந்து விட்டார். அக் கோட்பாட்டை வெறும் 'கோட்பாட்டுப் பொம்மை' (Theoritical toy) என்று லிட்டில் வருணிக்கின்றார். இத்தகைய கண்டனங்கள் தெரிவிக்கப்பட்ட போதிலும், நுகர்வோர் உபரிக் கோட்பாடு, ஹிக்ஸ் (Hicks) போன்ற பொருளியல் அறிஞர்கள் பலரின் ஆழ்ந்த கவனத்தைக் கவர்ந்துள்ளது. அவர்கள் அக் கோட்பாட்டை நலப் பகுப்பாய்வுக்குரிய (Welfare analysis) ஒரு நடைமுறை சாத்தியமான சாதனமாகப் பயன்படுத்தலாம் எனக் கருதினார்கள்.

தேசிய வளத்தைக் (National prosperity) குறித்துக்காட்டுவதற்குத் தேசியச்செல்வத்தைக் (National wealth) காட்டிலும் தேசிய வருமானம் அல்லது பகிர்வுத் தொகையே (National income or

5 Robertson, D. H: 'Utility and all that' (London, 1954), p. 16.

dividend) சிறந்த சாதனமாகும். ஏனென்றால், நேரடியான இன்பம் கொடுக்கக்கூடிய தன்மையுள்ள பொருள்களையே பெரும்பாலும் தன்னுள் கொண்டதாக வருமானம் அமைந்திருக்கிறது. மார்ஷலையும் பிகோவையும் பிணைக்கக்கூடிய முக்கிய பாலமாக அமைந்திருப்பது தேசிய வருமானக் கோட்பாடேயாகும். தேசிய வருமானத்தின் அளவு, மக்களின் சுகாதாரம் வலிமை திடம் போன்றவற்றின் மதிப்பு ஆகியவற்றுக்கும், மக்களின் ஆன்மிக, உடலியல் திறனுக்கும் இடையிலான ஆக்க முறை உறவு (Positive relation) குறித்து மார்ஷல் அடிக்கடி குறிப்பிடுகின்றார். இதிலிருந்து எதிர் காலத்தில் அவருக்கிருந்த நம்பிக்கையுணர்வு நன்கு புலனாகின்றது. இத்தகைய மதிப்புகளை ஊக்குவிப்பதற்கு நவீனத் தொழில்களும், வாணிபமும் துணைசெய்கின்றன; அதே சமயம், வறுமை இம் மதிப்புகளைச் சீர்குலைக்கின்றது. இதன் விளைவாகத் திறமையும் உற்பத்தி அளவும் குறைகின்றன.[6]

சமுதாய நலனைக் கருத்தில் கொண்டு, நேரடியாகவோ மறைமுகமாகவோ அரசாங்கம் தலையிடுவதற்கு நேரடியான காரணங்கள் உள. சமூகநலன், தனியார்நலன்களிலிருந்து விலகிச் செல்வதென்பது வளர்ந்து வரும் செலவினத் தொழில்களில் முக்கியம் பெறுகின்ற அளவுக்குக் குறைந்து வரும் செலவினத் தொழில்களில் முக்கியத்துவம் பெறுவதில்லை. இவ்வாறாகப், பொருளியல் நடவடிக்கைகளில் அரசினர் தலையீட்டுக்கு மார்ஷல் வழி அமைத்தார். இது அவரையும் பிகோவையும் இணைக்கும் மற்றொரு அடிப்படைப் பிணைப்பாகும்.

தனியார் சுவாதீனக் கொள்கையில் தீவிரப் பற்றுடையவராக மார்ஷல் விளங்கியபோதிலும், எவ்வித வரையறைக்கும் உட்படாத தலையிடாமைக் கொள்கையை (Unrestricted laissez-faire) அவர் விரும்பியதில்லை. அதே சமயம், தன்னுடைய முன்னோர்கள் செய்தது போல், சமூக-பொருளியல் ஏற்றத் தாழ்வுகளை அவர் ஆதரிக்கவுமில்லை. மாறாகச், சுதந்திர முயற்சியில் ஈடுபடுதற்குரிய ஆர்வத்தையும், பண்பு வலிமையினையும் அழிக்காத வகையில், ஏற்றத் தாழ்வுகளைக் குறைப்பதை அவர் ஆதரித்தார். செல்வமும் கொடிய வறுமையும் ஒரே சமயத்தில் நிலவுவதற்கு நியாயமே இல்லை என்பது அவர் கருத்து. அதே நேரத்தில் சோசலிச இயக்கம் வளர்வதையும் அவர் தீவிரமாக வெறுத்தார். தனியார் நிருவாகத்திற்குப் பதிலாக அரசாங்க நிருவாகத்தை ஆதரிக்கின்ற சோசலிச இயக்கத்தினால் 'மனித நலனுக்குப் பேராபத்து விளையும்' என்று அவர் கருதினார்.

6 Levin, H. J: 'Standards of Welfare in Economic Thought' 'Quarterly Journal of Economics' 1956, p. 124.

தனியார் தொழில் முயற்சியை (Private enterprise) இவ்வியக்கம் கெடுத்துவிடும் என்று எண்ணிய மார்ஷல், ஏறக்குறைய அதே காரணங் காட்டி ஏகபோகத்தையும் (Monopoly) வெறுத்தார்.

பிகோவும் பாரீட்டோவும் உருவாக்கியுள்ள இக்கால நலப்பொருளியல், மார்ஷலின் போதனைகளைப் பின்பற்றியதாக உள்ளது. எனவே, நலப்பொருளியலுக்கு மார்ஷல் ஆற்றியுள்ள தொண்டு மகத்தானது என்பதில் ஐயமில்லை. குறிப்பாகச் சொல்லவேண்டுமானல்—அவருடைய இரண்டு முக்கிய சாதனைகளைக் கூறலாம். முதலாவதாக, நுகர்வோர் உபரியைக் கண்டுபிடித்து, நலப் பொருளியலுக்குப் பகுப்பாய்வுச் சாதனம் ஒன்றை அவர் அளித்தார். இரண்டாவதாக – நவீன நலப்பொருளியலின் மாதிரியில் அமைந்த பல முற்கோள்களை (Propositions) அவர் வகுத்துத் தந்தார்.

எட்ஜ்வர்த், பிகோ, ராபர்ட்சன், கெயின்ஸ் முதலியோர் அடங்கிய பொருளியல் கோட்பாட்டுக் குழாத்தை உருவாக்கியவர் மார்ஷலே என்று திட்டமாகக் கூறலாம். இவர்கள் 'நன்கு வரையறுக்கப்பட்ட விஞ்ஞான முறையிலான ஆய்வுமுறை' பற்றிச் சிந்தித்ததுடன், தங்களுடைய சிந்தனைகளுக்கிடையில் ஒன்றுக்கொன்று தொடர்புள்ள வகையில் ஒருவகைப் பிணைப்பையும் ஏற்படுத்தினர்கள். இவ் வறிஞர்கள் யாவரும் மார்ஷலின் போதனையிலிருந்தே தங்கள் ஆய்வுப் பயணத்தைத் தொடங்கினர்கள்: எனினும் அவர்கள் அதையும் தாண்டி வெகு தொலை சென்றுவிட்டார்கள்.

பொருள் நலச் (Economic welfare) சிந்தனை வளர்ச்சியில் முக்கியமாகக் குறிப்பிடத்தக்க பொருளியல் அறிஞர்களுள் ஹாப்சனும் (Hobson) ஒருவர். பிகோவுக்குப் பத்தாண்டுகளுக்கு முன்னரே, சம்பிரதாய முறைக் கோட்பாடுகளை யெல்லாம் அவர் வன்மையாகக் கண்டித்தார்; மனித நலம் பொருளியல் தடங்கல்களுக்கு அப்பாற் பட்டது என்று அவர் கூறினர். தடையிலாப் போட்டி (Free competition) நிலையானதல்ல என்றும், சந்தை விலையின் பண மதிப்பை நலத்தைக் குறிக்கும் குறியீடாகக் கொள்ள இயலாதென்றும் அவர் கருதினர். மனித மதிப்பீட்டுப் (Human valuation) பணிக்குப் பொருளியல் விஞ்ஞானம் எவ்விதத்திலும் துணை செய்யாது என்றும் அவர் கூறினர். மாறுக, நல்வாழ்வைத் தக்க சோதனையாகக் கொண்டு, நலத் தராதரங்களின் அடிப்படையில் தொழில்களை மதிப்பிட வேண்டும் என அவர் வலியுறுத்தினர்[7]. பின்னர் வெப்லோவும் (Vebleu) ஹாப்சனின் கருத்துக்கு ஆதரவு கொடுத்தார். பொருள் நலம், பொருளற்ற நலம் (non-economic

[7] Hobson, J. A: 'Work and wealth' Loadon. (1916). p.1-3.

welfare) ஆகிய இரண்டுக்கு மிடையிலான முரண்பாடுகளையும் இணக்கத்தையும் சுட்டிக்காட்டித், தொன்மைப் பொருளியலையும், பிகோவின் நலக் கோட்பாட்டையும் ஹாப்சனும் வெப்லோவும் ஆராய்ந்து குறைகளைக் கூறினர்கள். பொருள் நலத்திற்கும், பொருளற்ற நலத்திற்குமிடையிலான இடைவெளியைக் குறைப்ப தற்குரிய மாற்று நிறுவன ஏற்பாடுகள் குறித்தும் அவர்கள் இரு வரும் ஆராய்ந்தார்கள்.

ஹாப்சன் தம் ஆய்வில் அடிப்படையான வினு ஒன்றை எழுப் பினுர்: 'தேசிய உற்பத்தி உயர்கின்றபொழுது தொழிலாளர்கள், முதலீட்டாளர்கள், முதலாளிகள், நுகர்வோர் ஆகியோரின் அடிப் படைத் தேவைகளுக்கு என்ன நேர்கின்றது?' உற்பத்தியில் ஏற்படும் மாறுதல்களினுல் மறுதலையான விளைவுகள் ஏற்படுவதாகச் சிறி தளவு சான்றுகள் காணப்படினும், பொதுவாக உற்பத்தியில் ஏற் படும் மாறுதல்களினுல் பொருள் நலத்திலும் பொது நலத்திலும் ஒரே மாதிரியான மாறுதல்கள் உண்டாகின்றன என பிகோ கருதி னுர். இக்கருத்தை ஹாப்சனும் ஒப்புக் கொள்கிறுர். ஆயினும், மறுதலையான விளைவுகள் குறித்து அவர் மிகுதியாகக் கவலை கொண் டார். இவ்விளைவுகளை மற்றவர்கள் புறக்கணித்துவிட்டார்கள் என்றும் அவர் வருந்தினுர்.

மனிதச் செலவுக்கும் (Human cost) மனித மகிழ்ச்சிக்கும் (Human happiness) இடையே சமச் சீர்நிலையை உண்டாக்க ஹாப் சன் விரும்புகிறுர். அவருடைய நலத் தத்துவத்தின்படி, விற்பனைக் குரிய செல்வத்தின் உற்பத்தித் திட்டத்தில் ஓர் உறுப்பு என்ற நிலையி லிருந்து மனிதன் சற்று மேம்பட்டவன் ஆகின்றுன். உற்பத்தியில் அவனுடைய தேவைகள் குறிக்கோள் தன்மை (objective) உடை யவை; உற்பத்தி நடவடிக்கையில் மனிதச் செலவு என்பது, உரு வாக்கப்பட்ட பயன்பாடுகளுக்குச் சரிசமமான தியாகங்களே யாகும்.

உற்பத்திச் செலவைத் தாங்குபவர்கள் சிறு சேமிப்பாளர்களும் உடல்உழைப்பில் ஈடுபடுபவர்களுமே என்றும், இது முன்னைய பொருளியல் வாதிகளின் தியாகம் மற்றும் துய்ப்புத் தவிர்ப்புக் கோட்பாட்டை (Sacrifice and abstinence theory) ஏறத்தாழ ஒத்திருக்கிறது என்றும் ஹாப்சன் முடிவுக்கு வந்தார். அவரது இந்த முடிவின் அடிப்படையே தவறுகும். ஹாப்சன் தம் முடைய மனித மதிப்பீட்டுக்கென (Human valuation) அறிவார்ந்த செயல்முறை (Intellectual procedure) ஒன்றை வகுக்க முயல் கின்றுர். 'தொழில் பற்றிய மனித மதிப்பீட்டின் மூலம் உற்பத்தி

நுகர்வுக்கும் சம அளவு முக்கியத்துவம் உண்டாகும்; செலவையும் பயன்பாட்டையும் மனித முயற்சிகள், மனநிறைவு அடிப்படையில் குறிப்பிடலாம், மேலும், செல்வத்திற்குப் பண அளவுத் தரத்திற்குப் பதிலாக மனித நல்வாழ்வு அளவுத் தரம் ஒன்று கிடைக்கும்' என்று ஹாப்சன் கூறியுள்ளார்.

சீரான விரும்பத்தக்க வாழ்க்கை என்ற அடிப்படையைக் கொண்டே மனித அளவுத் தரத்தை நிருணயிக்க வேண்டும் என்பது ஹாப்சன் கருத்து. விரும்பத்தக்க வாழ்க்கை (Desirable life) என்ற கோட்பாட்டை அவர் மீக்கோள்தரமாக (Norm) எடுத்துக் கொண்டு, அதை 'அங்கவியல் நலம்' (Organic welfare) என அழைக்கின்றார். அங்கவியல் நலமுறையின்படி, மதிப்பீட்டு அளவுத் தரத்தினால் இரண்டு விதமான நன்மைகள் உண்டு. முதலாவதாக – தொழிலின் பெரும் பகுதியுடன் தொடர்புடைய இயல்பான செலவு, பயன்பாடுகள் ஆகியவற்றை மதிப்பிடுவதற்குரிய சீரான முறை ஒன்றை அது வழங்குகின்றது. இரண்டாவதாக — வாணிகச் செல்வத்தின் அடிப்படையிலான பொருளியல் விஞ்ஞானத்தை யந்திர முறையில் கையாள்வதன் மூலம் சாதாரணமாக ஏற்படும் பிழைகள் ஏற்படாமல் அது தவிர்க்கிறது. சமுதாயத்தை ஓர் அங்கவியல் அமைப்பாகக் கருதாதவரை, தொழில் பற்றிய சமூகவியல் சார்பான பொருள்விளக்கம் இயலாததாகும். தொழிலை மதிப்பிடுவதற்குரிய ஒரு முறையை வகுப்பதற்கான இந்தப் பணி தனிநபர்களின் வாழ்வில் மட்டுமின்றிச், சமுதாய நலத்திலும் பொருளியல் நடவடிக்கைகளினால் உண்டாகும் விளைவுகளை ஆராய வேண்டிய கட்டாயத்தை உண்டாக்கி விடுகிறது. சமுதாயத்தை ஓர் அங்கமாகக் கருதுகின்றபொழுது, உற்பத்தி-நுகர்வு, செலவு - பயன்பாடு, இயல்பான நலம்—ஆன்மிக நலம், தனியார் நலம், சமூக நலம் ஆகிய முரண்பாடுகள் யாவும் தம்முள் ஒருவகை இணக்கத்தையும் ஒத்திசைவான தன்மையையும் பெறுகின்றன.

இந் நோக்கத்தினைக் கருத்தில் கொண்டு முழு வேலை வாய்ப்பு, நல்ல ஊதியங்கள், சுகாதாரம், கல்வி, பொழுதுபோக்கு ஆகியவை கிடைக்கும்படி செய்வதற்கென எல்லாப் பொருளியல் நடவடிக்கைகளின் மீதும் ஒருவிதச் சமூகக் கட்டுப்பாட்டைக் (Social control) கொணர வேண்டுமென ஹாப்சன் வற்புறுத்துகின்றார். மக்களுக்கு உச்சஅளவு மகிழ்ச்சியை உண்டாக்குவதற்காக அரசினருக்கு இவ்விதக் கட்டுப்பாட்டு அதிகாரத்தைக் கொடுக்க வேண்டுமென ஹாப்சன் வற்புறுத்தும்பொழுது, அவர் கற்பனை உலகச் சோசலிசக் கோட்பாட்டு வாதிகளின் குழுவில் சேர்ந்து விடுகிறார். பிகோவை அவ்வாறு கருத முடியாது.

அரசாங்கத் தலையீட்டை வலியுறுத்துவதில் ஹாப்சனுக்கும் பிகோவுக்குமிடையே முக்கியமான ஒற்றுமையைக் காண முடிகிறது. உற்பத்தியிலும், நுகர்விலும் ஏற்படும் சீர்கேடுகள் காரணமாகச் சீரான பகிர்வு முறையை அமுல் படுத்துவதற்கு அரசாங்கத் தலையீடு இன்றியமையாததாகின்றது. 'ஒவ்வொருவரின் திறமைக்கும் ஏற்ற வகையில் - நுகர்வோர் என்ற முறையில் ஒவ்வொருவரின் தேவைகளும் அமைய வேண்டும் அடிப்படையில்—சமூகச் சீர்திருத்தம் அமைய வேண்டும்' என ஹாப்சன் கருதினார்.

நலப் பொருளியலுக்கு ஹாப்சன் ஆற்றியுள்ள தொண்டினை மதிப்பிடும்பொழுது, ஒரு அம்சம் நமக்கு மிகத் தெளிவாகப் புலப்படுகின்றது. 'யந்திர யுகத்திற்குப் பதிலீடாகக் கைவினைத் தொழிலுக்கு முதலிடம் அளித்தல் வேண்டும்' என்று விரும்பிய ரஸ்கினின் கோட்பாடுகளை, அவற்றின் சாரமாக விளங்கிய மனிதநல மதிப்பீட்டுடன், பொருளியல் முறையாக உருவாக்குவதற்கு ஹாப்சன் முக்கியமாக முயன்றார். சுருங்கச் சொன்னால், செல்வத்தைப் பற்றிக் கவலைப் படாமல் நலத்தைப் பற்றி மட்டுமே ஆராய்ந்த நடுத்தர வர்க்கச் சீர்திருத்தவாதிகளுக்குப் பொருளியல் கோட்பாட்டை வகுத்துக் கொடுத்தவர் ஹாப்சன்' எனலாம்.

சமுதாயத்தில் நலத்தை மேம்படுத்துவதற் குரிய சிந்தனை முறையைப் பொருள்நலம் வெளிப்படுத்துகிறது என்பது ஹாப்சனின் கருத்து. அவருடைய இக் கருத்து மேலும் விரிவடைந்து, அவருடைய சிந்தனையின் தலையாய பண்பாகிய சமூக நலமாக உருவாகியது. இது அவருடைய பயிற்சியின் தனித் தன்மையிலிருந்து உருப்பெற்றதாகும். அவருடைய கண்டனக் கருத்துகள் முரண்பாடுடையவனாகக் காணப்படுகின்றன.

மார்ஷலின் பொருளியல் சிந்தனையில் ஹாப்சன் பெற்ற கடுமையான பயிற்சியானது, அவரிடம் புதைந்துள்ள கோட்பாட்டு வாதத்தை வெளிப்படுத்துகின்றது. சீர்திருத்தக் கொள்கைகளுக்குப் போட்டி முறையை அவர் ஆதரித்து எழுதாமையால், அவர் ஒரு சமூகவியல்வாதியாகத் தோற்றமளிக்கின்றார். சமூகவியல் வாதி என்ற முறையில் அநீதிகளை ஒழித்துக்கட்டுவதற்கு ஏற்றவாறு நடைமுறை சாத்தியமான வகையில் தம்முடைய பொருளியல் கோட்பாட்டை உருவாக்க வேண்டியதன் அவசியத்தை அவர் உணர்ந்திருந்தார். மனித மதிப்பீட்டின் அடிப்படையில் சமூகத்தைச் சீர்திருத்தி அமைக்க வேண்டும் என்ற அழகியல் குறிக்கோள் அவருக்கு உண்டானதற்கு, அவரிடம் குடிகொண்டிருந்த கலையுணர்வு காரணமாக இருந்தது. வலிமை வாய்ந்த இந்த

நெறிமுறைத் திறனை 'மனித நலக் கோட்பாடாகவும், ரஸ்கின் சிந்தனையின் அறவியல் போக்கில் அமைந்ததாகவும் திட்டவட்டமாகக்' கூறலாம். அவருடைய கொள்கைகளில் வெளிப்படையாகக் காணப்படும் மனிதாபிமானக் குறிக்கோள்தான் அவருடைய பொருளியலுக்கு 'நலப் பொருளியல்' என்னும் பெயரை ஈட்டித் தந்தது என்று அறிஞர் லாசர் (Lazare) தெரிவித்துள்ள கருத்தை நாமும் ஏற்றுக் கொண்டு, அதே முடிவுக்கு வருவது பொருத்தமானதேயாகும்.

---

# 2. பிகோ கோட்பாட்டின் பின்னணி

## நலப் பொருளியல் பற்றித் தொன்மைக் கருத்துகள்

முழுமையான நலத்தின் (Total welfare) ஒரு பெரும் பகுதியே பொருள் நலம் என்றும், தலா செல்வத்தில் (per-capita wealth) ஏற்படும் மாறுதல்கள் பொருள் நலத்தினைப் பாதிக்கின்றன என்றும் கொள்வோமானால், நாம் நன்கறிந்துள்ள ஆடம் ஸ்மித்துடனேயே நலப்பொருளியல் தொடங்கிவிட்டதாகக் கூறலாம். அவ்வாறே போட்டி (competition) பற்றிய தொன்மைக் கோட்பாட்டினை (classical concept) விளக்குவதற்கு முக்கிய ஆதாரமாகவும் செல்வாதாரங்களை ஒதுக்கீடு செய்வதற்கான சிறந்த சாதனமாகவும் உள்ளது ஆடம் ஸ்மித்தின் 'நாடுகளின் செல்வம்' (wealth of nations) என்ற நூலேயாகும். அதிகப்படியான மொத்த உற்பத்திப் பொருள்களும் (Large total product), அதிகப்படியான தலா உற்பத்திப் பொருள்களும் (large per-capita product) தடையிலாப் போட்டியின் (Free competition) இரு விளைவுகளாகும்' என்பது ஆடம் ஸ்மித்தின் கருத்து. ஒருவரின் பொருள்வள நல்வாழ்வினைச் (Material well-being) சுட்டிக்காட்டும் கருவியாக விளங்குவது தலா உற்பத்திப் பொருள்களாகும். அது அவ்வாறு சுட்டிக் காட்டுவதன்மூலம் பொதுநலத்தையும் (General Welfare) சுட்டிக் காட்டுவதாகும். ஆனால், 'நாடுகளின் செல்வம்' என்னும் நூலில் இச் சொற்கள் பயன்படுத்தப் படவில்லை. அரசியல் பொருளியல் தத்துவங்களை (principles of political economy) முறையாகப் பகுப்பாய்வு செய்யத் தொடங்கியபொழுது, செல்வமும் நலமும் நெருங்கிய பிணைப்பு உடையனவாக இருந்தன. கடந்த கால அரசியல் முறைகளில் (political systems) ஆதிக்கம் செலுத்திய வாணிகக் கட்டுப்பாடுகளுக்கு (Mercantilistic restraints) எதிர்ப்புத் தெரிவிக்கும் ஆடம் ஸ்மித் இயல்புச் சுதந்திரத்தை (Natural liberty) ஆதரிக்கின்றார்: மேலும், செல்வத்தை உச்ச நிலைக்கு உயர்த்தக் கூடிய பருவினக் குறிக்கோளைத் (Macro-goal) தமது கொள்கை

யாகக் கொள்கின்றூர். இவ்வாறுக, பொருள்வளக் கோட்பாடு (Materialistic concept) - அல்லது 'நாடுகளின் செல்வத்தின்' பயன் பாட்டுக் குறிக்கோள் (utilitarian goal)—கடந்த காலத்தில் நிலவிய கடுமையான கட்டுப்பாடுகளைக் கொண்ட அறவியல் குறிக் கோளை ஒதுக்கித் தள்ளி அதன் இடத்தைப் பிடித்துக்கொண்டது. இதனுல், 'பகுத்தாய்வுவாதியான ஸ்மித்தின் இடத்தைச் சீர்திருத்தவாதியான ஸ்மித் பிடித்துக் கொண்டார்'[1] என்று சில அறிஞர்கள் கூறினர்கள். இக்கருத்தை, ஹலா மின்ட் (Hla Myint) என்பவரின் கூற்று உறுதிப் படுத்துகின்றது. வரையறையுள்ள ஒரு முறையில் (closed system) போட்டிச் சமநிலையின் (competitive equilibrium) செயல்முறை பற்றி ஆடம் ஸ்மித் தமது நூலில் ஒரு சிறு பகுதியில்தான் விளக்குகின்றூர். எனினும், அந்தக் குறுகிய எல்லையிலும் அவருடைய சாதனை பாராட்டுதற் குரியதாக விளங்கு கிறது. ஆதிகாலப் பொதுமைகள் (Primitive generalisations), தனிப்பட்ட ஆய்வுகள் (particular enquiries) என்னும் நிலையி லிருந்த அரசியற் பொருளியலை (political economy), பொருளியல் முறை எவ்வாறு முழுமையாகச் செயல் படுகிறது என்பதை ஒருங் கிணைவாகப் பகுப்பாய்வு செய்யக்கூடியதாக மாற்றிய பெருமை ஆடம் ஸ்மித்தைச் சாரும்[2].

ஆடம் ஸ்மித் தோற்றுவித்த இந்தச் சிந்தனைப் போக்கை மேலும் வளர்க்கத் தொன்மைப் பொருளியல் வாதிகள் (classical ecconomists) எவரும் குறிப்பிடத்தக்க பெருமுயற்சி எடுக்கவில்லை. ரிக்கார்டோவும் (Riccordo), மால்தஸும் (Malthus), வரையறை யுள்ள பொருளியலில் (closcd economy) உள்நாட்டு வணிகத்திற்கு மட்டும் ஸ்மித்தின் போட்டிக் கோட்பாட்டை (Theory of competition) எவ்வித மாறுதலுமின்றி அப்படியே ஏற்றுக் கொண்ட துடன் மனநிறைவு அடைந்துவிட்டார்கள். விலைக் கோட்பாட்டை (Price Theory) உருவாக்கிய தொன்மைப் பொருளியல் வாதிகளின் மனத்தைச், சந்தைப் பொருளியலின் (Market economy) திறமை பற்றிய சிக்கல் மிகவும் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது. ஆனுல், விலைக் கோட்பாட்டின் குறுகிய எல்லையினையும் (Limitation) சிக்கலுக்குத் தீர்வுகாண அதனுல் இயலாத தன்மையையும், அவர்கள் உணரத் தொடங்கியதும் படிப்படியாக மனம் மாறி, நலப் பொருளியலில் தங்கள் கவனத்தைத் திருப்பலானுர்கள்.[3]

1 Thompson, H. F: Adam Smiths Philosophy of Science 'Quarterly Journal of Economics May, 1965, p. 229.

2 Myint, H.a: 'Theories of Welfare Economics' (London, 1948) p. 55.

3 Scitousky, T: 'Welfare an! competitio.' (London, 1952, Prefa e p. ix

ஆடம் ஸ்மித்தின் 'நாடுகளின் செல்வம்' என்ற நூல் வெளி வந்த 50 ஆண்டுகளுக்குப் பிறகு, 'அரசியல் பொருளியல் கையேடு' (Manuel of Political Economy) என்னும் நூலை 1793 இல் ஜெரமி பெந்தாம் வெளியிட்டார். ஸ்மித் முறையில் காணப்பட்ட முரண் பாடுகளைக் களைய இந்நூலில் அவர் முயன்றார். மேலும், தடையி லாப் பொருளியலே மிகுந்த ஆக்கம் விளைவிப்பது என்பதை நிரூ பிக்க அவர் முயன்றதுடன், எல்லாப் பொருளியல் விவகாரங்களி லும் அரசினர் தலையீடு அறவே கூடாது என்றும் வற்புறுத்தினார். 'ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில், ஒரு குறிப்பிட்ட கால வரம்புக் குள், மகிழ்ச்சியை உச்சநிலைக்கு உயர்த்துவதே குறிக்கோள் அல்லது இறுதி விளைவாக இருத்தல் வேண்டும்... தேசியச் செல்வத்தின் மொத்த அளவு பெருகும்படி செய்வதும் நோக்கமாக இருக்க வேண்டும்'. இதில் அரசினர் யாதும் செய்யவோ, முயலவோ கூடாது என்பதைப் பொது விதியாகக் கொள்ள வேண்டும்.

இந்தச் சமயங்களில் 'அமைதியாக இரு'[4] (Be quiet) என்பதே அரசின் கொள்கையாக இருத்தல் வேண்டும் என்னும் அடிப்படைக் கருத்திலிருந்து தொடங்கி, இயன்றவரைப் பெருமளவில் தேசிய நலத்தை உண்டாக்குவதற் குரிய வழி வகைகள் பற்றிய ஒரு விஞ் ஞானமே (Science) அரசியல் பொருளியல் (Political Economy) என்று பெந்தாம் தமது அரசியல் பொருளியல் முறைக்கு உருவம் கொடுக்கிறார். 'ஒவ்வொரு தனி நபரும் தன்னிடமுள்ள வசதி களுக்கு (Means) ஏற்ப, உச்சஅளவு மகிழ்ச்சியை அடைவதற்கு முயற்சி மேற்கொள்ள வாய்ப்பளிக்கக் கூடிய நிலையை உண்டாக்கி விட்டால், உச்சநிலை மகிழ்ச்சியை (Maximum enjoyment) வெற்றி கரமாக அடைந்து விடலாம்' என்று அவர் கருதுகின்றார்.

பெந்தாமின் விளக்கம் பொருள்சார்பைவிடத் தன்னல முனைவையே (Hedoristic) அதிகம் தழுவியதாக அமைந்துள்ளது; உண்மையைச் சொன்னால், பொருளியல் கோட்பாட்டு வளர்ச்சிக்கு அவர் ஏதேனும் உதவியதாகக் கூற இயலாது. அவருடைய எழுத்துகளில் மிக முக்கியமானது- கடும் வட்டியை (Usury) ஆத ரித்து அவர் எழுதியுள்ளதேயாகும்; 'நாடுகளின் செல்வ'த்தின் துணை முடிபாகவே (corollary) அவர் இதைக் குறிப்பிட்டுள்ளார். பண் பியலாகிய (abstract) சமத்துவக் கோட்பாட்டை (Theory of Equality) அவர் ஏற்க மறுக்கிறார். சமத்துவத் தத்துவமானது ஒன்றிலிருந்து வருவிக்கப்பட்டதே (Derivative) யன்றி மூலாதார மானது (Ultimate) அன்று என்பது அவர் கருத்து. மகிழ்ச்சியின்

[4] Bentham, J: 'Manual of Political Economy' (London, 1798), Book III, p. 33.

நிறைவைப் (sum of happiness) பெருக்குவதன் காரண மாகச் சமத்துவம் பயனுடையதாகும்.[5] 'மிகப் பலருக்கு மிகப்பெரு மகிழ்ச்சி' (Greatest happiness of the greatest number) என்னும் புகழ் பெற்ற சூத்திரமே பெந்தாமினுடைய கோட்பாட்டின் மையக் கருத்தாகும். அவருடைய இத் துணிபுரையில் (Assertion) புதுமை ஏதுமில்லை; ஏனெனில், இந்தப் புனிதமான சொற்றொடரை முதன் முதலில் கண்டுபிடித்தவர் அறிஞர் ஹட்சிசன் ஆவார். பெந்தாமின் காலத்தில் பயன்பாட்டுக் கொள்கையை ஆதரிப் பதே பெரும்பாலோரின் போக்காக இருந்துவந்தது. எனவே, பெந்தாமும் 'பெரும்பான்மையோரின் பக்கம் சேர்ந்துவிட்டார்.' பயன்பாட்டை அளவிட இயலும் என்று அவர் நம்பினர்; அவ்வாறு பயன்பாட்டை அளவிடப் பணமே பொருத்தமான கருவி என்றும் கருதினர். வருமான மறுபகிர்வானது (income redistribution) மொத்தப் பயன்பாட்டை (Totel utility) உயர்த்து கிறது என்ற உண்மையினையும் அவர் அறிந்திருந்தார்.

தொன்மைப் பொருளியல் சிந்தனையில் பெந்தாமின் தத்துவம் சுமார் 20 ஆண்டுக் காலம் ஆதிக்கம் செலுத்தி வந்தது. ஆரம்பக் காலத்தில் முறைமையியல் கண்டனங்கள் (Methodological Criticism) தெரிவிக்கப்பட்ட போதிலும், பண்பியல் பகுப் பாய்வுக்குத் (abstract analysis) தன்னல முனைவே (Hedonison) அடிப்படையானது என்று மில்ஸ், ஜெவான்ஸ் (Jevons), எட்ஜ் வொர்த் பெண்டாலியோனி (Pentaleoni) போன்ற தொன்மை மரபுவாதிகள் தொடர்ந்து நம்பி வந்தார்கள். எனினும், பயன் பாட்டுக் கொள்கை (utilitarianism) பற்றிய ஜேம்ஸ் மில்லின் (James milel) கூற்றானது, பயன்பாட்டு அளவீட்டுக் (Measurable utility) கோட்பாட்டை ஒழித்து விட்டது; அத்துடன், இன்ப நுகர்வுகள் (Pleasures) யாவும் தகுதியால் சமமானவை என்னும் கருத்தினையும் அது ஒதுக்கித் தள்ளிவிட்டது. பயன்பாட்டு அள வீட்டுக் கோட்பாட்டை விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டிருந்த கடைசிப் பயன்பாட்டுக் கொள்கைவாதி எட்ஜ் வொர்த் ஆவார். அவர் தமது 'கணித உளவியல் பண்புகள் (Mathematical Psychies) என்னும் நூலில், பெந்தாமின் தன்னல முனைவுக் கொள்கைக்கு விளக்கங் கூறுகையில், எல்லாக் காலத்திலும், எல்லாப் புலனறி வாலும் (Sentience) இயன்ற அளவு ஒன்று திரட்டப்பட்ட மொத்த இன்ப நுகர்வினை ஆராய்ந்தறியும்படி பொருளியல் அறிஞர்களுக்கு அவர் வேண்டுகோள் விடுத்துள்ளார். ஆனல், அவர் வரைந்த சம நோக்கக் கோடுகளின் (indifference curoes) வாயிலாக, நலப்

[5] Stephen Leslie: 'The English Utitariams' Vol. I Jeremy Bentham, (London 1950). Reprint, p. 307-308.

பொருளியல் கோட்பாடு உருவாவதற்கு அவர் ஓரளவு உறுதுணையாக இருந்தார் என்பது உண்மையென்றாலும், அவருடைய நம்பிக்கை ஈடேறவில்லை. ஆங்கிலப் பயன்பாட்டுக் கொள்கை வாதிகளில் பெந்தாமுக்கு அடுத்தவராக விளங்குபவர் ஜேம்ஸ் மில் ஆவார்; இவரைப் 'பயன்பாட்டு வாதிகளின் தலைவர்' என்பர். ஜேம்ஸ் மில்லின் இறுதிக் காலத்தில்தான், பயன்பாட்டுக் கொள்கை அதன் உயர்வின் உச்ச நிலையை எட்டியது; அவரைத் தங்கள் தலைவராகவும், பெந்தாமின் அதிகார பூர்வமான தளபதியாகவும் ஏற்றுக் கொண்ட சிறு குழுவினர், தாங்களும் முன்னேற்றப் பாதையில் செல்கிறோம் என்று கருதலாயினர். பெந்தாமின் முயற்சியால் கணக்கற்ற கிளைகளுடன் பல்கிப் பெருகிய தத்துவங்களுக்குச் செறிவான வடிவம் கொடுத்துப் பொருள் விளக்கம் கூறியவர் அறிஞர் மில்லே ஆவார்.

சமத்துவம், சுதந்திரம் பற்றிய பயன்பாட்டுக் கொள்கைகளை விளக்குவதில் ஜேம்ஸ் மில்லைப் பெரிதும் பின்பற்றியவர் ஜான் ஸ்டூவர்ட் மில் (John Stuart Mill) ஆவார். ஆனால் அவருடைய கண்ணோட்டம் சற்று விரிவானதாக இருந்தது; பொருளியல் குறிக்கோள்கள் என்னும் குறுகிய எல்லைக்குள் அடைபட்டுக் கிடப்பதை அவர் விரும்பவில்லை. பொருள்நலம் என்னும் அளவைக் கொண்டு மட்டும் கொள்கைகளை மதிப்பிடுவதை அவர் அறவே ஏற்கவில்லை. தூய அரசியல் பொருளியலைவிட விரிவான அடிப்படைகளை அவர் விரும்புகிறார். குறுகிய பொருளியல் குறிக்கோள்களிலிருந்து மாறுபட்ட அரசியல், அறவியல் குறிக்கோள்களுக்கு அவர் அதிக முக்கியத்துவம் கொடுக்கிறார்.

சந்தைப் பொருளாதாரத்தின் (Market economy) திறமை பற்றிய சிக்கல் தொன்மைப் பொருளியல் வாதிகளின் மனத்தைப் பெரிதும் ஆட்கொண்டிருந்தது. எனினும், விலைக் கோட்பாட்டின் குறுகிய எல்லையினையும், அதனால் இச் சிக்கலுக்குத் தீர்வு காண இயலாத தன்மையினையும் உணரத் தொடங்கியதும், அவர்கள் படிப்படியாக மனம் மாறி, நலப்பொருளியலில் தங்கள் கவனத்தைச் செலுத்தலானார்கள். இந்த உண்மையைப், பொருளியல் செயல்முறை (Economic Mechanism) பற்றிய தூய கோட்பாட்டின் நடைமுறைச் சிக்கல்கள் குறித்து விவாதத்திற்குத் தொன்மைப் பொருளியல் நூல்களில் மிகக் குறைந்த இடமே கொடுக்கப்பட்டிருப்பதிலிருந்து உணரலாம். மேலும், மாறுதல்களுக்கு உள்ளாகக் கூடிய தலையிடா முறையின் (system) பல்வேறு அம்சங்களை ஆராய்வதிலேயே இந் நூல்களின் பெரும்பகுதி அமைவதையும் அறியலாம். ஆனால், இதற்கு விதி விலக்காக இருப்பவர் (சிட்ஜ்விக்

(Sidgwick)[6] ஆவார். அவர் தம் காலத்தில் நிலவிய சிக்கல்களைவிட, இந்தச் சிக்கல்கள் பற்றி அதிகக் கவனம் செலுத்தினார்; தனியார் நலன்களுக்கும் (Private interests), சமூக நலன்களுக்கும் இடையி லான வேறுபாடுகள் பற்றிய சிக்கல்களை முன்னணிக்குக் கொண்டு வந்தார். அவர் வருமானத்தின் குறைந்துசெல் இறுதிநிலைப் பயன் பாட்டுத் (Diminishing marginal utility) தத்துவத்தை ஏற்றுக் கொண்டார். அவருடைய பணி, விரிவான பகுப்பாய்வுகளுக்கு வாய்ப்பை ஏற்படுத்தியது.

சுருங்கச் சொன்னால், 'தடையிலாப் போட்டியில், பயன்பாடு உச்சநிலையை அடைவதற்கு இசைவாகச் சந்தை சமநிலையை அடையும் போக்கை உடையதாக விளங்குகின்றது' என்னும் நம்பிக் கையில் வேரூன்றியதாகத் தொன்மைப் பொருளியல் வாதிகளின் பொதுக் கண்ணோட்டம் அமைந்துள்ளது. மிகச் சில ஏகபோகத் தொழில் துறையுடன் வெறும் போட்டியுள்ள துறையை ஒப்பிடு வதன் மூலம் இதைச் சாதிக்க முடியலாம்.

பயன்பாட்டுக் கோட்பாட்டு அறவியலை (ethics of utilitaria-nism) மிதமிஞ்சி நம்பியிருப்பதிலிருந்து நல்வாழ்வியலை (Science of well-being) விடுவிப்பதற்கு முயன்ற புதிய சம்பிரதாயவாதிகளில் (Neoclassicists) முன்னணியில் விளங்குபவர் ஆல்பிரட் மார்ஷல் ஆவார். இக் கோட்பாட்டினை அவர் தமது 'பொருளியல் தத்து வங்கள்' (Principles of Economics) என்னும் நூலில் சுருக்கமாக விவாதித்துக் கண்டிக்கிறார். இதற்கு அவர் இக் கோட்பாட்டின் ஆங்கில விரிவுரையாளர்கள் எவரையும் குறிப்பிடாமல், பிரஞ்சுப் பொருளியல் அறிஞரான பாஸ்டியட் (Bastiat) என்பாரின் 'பொருள் ஒத்திசைவு' (Economics Harmonies) என்ற நூலை மட்டுமே குறிப்பிடுகிறார். அவர் தமது பகுப்பாய்வில், நலப்பொரு ளியல் பற்றிக் குறிப்பாகத் தெரிவித்தபோதிலும், இப் பொருள் பற்றிய விவாதத்திற்கு அவர் சில பக்கங்களையே ஒதுக்கியிருக்கிறார்.

இறுதிச் சமூகக் கோட்பாட்டைக் (Social Maxim) குறிப்பிடுவ தற்கு, உற்பத்தி அல்லது பொருள் நலம் என்பதைவிட, 'மகிழ்ச்சி' (Happiness), 'நல்வாழ்வு' (well-being)என்னும் சொற்களையே மார்ஷல் கையாள்கின்றார். பொருளியல் கொள்கைகளை வகுப் பதில் மகிழ்ச்சி, நல்வாழ்வு இவற்றின் பொருளியல் அம்சங்கள் அல்லது காரணங்களைத் தனியாகப் பிரிப்பதற்கு அவர் சிறிதும் முயலவில்லை. பொருள் சார்பற்ற காரணங்கள்,

[6] Sidgwick, H: 'The Method of Ethics' (London, 1877.

விளைவுகள், ஆகியவற்றிலிருந்து தனியாகப் பிரித்து, கொள்கைகளின் பொருளியல் விளைவுகளையும், நலத்தின் பொருளியல் காரணங்களையும் தனியாக ஆராய்வதை அவர் ஆதரிக்கவில்லை. மனிதனின் இறுதிக் குறிக்கோளில், மற்ற எல்லோரையும் போலவே, பொருளியல்வாதியும் கவனம் செலுத்தவேண்டும் என்பது அவருடைய புகழ்பெற்ற கொள்கையாகும்.

நலப் பொருளியல்பற்றிய முழுமையான கோட்பாடு யாதும் உருவாக்க மார்ஷல் முயலவில்லை. எனினும், தன்னல முனைவு நுண்கணிப்பு முறை (Hedoristic calculus) பற்றிய அவருடைய கண்டனம், பொருளியல் நல்வாழ்வு குறித்த பல்வேறு சிக்கல்களின் அளவினை அறுதியிடுவதற்கு (quantify) ஓர் கருவியை உருவாக்க வேண்டிய அவசியத்தை அவருக்கு உண்டாக்கிவிட்டது. உச்ச ஆக்க ஒதுக்கீட்டை (Maximum Productional Allocation) ரிக்கார்டோவின் கோட்பாடு வலியுறுத்துகிறது. இதற்கு மாறாகச், செல்வத்தையும் செல்வாதாரங்களையும் உத்தமப் பகிர்வு (Optional distribution) செய்வதை மார்ஷல் மிகுதியாக வலியுறுத்துகிறார். "பொது நல்வாழ்வை (general well-being), 'பெருகும் செல்வம் (increasing wealth) எந்த அளவுக்கு உயர்த்துகிறதோ, அதைவிட அதிக அளவுக்கு உயர்த்தும்படி செய்ய இயலுமா என்னும் சிக்கலை உன்னிப்பாக ஆராய இக்கால ஆர்வம் தூண்டுகிறது; மேலும், கூட்டாகவோ, தனியாகவோ பயன்பாட்டிலிருக்கும் செல்வத்தின் ஆக்கக் கூறுகளின் பரிவர்த்தனை மதிப்பானது Exchange value), மகிழ்ச்சியிலும் (Happiness), நல்வாழ்விலும் அது ஏற்படுத்துகின்ற உயர்வினை எந்த அளவுக்குத் துல்லியமாகச் சுட்டிக் காட்டுவதாக அமைந்துள்ளது என்பதை ஆராயவும் இது தூண்டுகிறது." பொருளியல் சுதந்திரம் (Economic freedom) பற்றிய தொன்மைமுறைக்கு (classical system) அவர் கூறும் முக்கிய மறுப்புகள் (objection) பின்கண்ட முடிவுகளுக்கு அவர் வரும்படி செய்துள்ளன: (1) கூடுதலான ஆதாயச் (Return) சூழ்நிலையில், பொருத்தமான வரிவிதிப்பு முறையின் மூலம் மொத்த மனநிறைவைக் (Aggregate satisfaction) கூடுதலாக்கலாம்; (ii) சமநிலையைப் பன்மடங்காக்கும் இயல்பு வாய்ந்ததாகப் பொருளியல் நிலை இருக்கவேண்டும்; (iii) வருமானத்தின் இறுதிநிலைப் பயன்பாடு (Marginal utility of income), தனிப்பட்டவர்களின் வருமான அளவைப் பொருத்ததல்ல; எனவே அது ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்குமிடையே வேறுபடுகிறது.

நுகர்வு (consumption) பற்றி விவாதிக்கும்போது, பயன்படுத்துவோரை மேம்படுத்தும் பொருள்கள் என்றும் பயன்படுத்து

வோரை மேம்படுத்தாத பொருள்கள் என்றும் பொருள்களை இருவகைப்படுத்துகின்றார். அவர் கருத்துப்படி, நுகர்வோர் உபரி (consumer's surplus) என்பது, தனிப்பட்ட நுகர்வோரின் நல ஆதாயங்களைக் (welfare gains) கணக்கிடும் அளவுகோலாகும். நுகர்வோர் உபரி, உற்பத்தியாளர்உபரி (Producer's surplus) பற்றிய கோட்பாடுகளை உருவாக்கியபின் அரைகுறையான இயற்பொருள் சார்ந்த (quasi-physical critariang of aggregate income) அல்லது தலா வருமானத்திற்குப் பதிலாக (per-capital income) சமுதாயச் செயல் குறிக்கோளாக நிகர நுகர்வோர் உபரியையும் உற்பத்தியாளர் உபரியையும் உச்ச நிலைக்கு உயர்த்துவதைப் பதிலீடு (substitute) செய்துள்ளார்.

நலப் பொருளியல்பற்றிய கருத்துகள் மார்ஷலின் நூல்களில் எந்த அளவுக்குக் காணப்படுகின்றன என்பதை இதுகாறும் கண்டோம். இவற்றிலிருந்து, அவருடைய 'பொருளியல் தத்துவங்கள்' என்னும் நூல் பகுப்பாய்வின் ஓர் இயக்கப் பொறியே (Engine) அன்றி, 'சமூகச் சீர்திருத்தவாதியின் செயல் திட்டம் அன்று' என்பது தெளிவானபோதிலும், மார்ஷல் ஒரு நலப் பொருளியல்வாதியே என்பது உறுதியாகத் தெரிகின்றது. மார்ஷலின் 'பொருளியல் தத்துவங்கள்' என்ற நூலைப்பற்றிய மதிப்புரையில் பேராசிரியர் எட்ஜ்வொர்த் குறிப்பிடுவதுபோல், 'முன்னேற்றத்தின் செல்வாக்கு அடிப்படையான இந்த ஆர்வமே 'வாழ்க்கைத் தரம்' (Standard of life) என்னும் புதிய சொல்லை உருவாக்க இவ்வாசிரியரைத் (மார்ஷல்) தூண்டியது; அந்தத்தரத்தின்படி, உயர்வு என்பதுஅறிதிறன் (Intelligence), ஆற்றல் (Energy), சுயமரியாதை (Self-respect), இவற்றின் உயர்வைக் குறிப்பதாகும்[7].

## இறுதிநிலைப் பகுப்பாய்வின் செல்வாக்கு

வால்ரஸ் (Walras) ஜெவான்ஸ் (Jevons), மெங்கர் (Menger) ஆகிய மூவரின் தனித்தனி முயற்சியினால், 1871 முதல் இறுதி நிலைப் பயன்பாட்டுக் கோட்பாடு (Concept of Marginal utility) உருவாகியது. இயற்பொருள் அளவுகளின் (Quantity of physical product) விகிதாசாரத்தில் நுகர்வோர் மன நிறைவின் (Consumer satisfaction) அளவுகள் அமைந்திருக்கும் என்பது தொன்மைப் பொருளியல் வாதிகளின் தோராய ஊகம் (Approximating assumption) ஆகும். இந்த ஊகத்திற்குப் பதிலாகக் குறைந்துசெல் இறுதி நிலைப் பயன்பாட்டுத் தத்துவத்தைப் (Principle of diminishing marginal utility) பதிலீடு செய்து, நலப் பகுப்பாய்வினை (Welfare

[7] Edgeworth, F. Y: Review Article 'Principles of Economics' 'Economic Journal' 1891, Vol 1, p. 617.

analysis) இயற்பொருள் நிலையிலிருந்து (Physical level) அக உணர்வு நிலைக்கு (Subjective level) இறுதி நிலைப் பகுப்பாய்வு விரிவாக்கியுள்ளது. இதன் காரணமாக, நலத்தைப் பொருத்த வரையில் இறுதிநிலைப் பகுப்பாய்வு (Marginal analysis) முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இறுதிநிலைக் கோட்பாட்டின் (Concept of Marginalism) வளர்ச்சியோடு, பகிர்வு பற்றிய சிக்கல் குறித்தும், கொள்கையின் ஓர் நோக்கமாகிய மறுமகிழ்வு நிகழ் திறன்கள் (Possibilities of redistribution) குறித்தும் அதிகக் கவனம் செலுத்தப் பட்டது. 19ஆம் நூற்றுண்டின் இறுதி ஆண்டுகளில், இறுதி நிலை உற்பத்தித் திறன் கோட்பாடானது (Marginal productivity theory), ஏற்றுக் கொள்ளப்பட்ட மரபுக்கோட்பாடாக (Orthodoxy) ஆகியது. பயன்பாட்டுக் கோட்பாட்டின் அறிமுகத்தினுல், வருமானத்தின் ஒதுக்கீடு, பகிர்வு இவற்றில் கவனம் செல்லலாயிற்று; இதன் பலனுகச் செல்வத்தின் சமபகிர்வானது (Ceteris paribus) 'மற்றவை மாறுதபோது' 'சமூகப் பயன்பாட்டை' (Social utility) உச்ச நிலைக்கு உயர்த்துகிறது என்னும் பெந்தாமின் கோட்பாடு புத்துயிர் பெற்றது. எனவே, விலைப் பொருளியலிலிருந்து (Price Econmics) வேறுபட்ட தனித் துறையாக நலப்பொருளியலை உருவாக்கியதே இறுதிநிலைப் புரட்சியின் (Marginal revolution) மிக முக்கியமான விளைவாகும் என்று உறுதியாகக் கூறலாம். இறுதிநிலைப் பகுப்பாய்வின் இன்றியமையாத பங்கு குறித்து நான்காம் அத்தியாயத்தில் விரிவாகக் காணலாம்.

### ஹாப்சானியக் கொள்கை (Hobsons' theory)

இருபதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில், நலத்தத்துவத்தின் ஆங்கில ஆதரவாளர்கள் மூவர் தோன்றினுர்கள். ஜான் ஏ. ஹாப்சன் (John A. Hobson), ஹென்றி கிளே (Henry clay), ஆர். ஜி. ஹாட்ரி (R. G Hawtrey) ஆகியோரே அம் மூவர். ரஸ்கின், சிட்ஜ்விக் ஆகியோரால் ஆதரிக்கப்பட்ட தொன்மைத் தன்னல முனைவுக் கொள்கைக்கு (Classical hedonism) எதிரான போக்கு பிரிட்டிஷ் பொருளியல் சிந்தனை முழுவதிலும் தோன்றியது. பொருளியல் அறிஞர்களிலேயே மிகவும் கவர்ச்சி மிக்க, ஏற்பமைதியில்லாத கோட்பாட்டில் பற்றுடையவர்களில் (Heretic) ஒருவராக ஹாப்சனை ஆக்கியது இந்தப் பயன்பாட்டுச் சூழ்நிலையே யாகும்.

ஹாப்சனினின் 'வேலையும் செல்வமும்' (Work and wealth, 1914) என்னும் நூல், நலப் பொருளியல் பற்றிய தெள்ளத் தெளிவான விளக்கவுரையாகும். உற்பத்தியின் நோக்கம், தனிப்பட்டவரின் சொந்த வளர்ச்சி, சமுதாய மேம்பாடு இவற்றையெல்லாம்

புறக்கணித்துவிட்டு, உற்பத்திக்கு மிதமிஞ்சிய முக்கியத்துவம் கொடுத்து வந்த சமவினைப் பொருளியல் வாதிகளுக்கு இந்நூலில் அவர் சரியான சாட்டையடி கொடுக்கிறார். முதலாளித்துவ அமைப்பு (Capitalistic organisation) மனிதர்களை யந்திரங்க ளாகக் கருதி நடத்துவதையும், மனிதச் செலவினைக் (human cost) கருத்தில் கொள்ளாமல் புறக்கணிப்பதையும் அவர் வன்மையாகக் கண்டிக்கிறார். 'பொருளியல் பொருள்கள் (Economic goods), பொருளியல் நடைமுறை (Economic process) இவற்றுக்கு மனித மதிப்பீட்டுக்கான (human valuation) தெளிவான முரண்பாடற்ற முறையை உருவாக்குவது அவருடைய நோக்கமாகும்.

மனித சமுதாயத்தின் இயல்புக் கட்டமைப்பு (Physical structure), ஆன்மிகக் கட்டமைப்பு (Spiritual structure) முழுவதையும் உள்ளடக்கிய அடிப்படை நலக் (organic welfare) கொள்கையே அவருடைய கோட்பாட்டின் உயிரோட்டமாகும். 'செல்வம் ஏது மில்லை; வாழ்க்கைதான் உண்டு' என்னும் ரஸ்கினின் கொள்கையை ஆதரவுடன் மேற்கோள் காட்டும் ஹாப்சன் 'அரசியல் வாதி களுக்கு, வெறும் பொருளியல் வாதிகள் கூறும் ஆலோசனை, பொது நன்மை (public good) குறித்த இந்த விரிவான கொள்கைக்கு இணங்கப் பொருத்திக் கொள்ளக் கூடியதாக அல்லது திருத்திக் கொள்ளக் கூடியதாக எப்பொழுதும் விளங்க வேண்டும்' என்று கூறியுள்ளார். பொருளியல் அடக்குமுறையை (Economic oppression) எதிர்ப்பதற்கு அறவியல் பொருளியல் கொள்கை (Ethical economic policy) ஒன்றை வகுப்பதை அவர் ஆதரிக்கிறார். மேலும், சமூகச் சீர்திருத்தத்திற்கு அடிப்படையாக, ஒவ்வொருவரின் திறமைக்கேற்ற ஊதியம்' என்னும் முழக்கத்தை அவர் வகுத்துள் ளார்.

ஹாப்சன் தம் கோட்பாட்டை உருவாக்குவதில் கையாண்ட தனித்தன்மையே (Individuality) அவருடைய சிந்தனையின் தனிச் சிறப்பாக அமைந்துள்ளது. ஹாப்சனின் இந்தத் தனித்தன்மை— 'கோட்பாட்டு மனிதன், சமூக மனிதன், கலை மனிதன் ஆகிய மூவரின் பண்புகளும் ஒருங்கிணைந்த தன்மையின் வெளிப்பாடு என அறிஞர் ஹார்வி டபிள்யூ பெக் (Harvey W. Peck) மிகப் பொருத்த மாக வருணித்துள்ளார். பொருளாதாரச் சிந்தனைக்கு ஹாப்சன் கொடுத்த வெவ்வேறு வகை அமைப்பு வடிவத்தை (orientation), 'பொருள்வள மதிப்பீட்டை (material evaluation) விடுத்து அதற் குப் பதிலாக மனிதாபிமானத்தின் அடிப்படையிலான கோட் பாட்டை நிறுவுகின்ற அழகுணர்ச்சி தழுவிய குறிக்கோளை அவர் மேற்கொள்வதிலிருந்து கண்டு கொள்ளலாம்.' இதிலும் ரஸ்கினியச்

சிந்தனையின் 'மனிதாபிமான, அறவியல்' போக்கினையுடைய நெறி முறைத் திறனை (Directive force) அறியலாம். நலப் பொருளியல் பற்றிய கோட்பாட்டு அம்சங்கள் குறித்து ஹாப்சன் எதுவும் கூற வில்லை யென்றாலும், மனிதாபிமானக் குறிக்கோளே, அவருடைய பொருளியலுக்கு 'நலம்' (Welfare) என்னும் இடுபெயரை ஈட்டித் தந்திருக்கிறது. உள்ளூர மிகவும் கடினமானதும், விளைவுகளைத் தெளிவாக உய்த்துணர இயலாததும், உன்னிப்பான சிந்தனையைச் செலுத்தவோ முறையான எழுத்தில் ஈடுபடவோ பெரும்பாலான பொருளியல் அறிஞர்களுக்கு அச்சத்தைக் கொடுக்கக் கூடியதுமான ஒரு பொருளை வன்மையாகக் கண்டிப்பதற்குரிய துணிவு ஹாப்சனிடம் அமைந்திருந்தது. இந்த உண்மையே அவருடைய பொருளியல் முறையின் முக்கியத்துவத்திற்கு உண்மைக் காரணமாகும். அவர் இப் பொருளின் விளிம்பைத் தொட்டதைத் தவிர, வேறு பெருஞ் சாதனை எதையும் செய்ய முடிந்ததா என்பது ஆராய்ச்சிக்குரிய மற்றொரு செய்தியாகும். பகுப்பாராய்ச்சி முறைப்படி மதிப்பிடும் பொழுது, பிகோவின் நலக் கோட்பாட்டைக் குறிக்கோள் அடிப்படையிலானது என்றும், ஹாப்சனின் கோட்பாடு பொருளியல் பற்றிய அவருடைய மனிதாபிமானக் கொள்கையின் இயற்கையான விளைவினால் உருவாகியது என்றும் கூறலாம். இந்த மதிப்பீடு அறிஞர் பெட்டர் (Fetter) என்பாரின் கருத்தையொட்டியதாக அமைந்துள்ளது. 'எல்லா விஞ்ஞானங்களும் மனித நலன் (human interest) மூலமாகத் தம் தகுதியைப் பெறுகின்றன. எனவே, தனிநலம் சார்பற்ற (Disinterested) விஞ்ஞானம் என்று சொல்லுகின்ற பொழுது, இந்தக் கேள்விகளுக்கான விடைகள் அறிவினால் மட்டும் மதிக்கப் படுகின்றன என்றோ, அல்லது அந்த அறிவின் பின்னணியில் அதைப் பயன்படுத்தும் தேவை பற்றிய உணர்வு மறைந்திருக்குமெனில், அந்தப் பயன்பாடானது பொது நலன் வடிவிலேயே கருதப்படுகிறதேயன்றிச், சில குறிப்பிட்ட ஆதாயங்களின் வடிவில் அல்ல என்றோதான் நாம் பொருள் கொள்கிறோம்'[8] என்று பெட்டர் கூறுகின்றார்.

நலத்திலிருந்து அதற்கு அடுத்தபடியாகிய சமூகப் பயன்பாட்டுக் கோட்பாட்டுக்கு (Concept of social utility) ஹாப்சன் செல்கிறார். 'அரசியல் பொருளியலை மனிதச் செல்வம் பற்றிய விஞ்ஞானமாக மாற்றுவதற்குப், பல முக்கியமான மாறுதல்கள் இன்றியமையாத தேவை' என்று அவர் கருதுகிறார். அம் மாறுதல்களுள், (i) பணச் சேமிப்பும் (Deposit of money), (ii) செல்வத்தின் தரமாகச் சமூகப் பயன்பாட்டைப் பதிலீடு செய்

[8] Fetter, F.A: 'Price Economics versus welfare Economics' American Economic Review Vol. X, September 1920.

வதும் முக்கியமானவை. ஹாப்சன் தமது ஆரம்ப நூல்களில், ஜே. பி. கிளார்க், செலிக்மான் (Seligman) ஆகியோரின் கருத்தோடு மிகவும் ஒட்டிய ஒருவிதக் கருத்தைத் தெரிவித்துள்ளார். ஆனால், பின்னர் அறவியல் கருத்துகளை வெகுவாகத் தழுவியதால், அவருடைய கோட்பாடு தெளிவற்றதாகப் போய்விட்டது. 'அடிப்படை நலம்' (Organic welfare) என்ற சொல்லுக்கு அவர் என்ன பொருள் கொள்கிறார் என்பதற்கு முழுமையான-மன நிறைவான விளக்கத்தை அவரால் கூறமுடியவில்லை. அவருடைய வாரிசுகளும், ஆதரவாளர்களும்கூட இதற்குச் சரியான விளக்கம் தரவில்லை.

ஹாப்சனின் எழுத்துகளை ஆத்திரத்தின் வெளிப்பாடு என்றும், தெளிவற்றன என்றும், ஒருசார்பானவை என்றும் கூறி ஒதுக்கிவிடுபவர்களும் உண்டு. அவர்களுடைய கூற்றும் ஓரளவு உண்மையே. மனிதச்செலவினங்களின் (Human costs) பண்பு சார்ந்த ஒருங்கிணைத்தலையும் Qualitative aggregation), அதன் பொருள்பற்றிய பண்புசார்ந்த விளக்கத்தையும் நிறுவுவதற்கான மாற்றுக் கோட்பாட்டுத் திட்டம் (Alternative concestional scheme) எதையும் அவர் தெரிவிக்கவில்லை; இது அவரிடம் காணப்படும் பெருங் குறையாகும். ஜே. எம். கிளார்க்கினுடைய 'பொதுச் செலவிலும்', இறுதிநிலைச் சமூக நிகர உற்பத்திக்கும் (Marginal social net product), இறுதிநிலைத் தனியார் நிகர உற்பத்திக்கும் (Marginal private net product) இடையே பிகோ வகுத்துள்ள வேற்றுமைகளிலும் (Divergences) பகுப்பாய்வு முறையோடு ஹாப்சனின் கண்டனங்கள் இணைக்கப்பட்டுள்ளன. ஆயினும் பிகோவின் தொழில் நுட்ப விளக்கம் மிகச் சிறந்த கலைஞானத்துடன் விளங்குவதால், அவருடைய கருத்தை எளிதாக ஒதுக்கித் தள்ளிவிட இயலாது.

அறிஞர் ஹாட்ரி (Hawtrey), ஒரு ஹாப்சானியக் கொள்கை வாதியாவார். அறவியலிலிருந்து (Ethics) பொருளியலைத் தனியாகப் பிரிக்க இயலாது என்பதும், தனிப்பட்டவரின் பணத்துக்கு மாற்றாக அவருடைய மனநிறைவை உச்சநிலைப்படுத்துவதே பொருளியல் நடவடிக்கையின் பலனாக இருக்கவேண்டும் என்பதும் அவருடைய கருத்தாகும். போலிப் பலன்கள் (false ends) விலக்கப்பட வேண்டும்; நலம் அதன் ஆழமும் அகலமும் வாய்ந்த பொருளியை போடு, பொருளியல் நடவடிக்கையின் பலனாக அமைக்கப்பட வேண்டும்[9] என்றும் அவர் கூறுகிறார். இவ்வாறாக உழைப்பினால் உண்டாகும் நலத்தின் ஒருபகுதியாகப் பொருள் நலத்தை அவர்

[9] Hawtrey, R.G: 'Economic Destiny (London) 1944) p. 202.

கொள்கின்றார். பொருள்களைப், பயன்பாட்டுப் பொருள்கள் (Utility products) ஆக்கப் பொருள்கள் creative products) என இருவகையாகப் பிரிக்கலாம். உடல் நலனையும், வாழ்க்கையையும் பராமரிக்கக் கூடியதும், காயம், வலி, வசதிக் குறைவு, சோர்வு இவற்றிலிருந்து பாதுகாக்கக் கூடியதுமான பொருள்கள் 'பயன் பாட்டுப் பொருள்கள்' எனப்படும். சில ஆக்க நலன்கள் அல்லது மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடியவை 'ஆக்கப் பொருள்கள்' ஆகும். ஆயின், இவ்விரு பொருள்களுக்கு மிடையிலான பாகுபாடு தெளி வாக இல்லை.

நலம் என்பது செல்வத்தின் வடிவில் மதிப்பிடக்கூடியதொன்றல்ல; 'இரு வேறு நபர்களின் அனுபவங்களை ஒப்பிடுவதன்றி, ஒரே நபரின் வெவ்வேறு அனுபவங்களை ஒப்பிடுவதில் கூட எண்ணியல் அளவைக்கு (Numerical measurement) நலமானது எளிதில் கட்டுப் படுவதில்லை. வருமானப் பகிர்வுபற்றிக் குறிப்பிடுகையில், வரு மானம் நலத்தைப் பெருக்குகிறது என்ற காரணத்தினால், வருமானப் பகிர்வுக்கு ஒரு முறையைப் பரிந்துரைக்க முயல்வது, பகிர்வை ஓர் இறுதி விளைவாக (end) எண்ணாமல் ஒரு வழிவகையாகக் (Means) கருதும் முயற்சியாகும்' என்று அவர் கூறுகிறார்.

### பிகோவின் மரபுக் கோட்பாடு

நிறைவுப் போட்டியானது (Perfect competition) செல்வா தாரங்களின் உத்தம ஒதுக்கீட்டை (optimum allocation) உண்டு பண்ணுகிறது என்றும், அதனால் உற்பத்தி உச்சஅளவுக்கு உயர்த்தப் படுகிறது என்றும் தொன்மைப் பொருளியல்வாதிகள் (Classical economics) கருதுகிறார்கள். நிறைவுப் போட்டியினால் எப்பொழு தும் உற்பத்தி உச்ச அளவை எட்டுவதில்லை என்று முதன் முதல் நிரூபித்தவர் மார்ஷல் ஆவார். ஏகபோகங்களின் பெருக்கம் (growth of monopolies), காரணிகளின் இடம்பெய ராமை) (Immobility of factors), காரணிகளின் பகுபடாமை (Indivisibility of factors) பேரம் பேசும் நிலையில் ஏற்றத் தாழ்வு (Inequalities of beginning position) போன்ற பல்வேறு இடையூறுகளைக் (obstacles) குறிப்பிட்டுவிட்டு; வளர்ந்துசெல் விளைவைத் (Increasing returns) தொழில்களை நிலைநாட்டுவதன் மூலம் போட்டி உச்சத்திற்கு (Competitive Maximum) மேலும் உற்பத்தியைப் பெருக்கலாம் என்னும் கோட்பாட்டையும் அவர் வகுத்தார். 'பொருளியல் கொள்கையின் விதியமைப்புகளுக்குப் (Prescriptions) பயன்பாட்டுக் கோட்பாட்டை ஓர் உறுதியான

அடிப்படையாகக் கொள்வதற்கு'[10] மார்ஷல் மட்டுமின்றி, டூபுயிட் (Dupuit), வால்ரஸ் (Walras), எட்ஜ்வொர்த் (Edgeworth) போன்ற பொருளியல் அறிஞர்கள் பலரும் முயன்றுர்கள். முக்கிய மாக மார்ஷலின் பணி ஒரு தலைமுறையினரின் பணிக்கு வழிகாட்டி யாக விளங்கியது. 1890ஆம் ஆண்டுக்குப் பின்னர் பல ஆண்டுகள் வரை வெளிவந்த பொருளியல் நூல்கள் எல்லாம், 'மார்ஷலின் கோட்பாடு, முறைகள் ஆகியவற்றின் வளர்ச்சியாகவும், விளக்கங்க ளாகவும், துணைமுடிபுகளாகவும் (Corrallaries) அமைந்திருப்பதைக் காணலாம்[11]. இந்தப் பின்னணியில் பிகோவின் பொருள் நலக் கோட்பாட்டை ஆராயும்பொழுது, அது மார்ஷலின் இந்த மாபெரும் பொருளியல் சிந்தனையின் உச்சநிலை என்றே சொல்ல லாம். உண்மையைச் சொன்னல் மார்ஷலின் மரபுக் கோட் பாட்டை 'முறைபடுத்தியதன்' (Systematisation) வடிவமே 'நலப் பொருளியல்' (Economics of welfare) என்னும் பிகோவின் நூலாகும்.

ஆல்பிரட் மார்ஷலின் சீடர்களில் தலையாயவராக விளங்கியவர் பிகோ ஆவார். மார்ஷலின் மறைவுக்குப் பிறகு, அவருடைய 'பெரும் பொறுப்பு' (grant mantle) பிகோவைச் சார்ந்தது. பல்வகைப் பொருள்களைப்பற்றி, முக்கியமாகப் பொது நிதியியல் (Public-Finance) வாணிகச்சுழல் (Business cycle) ஆகியவைபற்றிப் பிகோ எழுதினர். எனினும், 'அவருக்குப் பெயரும் புகழும் பெற்றுத் தந்தது 'நலப் பொருளியல்' என்னும் நூலேயாகும். இந் நூல், இக் காலத்திற்கு ஒவ்வாததாக இருப்பினும், நலப் பொருளி யல் துறையில் இன்றும் தலைசிறந்த நூலாகக் கருதப்படுகின்றது.' அவர் முதலாளித்துவத்தின் ஆதரவாளர் என்றாலும், தலையிடாக் கொள்கையை (Laissez-fair policy) ஆதரிக்காதவர் என்பதை அவருடைய எழுத்துகள் உணர்த்துகின்றன. பிகோவின் நூல் களில் எல்லாம் மார்ஷலின் கொள்கைகளும், பொருளியல் முறை களும் இழைந்தோடுவதைக் காணலாம். பிகோவைப் பொருத்த வரையில், 'பொருளியல் என்பது அறிவியலின் வேலையாள் ஆகும்; அதாவது, பொருளியல் என்பது ஓர் விளைவு (end) அன்று; ஒரு விளை வினை மேம்படுத்துதற்குரிய ஒரு வழிவகையேயாகும். 'விரிவான நடைமுறை சாத்தியமான வழிதுறைகளை (expedients) வகுப்பது பொருளியல்வாதிகளின் வேலையல்ல; நடைமுறை சாத்தியமான வழிதுறைகளை வெற்றிகரமாக வகுப்பதற்கு உதவக்கூடிய கோட் பாட்டு அமைப்பையும் (organisation of thought) முறையையும்

[10] Hicks, J.R: 'The foundations of welfare Economics' 'Economic Journal' December, 1939, p. 697.

[11] Schumpeter, J. A: 'Ten Great Economists (London, 1956).

(Method) வகுத்துக் கொடுப்பதே பொருளியல் அறிஞர்களின் வேலையாகும்' என்னும் மார்ஷலின் கருத்தை பிகோ ஒப்புக்கொள்கின்றார். 'நலத்தைப் பெருக்குவதற்கான எளிய நடைமுறை சாத்தியமான வழிதுறைகளைப் பொருளியல் வாதிகளின் உழைப்பிலிருந்து அரசியல்வாதிகள் உருவாக்கிக் கொள்ளவேண்டும் என்கிறார் பிகோ. நுகர்வோர் உபரிக் (consumers surplus) கோட்பாட்டை அறிஞர் ட்யூபேட் (Dupait) தோற்றுவித்து, அதைத் தேவை வளைகோட்டிற்கு (demadd curve) கீழாக, விலைக்கோட்டிற்கு (Price line) மேலாக உள்ளடங்கிய பரப்பினைக் (area) கொண்டு அளந்தார். இக் கருத்தை மார்ஷல் யாவரும் அறியும்படி செய்தார்; பிகோ அதே கருத்துக்கு மேலும் விளக்கம் கொடுத்தார்.

மார்ஷலின் பகுப்பாய்வுக்கும், பிகோவின் பகுப்பாய்வுக்குமுள்ள வேறு சில தொடர்புகளையும் குறிப்பிட வேண்டும். பொருள் நலம் பற்றிய விரிவான கோட்பாட்டை உருவாக்குவதில், மார்ஷலை அப்படியே பிகோ பின்பற்றாமல், சிட்ஜ்விக், மார்ஷல் ஆகிய இருவரின் கொள்கைகளையும் ஒருங்கிணைத்து, அக்கோட்பாட்டை அவர் வகுத்துள்ளார். மார்ஷலின் கொள்கையில் காணப்படும், தேசிய வருமானம் (National income), தலா வருமானம் (per capita income) ஆகிய இரண்டையும், நலத்தைச் சுட்டிக் காட்டும் கருவிகளாக பிகோ மீண்டும் கையாள்கின்றார்; மேலும், வெவ்வேறு பொருள்களின் ஒப்புமைப் பயன்பாடுகளைச் (Relative utilitives) சுட்டும் கருவிகளாகச் சந்தை விலைகளை (Market prises) அவர் கொள்கின்றார். நெகிழ்வுத் தேவை (inelastic demand) ஆகியவற்றையுடைய பொருள்களின் மீது வரிகளின் விளைவுகளை எடுத்துக் காட்டுவதற்கு நுகர்வோர் உபரிக் கோட்பாட்டை மார்ஷல் பயன் படுத்தினார்; இதன்மூலம், அரசு தலையிட வேண்டியதன் அவசியத்தை அவர் நிரூபித்தார். 'நுகர்வோர் உபரிக் கோட்பாட்டின் அறிவுவழி மூதாதை (Intellectual ancoster) எனக் கருதப்படும் சிந்தனைகளையே முழுக்க முழுக்கத் தனது அடித்தளமாக நலப்பொருளியல் கோட்பாடு கொண்டிருக்கிறது'. எனினும், ஒரு இடத்திலேனும் நுகர்வோர் உபரிக் கோட்பாட்டைத் தலையாய கொள்கையாக பிகோ பயன்படுத்தவில்லை. வளர்ந்து செல் செலவினத் தொழில்கள் சம்பந்தமாக மார்ஷலியன் நிபந்தனைகளை (Marshellian conditions) பிகோ முதலில் வகுத்தார். ஆனால், ஆலின் யங் (Ailyn Young), நைட் (Knight), ராபர்ட்சன் (Robertson) ஆகியோரின் கண்டனத்தின் விளைவாக, அவர் இந்த நிபந்தனைகளைப் பெரிதும் திருத்தி யமைத்தார். பிகோ தம் கருத்தை மாற்றிக் கொண்டதற்கு யார் யார் காரணம் என்று திட்டவட்ட

மாகக் கூற இயலாததாயினும் அவர் தமது மூலக் கொள்மையை, மார்ஷலின் கருத்தின் அடிப்படையில் திருத்திக் கொண்டார் என்பது மட்டும் உண்மை.

பணத்தின் இறுதிநிலைப் பயன்பாடு, பணக்காரர்களைவிட ஏழைகளுக்கு அதிகம் என்னும் கருத்தை மார்ஷல் ஆதரித்தார். மார்ஷலின் 'பொருளியல் தத்துவங்கள்' (Principles of Economics) என்ற நூலின் அடிப்படையே இக் கருத்துதான். பிகோவின் கொள்கைகளும் இந்த அடிப்படைக் கருத்தினடியாகப் பிறந்தவையே; குறைந்த தீவிரத் தேவைகளுக்குப் பதிலாக, மிகுந்த தீவிரத் தேவைகளை நிறைவு செய்து கொள்வதற்கு வருமானம் உதவுகிறது: எனவே, பணக்காரர்களிடமிருந்து ஏழைக்கு வருமானத்தை மாற்றுவதினால், மொத்த மன நிறைவு (aggregate sum of satisfaction) பெருகுதல் வேண்டும் என்பது தெளிவாகிறது. பிகோ தமது குருவைவிட ஒருபடி மேலே சென்று, உண்மையான வருமானங்களின் சமப்பகிர்வு (Equitable distribution) நடைபெற வேண்டும் என்று வலியுறுத்துகின்றார். இதுகாறும் கூறியவற்றிலிருந்து, மார்ஷலியன் மரபுக் கொள்கைக்கும் பிகோவின் கொள்கைக்கும் நெருக்கமான தொடர்பு இருக்கிறது என்றும், தனியார், சமூக இறுதிநிலை நிகர உற்பத்திப் பொருள்களுக் கிடையிலான வேற்றுமைகளோடு கூடிய பிகோவின் கோட்பாடு, மார்ஷலின் 'பொருளியல் தத்துவங்க'ளுக்கும் பிகோவின் 'நலப் பொருளிய'லுக்குமிடையே தெளிவானதொரு பிணைப்பாக அமைந்திருக்கிறது என்றும் அறியலாம்.

பொருளியலுக்கு மார்ஷல் கூறியுள்ள விளக்கத்தை 'நல் வாழ்வு அல்லது நலம் பற்றிய ஆராய்ச்சி என்று பிகோ கொள்கின்றார் என்பதையும், பணம் என்னும் அளவு கோலுடன் நேரடியாகவோ மறைமுகமாகவோ தொடர்பு படுத்தக்கூடிய பொது நலத்தின் ஒரு பகுதியே பொருள் நலம் என அவர் விளக்கியிருப்பதையும் ஏற்கெனவே கண்டோம். ஆயினும் ஒரு வேறுபாடு உண்டு. நல்வாழ்வின் (நலத்தின்) அளவிடும் தன்மையை (Measurability) மார்ஷலின் பொருள்விளக்கம் வற்புறுத்தவில்லை. செயலின் தூண்டுதல்களுக்கான (Motives) சக்தியின் விளைவையே மார்ஷல் வலியுறுத்துகின்றார். மேலும், 'பொருளியல் அறிஞர்கள் பயன்படுத்தும் அளவுகோல் குறைபாடுடையதாய் இருப்பதன் காரணமாகப் பொருள்நலம் (Economic welfare), பொருள் சார்பற்ற நலம் (non economic welfare) என்னும் பாகுபாடுகள் உண்டாகியுள்ளனவேயன்றி, முன்னதாகக் கொண்ட எண்ணம் (Preconception) காரணம் அல்ல' என்ற மார்ஷலின் கருத்து பிகோவின் கருத்துக்கு மாறானதாகும்.

பிகோவுக்கு முன்னர் 'நலம்' என்னும் சொல் மிகவும் அரிதாகவே பயன்படுத்தப்பட்டுவந்தது. 'மன நிறைவு' (Satisfaction) என்னும் சொல்லைத்தான் பெரும்பாலும் பயன்படுத்தி வந்தார்கள். பொருளியல் நூல்களின் மூலம் 'நலம்' என்ற சொல்லுக்கு வலிமை சேர்த்தார் பிகோ. அதன்பின், மன நிறைவு, மகிழ்வு (happyness) என்னும் சொற்கள் வழக்கற்றுப் போயின. எனினும் மகிழ்வு என்ற சொல்லைவிட நலம் என்ற சொல் அதிக அறவியல் நோக்குடையதாகவும் (Ethical) குறைந்த விளக்கமுண்டயதாகவும் (Descriptive) அமைந்திருப்பதாகக் குறை கூறுவோரும் உண்டு.

'பொருள்நலத்தின் (economic welfare) விளைவுகள்பற்றிய பண்பு சார்ந்த முடிவுகள் (Qualitative conclusives) மொத்த நலத்தின் (Total welfare) விளைவுகளுக்கும் பொருந்தும்' என்று பிகோ எண்ணினார். இதை நலப் பொருளியல்வாதியின் 'உத்தேசம்' (Presumption) என்று அவர் அழைத்தார். இந்த உத்தேசத்திற்குப் பொருளியல்வாதிகளிடையே மறைமுகமான அல்லது வெளிப்படையான ஆதரவு பெருமளவு கிடைத்தது. மேற்கு ஐரோப்பிய நாடுகள் போன்ற நிலையான பொதுப் பண்பாடு நிலவும் நாடுகளுக்குதான் தமது இந்த உத்தேசம் செல்லுபடியாகும் என்று பிகோ கருதினார்.

பிகோவின் நலப் பொருளியல் பல அமைப்புகளுடையது. அவை பகுப்பாய்வு (analytical), பயன்முறை (applied) என இரு பெரும் பிரிவுகளில் அடங்கும். நலம், பொருள் நலம், தேசீய வருமானத் தொகை (National Dividend) ஆகியவற்றையும் தேசிய வருமானத் தொகையில் ஏற்படும் மாறுதல்களை அளவிடுதற்குரிய குறியீட்டெண்கள் (Index numbers) கோட்பாட்டின் முக்கியத்துவத்தையும் முதல் பிரிவு ஆராய்கிறது. பொருள் நலத்தையும் (Economic welfare), பொதுநலத்தையும் (General welfare) பிகோ வேறுபடுத்திக் காட்டுவதுடன், நலத்தைச் சுட்டும் குறியீடாக (Index) தேசீய வருமானத்தைக் (National income) குறிப்பிடுவது மிகப் பொருத்தமானது என்பதையும் விளக்குகிறார். தேசிய வருமானத்தொகைக் (National Dividend) கோட்பாட்டை, மார்ஷலின் 'பொருளாதாரத் தத்துவங்கள்' என்னும் நூலின் மையக்கருத்தாகப் பிகோ கருதுகிறார். தேசீய வருமானத்தொகை (அல்லது நுகர்வு வருமானம்) என்ற இந்த மையக்கருத்துடன் ஒப்புமையுடையதாகப் பிகோவின் நூல் அமைந்துள்ளது. அவ்வாறே, தேசிய வருமானத்தை ஒரு பொருளியல் முறையின் முக்கிய குறிக்கோளாகவும் (focus) பிகோ ஆக்குகின்றார். குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாடு Diminishing marginal utility), பற்றிய விரிவான விளக்கத்தை ஏற்றுக்கொள்ளும் அவர்

ஏழைகளுக்குச் சாதகமான 'மாற்றங்களை' (Transferences) வலியுறுத்துவதுடன், வருமானத்தை இன்னும் அதிக அளவில் சமப் பகிர்வு (Equitable distribution) செய்யவேண்டியதற்கான காரணங்களையும் கூறுகின்ருர். வருமானத்தை ஏழைகளுக்கு மாற்ற வேண்டும் என்ற கருத்தை பிகோ தனது பிற்கால நூல்களிலும் வலியுறுத்துகின்ருர். 'சமுதாயத்தில் வசதி படைத்தவர்களிடமிருந்து ஏழை எளியவர்களுக்குப் பணவருவாயை மாற்றுவதைப் படிப்படியான வரிகளின்மூலம் வாதிக்கலாம்' என்று அவர் ஆலோசனை கூறுகிருர். இத்தகைய மாற்றங்களினுல் முயற்சிகளும் தொழில்களும் உடனடியாகப் பாதிக்கப்பட்டு, அதனுல் உண்மையான வருமான வாய்ப்புகள் மறைமுகமாகப் பாதிக்கப்படும் என்பதை அவர் அறியாமலில்லை. ஆயினும், ஏழைகளின் நிலைமை உயர்த்தப்படுமானுல், அதனுல் அவர்களுடைய திறமை பெருகி, அவர்கள் கடுமையாக உழைப்பார்கள் என்று அவர் கருதுகின்ருர். வருமான மாற்றங்களினுல் வருமான ஆதாரங்களுக்கு (Potential income) மறைமுகமாக ஊறு நேரிடும் என்பதும், இம்மாற்றங்களினுல் இறுதியில் பொருள் நலனுக்குச் சாதகம் ஏற்படுவதற்குப் பதிலாகப் பாதகம் ஏற்படும் என்பதும் உண்மையே. தேசிய வருமானத்தில் ஏழைகளுக்கு அதிகப் பங்கு கொடுப்பதற்கு வகுக்கப்படும் திட்டங்கள் மோசமானவையாக இருக்குமானுல், அவர்கள் பெறும் முழுத்தொகையானது உண்மையில் குறைந்து போகக்கூடிய அளவுக்குத் தேசிய வருமானம் மிகவும் குறைந்து போய் விடும். ஆனுல் இதன் காரணமாக, எதையும் செய்யாமல் இருந்த இடத்திலேயே இருக்க வேண்டும் என்பதும் சரியல்ல. முன்னேற்றப் பாதையில் செல்லும் பொழுது, வழியில் எதிர்ப்படும் மறைமுக ஆபத்துகளை உணர்ந்து மிகவும் கவனத்துடன் செல்ல வேண்டும் என்பதையே இந்த எச்சரிக்கைகள் உணர்த்துகின்றன.

இரண்டாம் பகுதியின் தொடக்க அத்தியாயங்களில் தேசிய வருமானத் தொகையின் அளவு, பல்வேறு பயன்களுக்குச் செல்வாதாரங்களைப் பகிர்தல் ஆகியவை பற்றி விவாதிக்கப் பட்டுள்ளது. இவ்வத்தியாயங்கள் பெரும்பாலும் பகுப்பாய்வாகவே (Analytical) அமைந்துள்ளன. இந்தப் பகுதியில்தான், பல்வேறு பயன்களில் தனி, மற்றும் சமூக விளைவுகளின் சமத்துவத்தின் அடிப்படையிலான உத்தம நலம் (optimum welfare) பற்றிய பொருள் விளக்கத்தைக் கொண்ட முக்கியமான அத்தியாயங்கள் இடம் பெற்றுள்ளன.

கடும் போட்டியில் (Thorough going competition) 'விற்பனை விலைக்குச் சமமாக இறுதிநிலைச் செலவை (Marginal cost) ஆக்கக்

கூடிய அளவுக்கு ஒவ்வொரு நிறுவனமும் உற்பத்தி செய்யும் ஒரு நிலைதான்'[12] பொருளியல் உத்தமம் (Economic optimum) என்று அவர் வரையறுத்துள்ளார். இந்த நிலை, சமூக உத்தம (Social optimum) நிலையிலிருந்து மாறுபட்டதாக இருக்கலாம்; மேலும் பொருளியல் கண்ணேட்ட அளவுகளைவிட அதிகமான அளவில் சில பொருள்களை உற்பத்தி செய்ய உதவும் வகையில் இந்த நிலை சமுதாயத்திற்குப் பயனுடையதாகவும் இருக்கக் கூடும். இந்தப் பொருளியல் உத்தமத்தை அடைவதற்கு அவர் ஒரு விதியையும் வகுத்துள்ளார். 'நடப்பு விலைகளை (ruling prices) விட, இறுதிநிலைச் செலவுகள் (Marginal costs) கூடுதலாக உள்ள நிறுவனங்கள் எல்லாம் சுருங்க (contract) வேண்டும்; நடப்பு விலைகளுக்குக் குறைவாக இறுதிநிலைச் செலவினங்களையுடைய நிறுவனங்கள் யாவும் விரிவடைய (Expand) வேண்டும்' என்பது அவர் வகுத்துள்ள விதியாகும். இதற்கு மாருக, விலையின் அளவுக்குக் கீழ் சராசரி அடக்க விலை (Axerage cost) குறையுமாஞல், அது இறுதிநிலைச் செலவினக் குறைபாட்டைக் காட்டுவதாகும். எனவே, இந் நிலையை உடைய எல்லா நிறுவனங்களும் விரிவடைதல் வேண்டும் என்பதும் அவர் கூறியுள்ள கருத்தாகும்.

இறுதிநிலை நிகர உற்பத்தியில் (Marginal net product) இரண்டு வகைகள் உண்டு. அவை இறுதிநிலைச் சமூக நிகர உற்பத்தி (Social Marginal Social Net product MSNP) இறுதிநிலைத் தனியார் நிகர உற்பத்தி (Marginal puiuali Net product MPNP) என்பன. 'ஏதாவது ஒரு குறிப்பிட்ட பயன் அல்லது இடத்தில் செல்வாதாரங்களின் இறுதிநிலை உயர்வு (Marginal increment) காரணமாக உற்பத்தியாகும் மொத்த நிகரப் பொருள்களை (Physical things) அல்லது செய்யப்படும் ஊழியங்களை (objective services), அவை யாருக்குப் போய்ச் சேர்ந்த போதிலும், அவற்றை இறுதிநிலைச் சமூக நிகர உற்பத்தி எனலாம்'. சந்தையில் அதற்கு ஈடான பணமே அதன் மதிப்பு ஆகும். ஏதேனும் ஒரு குறிப்பிட்ட பயன் அல்லது இடத்தில், செல்வாதாரங்களின் உயர்வு காரணமாக உற்பத்தியாகும் மொத்த நிகர உற்பத்திப் பொருள்களின் அல்லது செய்யப்படும் ஊழியங்களின் ஒரு பகுதியே இறுதிநிலைத் தனியார் நிகர உற்பத்தி என்பதாகும். அது முதலில் செல்வாதாரங்களை முதலீடு செய்கின்ற நபர்களுக்குப் போய்ச் சேர்கின்றது. எல்லா இடங்களிலும், தனியார் நிகர உற்பத்திப் பொருள்களும், சமூக நிகர உற்பத்திப் பொருள்களும் ஒருங்கிணையுமாஞல் (coincide) அப்பொழுது

[12] Pigou, A C: 'Cost and output economic Journal' March 1954 p. 181.

பொருள் நலம் உச்ச நிலையை அடைகிறது. 'அறியாமையினால் ஊறு ஏற்படாத வரையில், தடையற்ற தன்னலத்தினால் (Free play of self interest)', தேசிய வருமானத் தொகையினை உயர்த்தும் அளவுக்குச் செல்வாதாரங்களின் பகிர்வு ஏற்பட வழி உண்டாகும்.

அடுத்து, உத்தம நலத்திற்கு வழி செய்யாத தடையிலாத் தன்னலத்தின் பொதுவான தன்மைகளைக் கோட்பாட்டு முறைப்படி பிகோ ஆராயத் தொடங்குகிறார். இறுதிநிலைத் தனியார் நிகர உற்பத்திப் பொருளும் எவ்வாறு தம்முள் வேறுபடுகின்றன என்பதைத் தமது நூலின் பெரும் பகுதியில் அவர் விளக்குகின்றார். தனியார் சமூகப் பொருள்களுக்கான வேற்றுமைகளை அவர் வகைப் படுத்துகின்றார். உடைமையுரிமையும் (ownership), நீடித்த சொத்துகளின் (Durable assets) செயல் உரிமைகளும் (operational rights) வெவ்வேறாக இருக்குமானால் முதல் வகை வேற்றுமை உண்டாகிறது. உற்பத்தி நடைபெறும் காலத்தில், மூன்றாவது நபர் ஒருவருக்குத், தற்செயலான கட்டணம் விதிக்கப்பெறாத ஈடுசெய்யப் படாத ஊழியங்களும் (Services), தீங்குகளும் (disservices) நிகழுமானால், அப்பொழுது இரண்டாவது வகை வேற்றுமை உண்டாகின்றது. இறங்குமுகமான அளிப்புவிலை (Decreasing supply price) நிலவுகின்ற ஒரு தொழிலில் செல்வாதாரங்களின் இறுதி நிலைச் சமூக உற்பத்திப் பொருள்கள், அத் தொழிலின் இறுதி நிலைத் தனியார் உற்பத்திப் பொருள்களைவிட அதிகமாக இருக்குமானால், அப்பொழுது மூன்றும் வகை வேற்றுமை நிலவுவதாகக் கொள்ள வேண்டும். வேற்றுமைகளின் அடிப்படையி லமைந்த பிகோவின் இந்தப் பகுப்பாய்வினை பின்னர் ஷோவ் (shove), கான் (Khan) ஆகியோர் மேலும் விரிவுபடுத்தினர்கள்.

எந்தத் தொழிலிலாவது, இறுதிநிலைச் சமூக நிகர உற்பத்தி (MSNP), இறுதிநிலைத் தனியார் நிகர உற்பத்தியை (MPNP) விடக் கூடுதலாக இருக்குமானால் (MSNP < MPNP), அந்தத் தொழில் விரிவு படுத்தப்படவேண்டும்; இறுதிநிலைச் சமூக நிகர உற்பத்தி, இறுதி நிலைத் தனியார் உற்பத்தியை விடக் குறைவாக இருக்குமானால் (MSNP < MPNP) அந்த தொழில் ஒடுங்க (contract) வேண்டும். இது, மார்ஷல் வகுத்த தனியார், சமூக விளைவுகளின் வேற்றுமையுடன் ஒப்புமையுடையதாகக் காணப்படுகின்றது. பொது நிகழ்ச்சிகள் (general cases) பற்றிய பிகோவின் ஆராய்ச்சியில், நிறைகுறை இடப்பெயர்ச்சி (Imperfect immobility), செல்வாதாரங்களின் பகுபடும் தன்மை (Divisibility of resources), அடக்கவிலைகளின் (அளிப்பு விலைகள்) கூடுதல், குறைதல் ஆகியனவும் அடங்கியுள்ளன.

முதல் பகுதியின் 12ஆம் அத்தியாயத்தில், பகுப்பாய்வு நலப் பொருளியலுக்கும் (Analytical welfare economics), பயில் முறை நலப் பொருளியலுக்கும் (Applied welfare economics) இடையிலான வேறுபாடு விளக்கப்படுகின்றது. அளிப்பு விலையின் கூடுதல், குறைதல் பற்றிய பொது நிகழ்ச்சிகள் குறித்த பண்பியல் விவாதத்திற்குப் பிறகு, கொள்கை விஞ்ஞானத்தின் கோட்பாட்டு வரைவடிவத்தைக் (Theoretical frame work) குறிப்பிடுகிறார்; பின்னர் போட்டி விலைகளை அரசு ஒழுங்கு படுத்தும் சிக்கல் குறித்தும், முதல் உலகப் போரின்போது (1914-18) பிரிட்டனில் ஏற்பட்ட அனுபவத்தின் அடிப்படையில் அளிப்புகளின் (supplies) சிக்கல் குறித்தும் விளக்குகிறார். இதைத் தொடர்ந்து, ஏகபோகத்தின் (Monopoly) நலத் தன்மைகள் (welfare implications) பற்றியும், இரயில் கட்டணங்களை நிருணயிப்பதில் ஏற்படும் நடைமுறைச் சிக்கல்கள் குறித்தும் விவாதிக்கிறார்.

தேர்ந்தளித்தல் (Discrimination) சம்பந்தமாக அரசு தலையிடுவதற்கு அவர் கூறும் காரணம் எல்லாம் பாடநூல்களில் இடம் பெற்றுள்ளன. நூலின் அப் பகுதியில், தம் காலத்தில் பிரிட்டனில் நிலவிய பொருளியல் கொள்கை பற்றிய முக்கியமான சிக்கல்கள் குறித்து அவர் ஆராய்ந்துள்ளார். ஏகபோகக் கட்டுப்பாடு, கூட்டுறவுத் தொழில்களை அரசு நிருவகித்தல் (Public operatiou of industry), தொழில் அமைதி, சமரசம் (concilation) நடுவர் தீர்ப்பு (arbitration), ஊதியம் வழங்கும் முறைகள், வேலைத் தகவல் நிலையங்கள் (Employment exchanges), ஊதியத்தை உயர்த்துவதற்கான தலையீடு, குறைந்த அளவுக் கூலி (Minimum wages) வழுக்கு அளவுத் திட்டங்கள் (Sliding scales) உணவுப் பங்கீடு (Rationing) உதவிக் கொடைகள் (subsidies), வருமான மறுபகிர்வு, குறைந்த அளவு தேசிய வருமானத் தரம் (National Minimum standard of income) போன்றவை அவர் ஆராய்ந்துள்ள சிக்கல்களில் குறிப்பிடத் தக்கவை. இந்தக் குறிப்பிட்ட கொள்கைகள் எல்லாவற்றின் ஆராய்ச்சியிலும் ஒருங்கிணைந்த இணைப்புத் தத்துவம் ஒன்று உண்டு. இவை யாவும் தேசிய வருமானத் தொகையின் (National Dividend) அளவு அல்லது பகிர்வைப் பாதிக்கக்கூடியவை என்பதே அந்தத் தத்துவமாகும்: இது அனைத்தையும் ஒன்றாகப் பிணைக்கிறது. இந்தப் பிணைப்பு எவ்வளவு தளர்ச்சியாக இருக்கிறது என்பதை நாம் இங்கு ஆராய வேண்டியது அவசியமாகும்.

சமூக வருமானத்தின் (Social income) உண்மையான மதிப்பை உச்ச நிலைக்கு உயர்த்துவதே (Maximise) பொருளியல் கொள்கையின் நோக்கமாக இருக்க வேண்டும் என்னும் விதியை பிகோ தமது

அடிப்படைக் கொள்கையிலிருந்து வகுத்துக் கூறுகின்றார். அவ்வாறு உண்மையான மதிப்பை நிருணயிப்பதற்குச் சந்தையில்நிலவும் குறிப்பிட்ட நடப்பு விலைகளின் அடிப்படையில் பல்வேறு பொருள்களின் அளவுகளைக் கணக்கிட வேண்டும். இந்த முறை சரியானது என நிருபித்துத் தமது நூலின் முதல் பகுதியில் பிகோ நிறுவிக் காட்டுகிறார். பிகோ இந்த முறையை வகுப்பதற்குச் சில ஊகங்களை (assnmptions) அடிப்படையாகக் கொண்டிருக்கிறார். முதலாவதாக - பொருள் நலத்திற்கும் சமூக நலத்திற்கும் நேரடித் தொடர்பு (Direct correlation) இருப்பதாக அவர் ஊகித்துக் கொண்டார்; இரண்டாவதாக-வெவ்வேறு நபர்களின் செல்வத்தினல் கிடைக்கும் மனநிறைவுகளை (satisfactions) ஒப்பிட இயலும் என அவர் கருதினர்; மூன்ருவதாக - தேசீய வருமானத் தொகையில், பல்வேறு பொருள்களிலிருந்து கிடைக்கும் நுகர்வோர் உபரிகளின் (consumer's surplus) கூட்டு மொத்தமே (sum) உச்சநிலைக்கு உயர்த்தப்படவேண்டிய அளவு என எண்ணினர். பிகோவின் இந்த யூகங்கள் ஐயத்திற்குரியவைகளாகக் காணப்படுகின்றன. நலத்தின் பிற அம்சங்கள் பாதிக்கப் படாதவை அல்லது பொருள் நலத்தின் திசையிலேயே செல்லக் கூடியவை என்ற எண்ணத்தில், பொருள் நலத்துக்கும், பொதுநலத்திற்குமிடையே 'நல ஒத்திசைவு' (welfare harmony) நிலவுவதாக பிகோ ஊகித்தார். அவருடைய இந்த ஊகமானது, பொருள்வள வாதத் (Materialism) திலிருந்தோ, கற்பனை இலட்சியக் கோட்பாட்டிலிருந்தோ (Utopianism) உதயமானதன்று; மாருகச், செல்வச் சமப்பகிர்வு யூகத்தின் (ceteris paribus assumption) அடிப்படையில் அமைந்த மார்ஷலின் பகுப்பாய்வு முறையிலிருந்து தோன்றியதாகும்.

பிகோவின் முடிவுகளை நேர்க்கட்சிவாதிகளும் (Positivists) எளிதாக ஏற்றுக் கொண்டார்கள். அவருடைய யூகங்கள் பொருளியல் வாதிகளின் சிறப்பாய்வு வரம்புகளுக்கு (Specialist discipline) அப்பால் அத்து மீறிச் செல்லாமல், அவர்கள் கொள்கைகட்குப் பரிந்துரை (Policy recommendations) செய்ய உறுதுணையாக இருப்பதாகத் தோன்றுகின்றன. ஆயினும், ஆராய்ந்தறியப்படாத எச்சத்தின் போலி வாதத்தையும் (Fallacy of unexplored Remainder) அதன் பொருள்வள - கற்பனைத் தன்மைகளையும் ஊக்குவிப்பதாகவே இந்த ஊகங்கள் அமைந்துள்ளன.

நலப் பொருளியலின் முன்னேடி (Pioneer) என்றும், அதை முறைப்படுத்தியவர் என்றும் பிகோவை உறுதியாகக் கூறலாம். அவருடைய நலத் தெளிவி லக்கணம் (welfare criterion), மதிப்புத் தீர்ப்புகளின் (Value judgments) அடிப்படையில் அமைந்த

தன்று; மாறுக, ஏறத்தாழ அதே இயல்புகளையுடைய உண்மை யூகங்கள் (factual assumptions), பண வருமானத்தின் குறைந்து செல் இறுதிநிலைப் பயன்பாடுகள் (Deminishing marginal utilities) மொத்தச் சமூகப் பயன்பாடு உச்சநிலைக்கு உயர்த்தப்பட வேண்டும் என்னும் கொள்கை ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்துள் ளது. மொத்தச் சமூகப் பயன்பாடு உச்சநிலைக்கு உயர்த்தப்பட வேண்டுமென்பது ஓர் அறவியல் யூகமே (ethical assumption) எனினும், அது மிகவும் விரும்பத்தக்க ஊகமாகக் கருதப்படுவதால், அதை எல்லோரும் ஏற்றுக்கொள்ளும்படி செய்வதற்குப் பெருஞ் சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லை.[13] மார்ஷலின் 'பொருளியல் தத்துவங்கள்' என்னும் நூலில் உண்மையான உலகைக் காணலாம்; "அதன் பக்கங்களைப் புரட்டும்பொழுது, சந்தை, பட்டறை, சமையலறை இறற்றின் வாசனையை உணர லாம்[14]". ஆனல், பிகோவின் நலப் பொருளியல்' என்ற நூலில் நடைமுறை உலகை அவ்வளவாகக் காண இயலாது; மேலும், கடுமையான விதி முறைகளை (austere) உடையதாகவும் அது அமைந்துள்ளது. எனினும், இக் காலப் பொருளியல், சமூகச் சட்டங்களில் பல இந் நூலின் காணும் கருத்துகளின் அடிப்படை யில் அமைந்திருப்பதைக் காணலாம். தனியார் நிகர உற்பத்திப் பொருளையும், சமூக நிகர உற்பத்திப் பொருளையும் பாகுபடுத்திக் காட்டி, பிகோ வகுத்துள்ள கோட்பாடு முழுவதும், நிறைகுறைப் போட்டிக் கோட்பாட்டிலிருந்து (Theory of Imperfact competi-tion) தோன்றியதாகும். செல்வாதாரங்களை உத்தமப் பகிர்வு (optimal distribution) செய்து, தேசிய வருமானத்தை உச்ச நிலைக்கு உயர்த்தும் நோக்கத்துடன், ஏகபோகச் சந்தைகளிலும், நிறைகுறை போட்டிச் சந்தைகளிலும் உள்ளூர நிலவும் 'உற்பத்திக் கட்டுப்பாடு' (output restricting), 'விலை உயர்வு'ப் (Price raising) போக்குகளை பிகோ விரிவாக ஆராய்ந்துள்ளார். இதுவே நலப் பொருளியல் துறை முழுவதன் உயிர் நாடியாக விளங்குகிறது. இந் நலப் பொருளியலை நிறுவியவர் (Founder) மார்ஷல்; அதை ஒழுங்கு படுத்தியவர் (Systematiser) பிகோ.

நலப் பொருளியல் பற்றிய மூன்றாவது கேம்பிரிட்ஜ் சிந்தனை யாளர் ஆர். எப். கான் (R. F. Khan) ஆவார். இவர் பிகோவின் கொள்கைகளை வெகுவாகத் திருத்தியமைத்தார். தலையிடா நிலைமை களில் (conditions of laissez-faire) தேசிய வருமானத் தொகை

[13] Nath, S. K.: 'Are Formal Welfare Criteria Reginred?' economic Journal' September 1964, p. 5.

[14] Hagen Puch, W: 'Social Economics' (Cambridge Economic hand book, 1958) p. 14,

இருந்த அளவைவிட, அதிக அளவுக்குத் 'தேசிய வருமானத்தை உயர்த்தக்கூடிய வகையில் செல்வாதாரங்களை மறு பகிர்வு செய்யும்'[15] முறை பற்றிய பிகோவின் கொள்கையின் அடிப்படையில் கானின் ஆராய்ச்சி அமைந்திருக்கிறது. மேலும், அவருடைய ஆராய்ச்சியின் முற்பகுதியில், புறச் சிக்கல்கள் (External economics), புறச்சிக்கனக் கேடுகள் (Diseconomics) ஆகியவை பற்றிய சிக்கல்கள் குறித்து ஆராயப்பட்டுள்ளது. நிறைகுறைப் போட்டி (Imperfect competition) பற்றிய சிக்கல் குறித்து ஆராய்ச்சியின் பிற்பகுதியில் விவாதிக்கப் பட்டுள்ளது. பிகோவியன் முறையின் இரண்டு துணை முடிபுகளுக்கு (corollaries) கான் தெரிவித்துள்ள திருத்தத்திற்காக (Amendment) அவருடைய ஆராய்ச்சிக் கட்டுரை முக்கியமானதாகக் கருதப் படுகிறது. புறச் சிக்கனங்களையுடைய தொழில்கள் விரிவடைய வேண்டும் என்றும், புறச் சிக்கனக் கேடுகளையுடைய தொழில்கள் சுருங்க வேண்டும் என்றும் பிகோ விதி வகுத்துள்ளார். இந்த விளைவுகள் விதிவிலக்கே (Exception) யன்றி விதி (Rule) அல்ல என்னும் நம்பிக்கையில் அவர் இவ் விதியை வகுத்திருக்கின்றார். இந்த விளைவுகள் அடிக்கடி நிகழுமானால், அப்போது இவ் விதியைச் சற்று மாற்றிச் சராசரிக்குக் குறைவாகப் புறச் சிக்கனமுடைய தொழில்களிலிருந்து சராசரிக்குக் கூடுதலாக உள்ள தொழில்களுக்குச் செல்வாதாரங்களை (Resources) மாற்றி விட வேண்டும் என்று விதி வகுத்துக் கொள்ள வேண்டுமெனக் கான் குறிப்பிட்டுள்ளார். இரண்டாவது துணை முடிவானது, மரபிலிருந்து மாறு பட்டதாகும். புற விளைவுகள் (External effects) இல்லாதிருக்கும்பொழுது விலைக்கும் இறுதிநிலை அடக்கச் செலவுக்கும் (Marginal costs) உள்ள விகிதங்கள், சராசரிக்குக் கூடுதலாக உடைய தொழில்கள் விரிவடைய வேண்டும்; இவ் விகிதங்கள் சராசரிக்குக் குறைவாக உள்ள தொழில்கள் சுருங்க வேண்டும். 'எவ்வகைப் பயனிலும் (use), ஒவ்வொரு இறுதி நிலைச் சமூக உற்பத்தி (Marginal social product) மதிப்பு, மாற்றுப் பயனில் அதே அளவுக்கு இருக்குமானால், அந்தப் பயனில் ஒரு காரணியின் தொகை (amount of a factor) உன்னதமானது (Ideal) எனலாம்'. இந்த உன்னத வெளிப்பாட்டுக்குப் (Ideal output), பொருளியலின் எல்லாத் துறைகளிலும் சமஅளவு ஏகபோகத்தை (equal degree of monopoly) விட வேறு ஏதும் அதிகமாகத் தேவையில்லை.

நிறைகுறைப் போட்டியானது எந்த ஒரு பதில் காரணியின் (hired factor) சம்பாதனைகளையும் (earnings), அதனுடைய இறுதி

[15] Kahn, R. F: 'Some Notes on Ideal output' 'Economic Journal' March, 1935, p 1.

நிலைச் சமூக உற்பத்தித் திறனுக்குக் (Marginal social plodoctivity) கீழ் குறைந்து விடும் என்ற உண்மையினைப், பிகோவைப் போலவே சாஜும் நன்கு உணர்ந்திருக்கிறார். இவ்வாறாக, இயல்பான அலகுகளின் (Natural units) அளிப்பு (supply) அளவு, பொதுவாகப் பொருள் நலத்தை உச்ச நிலைக்கு உயர்த்துவதற்குக் கணிக்கப்பட்டுள்ள அளவை விடத், தலையீடற்ற நிலைமைகளில் குறைவாகவே இருக்கும். அவ்வாறு குறையாமல் அளிப்பை ஊக்குவிப்பதற்கான ஏதேனும் ஒரு முறையை வகுப்பது பயனுடையதாக அமையும்.

'தத்துவ ஞானிகள், சமய அறிஞர்கள், துண்டு வெளியீட்டு எழுத்தாளர்கள், சட்ட அறிஞர்கள், சீர்திருத்தவாதிகள்' ஆகியோரின் நூல்களிலேயே பொருளியல் விஞ்ஞானத்தின் தொடக்கத்தைக் காணலாம். அதன் பிறகு எப்பொழுதும் அரசுக் கொள்கை, நலம் ஆகியவை பற்றிய சிக்கல்களைக் குறித்தே பொருளியல் விஞ்ஞானம் கவனம் செலுத்தி வந்திருக்கிறது. குறிப்பாக இயற்கைப் பொருளியல் வாதிகள் (Physiocrates), ஆடம் ஸ்மித் ஆகியோரின் காலம் முதல் இச்சிக்கலில் கவனம் செலுத்துவதில் ஆர்வக்குறைவு ஏற்பட்டதற்கான எழுத்துச் சான்று யாதும் இல்லை. நிறைவுப் போட்டி (Perfect competition) ஓர் உத்தம நிலைமையைக் (Optimal situation) குறிக்கிறதென்ற கோட்பாடு காலப்போக்கில் பல வகைத் திருத்தங்களையும் திருப்பங்களையும் பெற்றுள்ளது; எனினும் இக்கோட்பாடு இன்றும் பொருத்தமானதாகவே விளங்குகிறது.

தொன்மைப் பொருளியல் சிந்தனைகளைச் (classical economic thought) சற்றே ஆராய்ந்து பார்த்தால், அரசியல் பொருளியல் Political economy) என்பது 'ஆரம்பத்திலும், அதன் வளர்ச்சி வரலாற்றின் பெரும்பகுதியிலும் நலப்பொருளியலாகவே இருந்து வந்துள்ளது'. பொதுவாகப் பார்த்தால், அது கொள்கை அல்லது கொள்கையின் விதிமுறைகள், குறிக்கோள்கள், தெளிவிலக்கணங்கள் ஆகியவற்றுடன் நேரடியாகத் தொடர்புடையதாக இருந்தது. ஆடம் ஸ்மித்தும், 'அரசியல் பொருளியல் என்பது சட்டமியற்றும் கலையின் (Art of legislation) ஒரு பிரிவு" என்று விளக்கியுள்ளார். கொள்கையை நெறிப்படுத்தும் விதிமுறைகளை வகுப்பதிலேயே பயன் பாட்டு நுண்கணிப்பு (Utilitarian calculers) தன் கவனத்தைப் பெரிதும் செலுத்துகிறது. ஆடம் ஸ்மித் மரபைச் சேர்ந்தவர்களுள் ஒருவராகிய டுகோல்ட் ஸ்டுவர்டு (Dugold Steward) என்பார், "அரசியல் சமுதாயத்தின் மகிழ்ச்சி, மேம்பாடு ஆகியவற்றைப்பற்றி ஆராய்வதே அரசியல் பொருளியல்" என்று விளக்கம் கூறினார். அவருக்குப்பின் வந்த அறிஞர் ஹென்ரி ஸ்டார்ச்

(Henry Storch) பொருளியலை இன்னும் விரிவுபடுத்திப், 'பொருளியல் என்பது நாடுகளின் செல்வத்தை ஆராய்வது அன்று; நாடுகளின் வளமையைப் (Prosperity) பற்றி ஆராய்வது" என்று பொருள் விளக்கம் செய்தார். இதில் நாகரிகமும் (Civilization) செல்வத்தில் சேர்க்கப்பட்டுள்ளது.

பொருள் விளக்க அறிஞர்களின் (Scholastic doctors) பயன் முறைப் பொருளியலில் •(Applied economics), பொருளியல் சமூகவியலில் ஆதிக்கம் செலுத்துவது பொதுநலனே (Pubiic goad)" என்ற தத்துவமே தலையாய இடத்தைப் பெற்றுள்ளது. இதில் பொது நலன் என்பது திட்டமான பயன்பாட்டைக் கருத்தில் கொண்டே உருவாக்கப்பெற்றுள்ளது. மேலும் அது தனிநபர்களின் பொருளியல் தேவைகளின் நிறை என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது; மிக நுண்ணிய அம்சங்களை ஒதுக்கிவிட்டுப் பார்த்தால், இந்தப் பொதுநலன் என்பதும், இக்கால நலப் பொருளியல் (அதாவது, பிகோவின் நலப் பொருளியல்) கூறும் நலமும் ஒன்றே என்று அறிஞர் ஷும்பீட்டர் (Shumpeter) கூறுகிறார்.

## ஆக்கப் பொருளியலும் நலப்பொருளியலும்

பொருளியல் சிந்தனை தோன்றியது முதல் 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிவரையிலும், ஆக்கப்பொருளியலும் நலப்பொருளியலும் ஒன்றுடன் ஒன்று நெருங்கிய தொடர்புடையனவாக இருந்தன. 'அதன் பிறகு, பொருளியல் ஆய்வுக்கட்டுரைகளில் (Economic treatices) நிறையாய்வு முறையில் அல்லாத பகுப்பாய்வு இடம் பெறலாயிற்று'.[1] மேலும், எடுத்துச் சொல்லப்படும் கொள்கைகளுக்குச் செயல் துணையாகும்வகையில் பகுப்பாய்வு அமையலாயிற்று.

ஆனால், 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பொருளியல் வாதிகளுக்கு இருவகையான பணிகள் தோன்றின· நலப்பொருளியலில் மறைபொருளாகக் கிடக்கும் தரஞ்சூழ் கோட்பாடுகளுக்கும் (Formative Maxims), நடுநிலை ஆக்கப் பகுப்பாய்விற்கும் (Neutral Positive analysis) இடையிலான வேறுபாடுகளைத் தெளிவாக்குவதும், அரசியல் கோட்பாடுகளும், தத்துவங்களும் இடம் பெறுதவகையில் ஆக்க விஞ்ஞானத்தை (Positive Science) உருவாக்குவதும் முதற்பணியாகும். பொருளியல் வாழ்வில் விருப்பு வெறுப்பற்ற, திட்டவட்டமான விரிவான முறையில் அரசு தலையிடு

[1] Reder. M. W : 'Studies in the theory of welfare Economics' (Columbia University Press. 1947), p. 13.

வதற்குரிய நியதியை வகுப்பது இரண்டாவது பணியாகும். நல முற்கோள்களை ஆய்வு செய்தல் இரண்டாவது பணியில் அடங்குவதாகும்.

### தொன்மைக் கோட்பாடுகளும் நவீன நலப்பொருள்களும்

பொருளியல் விஞ்ஞானத்தை அணுகிய தொன்மைப் பொருளியல் வாதிகள் பழைய மரபுகளைப் பயன்படுத்தினார்கள்; பழைய குறிக்கோள்களைப் பின்பற்றினார்கள்; உற்பத்தி, வழங்கல், அடக்கவிலை ஆகியவற்றை வற்புறுத்தினார்கள். உற்பத்தி நலப்பொருளியல் (Production Welfare Economics) பற்றிய தொன்மைக் கோட்பாட்டைக் குறிப்பிடுகையில், "தலையிடாமைக் கொள்கையே நடைமுறை சாத்தியமானதொரு விதிமுறை என்ற நம்பிக்கையுடன், காரணிகளின் வழங்கலில் ஏற்படும் இயக்க மாறுதல்களில் தனிக் கவனம் செலுத்துவதற்குரிய ஒரு நுட்பச் சிக்கலே உற்பத்தி நலப் பொருளியல் என்பதாகும்"[2] என்ற முடிவுக்கு வருகிறார். தொன்மைப் பொருளியல் சிந்தனைகள்பற்றி நடந்த திறனாய்வின் பலனாகப், பொருளியல் சிக்கல்களுக்கான தீர்வுமுறையில் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. நுகர்வு, தேவை, பயன்பாடு ஆகிய மூன்றையும் நவீன நலப்பொருளியல் கோட்பாடு வலியுறுத்துகிறது. நேரடி குறிக்கோள் என்பது நலமேயன்றிச் செல்வம் அன்று!.

தொடக்ககாலத் தொன்மைவாதம் (Classicism) பிற்காலத் தொன்மைவாதமாகி, அதன்பின் இறுதி நிலைவாதமாக (Marginalisiom) உருப்பெற்றதும், இன்பவான்வியல் நுண்கணிப்பு (Felicific Calculus). மேலும் விளக்கமடைந்தது. மதிப்புக் கோட்டின்மீதே தம் கவனத்தைச் செலுத்தி வந்த பொருளியல் வாதிகள், உற்பத்தியிலிருந்து பகிர்வுக்குத் தங்கள் கவனத்தைத் திருப்பினார்கள். சொற்பொருளைப் பொறுத்தவரையில், முற்போக்குத் தன்னல முனைவுக் கொள்கை (Liberal Hedonisim) பற்றிய புதியசம்பிரதாய வாதிகளின் சொல் அட்டவணை மாறுதல் அடைந்திருக்கிறது.[3]

தொன்மை அணுகுநெறியைவிட நவீன அணுகு நெறியானது நுட்பமுறைகளிலும் (Technique), அதன் பயனாக உண்டாகும் விளைவுகளிலும் (Results) மேம்பட்டதாக விளங்குகிறது. எனினும் பெந்தாமின் முற்கோள் உட்படத் 'தொன்மை நலமுற்கோள்கள் யாவும் மிகச்சிறந்த பண்புக்கூறுகளைக் கொண்டடனவாக விளங்குகின்றன. எதிர்காலத்தைக் கருத்தில்கொண்டு இப்பண்புக்கூறுகளை

[2] Neff Frank: 'Economic Doctrine' (New York) 1950), p. 42).
[3] Giruvetz, H. K: 'Wealth to welfare' (Stanford 1950). p. 116

நாம் ஆராயத்தொடங்கிய மறுகணமே, அவை நலக்கோட்பாடு களாக மாறிவிடுகின்றன.'' ஆனால், இத்தகைய ஆராய்ச்சிகள் இக்கால நலப்பொருளியலில் இல்லாமலிருப்பது தெற்றெனப் புலப் படுகிறது.

## தொன்மை நலப்பொருளியல் ஒருதிறனாய்வு

பொருளியல் கோட்பாட்டுவாதிகள் ஆரம்பகால முதலே வாழ்க்கை முறைகள் குறித்து ஆராய்ந்து வந்திருக்கிறார்கள். ஆடம் ஸ்மித் நுகர்வை நேரடியாக விவாதிக்கவில்லை. மாறாக அதை உற் பத்தியின் முடிவாகக் கருதுகிறார். ஆனால் ஜே. எஸ். மில் இதைத் தலைகீழாக மாற்றிவிட்டார். தேசியச் செல்வத்திற்கு முக்கிய மானது உற்பத்தியேயன்றி, நுகர்வு அன்று என்று அவர் கருதுகிறார். ஆடம் ஸ்மித்தின் கொள்கையை அறிஞர் லாடர்டேல் (Lauderdale) சற்றுச் சீர்திருத்தி அமைத்தார். அவர் நுகர்வையே வற்புறுத்துவ துடன், அதற்கான சில விதிமுறைகளையும் வகுத்துக் காட்டினார். ''தொழில்கள் இயங்கவேண்டிய போக்கைத் தேவைகள் நிருணயிக் கின்றன'' என்பது அவர் கருத்து. இக்கருத்தை அறிஞர் சீனியர் (Senior) மேலும் அபிவிருத்தி செய்தார். அவர் பல்சுவை நாட்டம் (Love of Variety), வேறுபாடு நாட்டம் (Love of Distrinction) ஆகியவற்றை வற்புறுத்துகிறார். வாழ்க்கைத்தரமானது மனித னிடமும், அவனுடைய கூட்டுப் பிரதிநிதித்துவங்களிலும் (Collective representations) அமைந்திருக்கிறது என்று பொதுவாகத் தொன்மை எழுத்தாளர்கள் கருதுகிறார்கள்.

சந்தைச் சார்பற்ற மதிப்புகளை (non-market values) ஆடம் ஸ்மித், மில் முதலியோர் மிகச் சிறந்த முறையில் கையாண்டுள் ளனர். மேம்பாட்டின் சிறப்பான கூறுகள் குறித்து ஆராய்வதற் குரிய புதிய அணுகு நெறிக்கான அடிப்படையாக அவர்களுடைய ஆராய்ச்சிகள் அமைந்துள்ளன. முறைமையியலின்படி (Methodologically) பார்க்கும்போது, நவீன நலப் பொருளை விட இது சில அம்சங்களில் அதிக உதவியாக உள்ளது எனலாம். விரிவான மதிப்புத் திட்டங்களின் (value standards) எல்லைகளையும், இத் திட்டங்களின் அடிப்படையில் மேலோட்டமான பொருளியல் ஆய்வு முறையும், சந்தையில் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளைச் சம நிலைப் படுத்துவதற்குரிய வழி வகைகளை ஆராயும் முறையும் தொன்மைப் பொருளியல் வாதிகளின் எழுத்துகளில் காணப் படு கின்றன. மதிப்புத் திட்டங்கள் (value standards) உண்மையில் உள்ளனவா என்பதை அறுதியிடுவதற்கான வழி மட்டுமே இவற்றில் காணப்படவில்லை. மார்ஷல், பிகோ, போன்றோரின்

எழுத்துகளைக் கவனமாக ஆராய்ந்தால், தொன்மைப் பொருளியல் எழுத்தாளர்களின் தனிப் பெருஞ் சிறப்புகள் தெளிவாகப் புலனாகும்.

## இடைக்காலக் கற்பிதக் கொள்கையிலிருந்து உருவான நலக் குறிக்கோள்கள்

பிரான்சிஸ் பேக்கனுக்கும் (Francis Bacon) ஆடம் ஸ்மித்துக்கும் இடைப்பட்ட காலத்தில் தோன்றிய கற்பிதக் கொள்கை நூல்களை (utopian writings) இருவகையாகப் பிரிக்கலாம். அவை நழுவிச்செல் கற்பிதக் கொள்கைநூல்கள் (utopians of escape), சாதனைக் கற்பிதக் கொள்கைநூல்கள் (utopians of realization) என்பன. சமூக, அரசியல், பொருளியல் நெருக்கடி ஏற்படும் காலத்தில்தான் பெரும்பாலும் கற்பிதக் கொள்கைகள் தோன்றும். இவை முற்றிலும் பண்பாட்டு நிகழ்ச்சியினால் உண்டாவதில்லை; 'அரசியல்' பொருளியல் துறைகளை மதச் சார்பற்றனவாகி விடலாம் என்னும் நம்பிக்கை பெருகி வருவதால் ஏற்படும் விளைவுகளினால் உண்டானதாகும். மேம்பாட்டை அடையவும், ஓரளவு முழுமையை உண்டாக்கவும் வல்ல மனித நடவடிக்கையினால் மதச் சார்பற்ற உலகையும், அதன் நடவடிக்கைகளையும் உணர்ந்துகொள்ள முடியும் என்ற எண்ணமே இந்த நம்பிக்கைக்கு ஆதாரமாகும்'.[4]

மறுமலர்ச்சி யுகத்தில் இருந்துவந்த இடைக்கால ஐரோப்பாவில் ஒருமைப்பாடு (solidarity), செயலாட்சி (stewardship), **justum pretium** ஆகிய அறநெறிக்கோட்பாடுகளுக்கு இடையிலான இடைவெளி இடைவிடாமல் விரிவடைந்து வரும் சிக்கல் தோன்றியது. அதுவரையில் படைமானியத் திட்டத்தின் (Feudal system) செல்வாக்கின் காரணமாகச் சமூகப் பாகுபாடாக ஏற்றுக் கொள்ளப் பட்டிருந்த சமுதாயப்படி நிலை (Power of status) பெருமளவில் கைவிடப்பட்டது. புதிதாகத் தோன்றிய நடுத்தர வர்க்கத்தார் (Bourgeois class) பொருளியல் வெற்றியை அடைந்த பிறகு, அரசியல் ஆதிக்கம் பெறுவதற்கும் முயன்றனர். விஞ்ஞானத்தில் பரிசோதனை முறைகளைக் கையாண்டமையால் கணக்கற்ற புதிய வாய்ப்புகள் தோன்றின. அதனால், பொருளியல் துறையில் கனவுகண்ட பொற்காலம் தோன்றுவதற்கான நம்பிக்கை ஒளி தோன்றியது.

இத்தகைய சூழ்நிலையில், சமுதாயத்திற்குப் புதிய வழிமுறைகளைக் காண்பதற்குச் சமூக அனுதாபிகள் (social sympathizers)

[4] Fuz. J. K: 'Welfare Economics in English Utopian' Francis Bacon to Adam Smith (London 1952) p. 4.

பல முயற்சிகள் மேற்கொண்டார்கள். வறுமை, சமூகப் பிற்போக்கு நிலை ஆகியவை பற்றிய சிக்கல்களுக்கும் பொருளியல் தீர்வு ஒன்றைக் காண்பதே அவர்களுடைய இறுதிக் குறிக்கோளாக இருந்தது. 17ஆம் நூற்றாண்டில் மேலை நாடுகளில் குழப்பமான நிலை நிலவியதன் காரணமாகவும், கால நெருக்கடியினாலும் எல்லாத் திட்டங்களும் குறுகிய காலத் திட்டங்களாகவே வகுக்கப் பட்டன.

17ஆம் நூற்றாண்டுக்கும் 18ஆம் நூற்றாண்டுக்குமிடைப்பட்ட காலத்திய நலக் கோட்பாடுகளை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒன்று - வாணிபத் திட்டக் கொள்கையாளர்களின் (Mercantalist) செல்வாக்கால் உருவாகிய நலப் பொருளியல் என்பதாகும்; மற்றொன்று — முறையான நலப் பொருளியல் துறையைச் சேர்ந்தவர்களான கற்பிதக்கொள்கை எழுத்தாளர்கள் (utopian writers) உருவாக்கியதாகும். புதிதாகச் சுதந்திரம் பெற்ற நாடுகள் தங்களின் சட்ட பூர்வமான செல்வத்தை (statutory wealth) உருவாக்கிக் கொள்ளும் வகையில் அந் நாடுகளின் பொருள்வளத்தை ஒன்று திரட்டி வலுப்படுத்தும் நோக்கத்தை மையமாகக் கொண்டு இயங்குவது முதலாவது பிரிவாகும். வாணிபத் திட்டக் கொள்கைவாதிகளின் பொருளியல் கொள்கை மாக்கியவல்லியிடமிருந்து (Machiavalli) பாரம்பரியமாகப் பெற்ற உணர்ச்சியை உண்மையாகப் பிரதிபலிப்பதாகும்.

உற்பத்தியைத் தூண்டவும், வாணிகத்தைப் பெருக்கவும், வேளாண்மையை வளர்க்கவும் வாணிபத் திட்டக் கொள்கை வாதிகள் கூறும் திட்டங்கள் யாவும் நலத்தை மேம்படுத்தும் இயல்புகளை உடையனவே; ஆனால் அவர்களுடைய குறிக்கோள் எல்லாம் அரசையும், அதன் செல்வத்தையும் பற்றியதேயன்றி, நாட்டு மக்கள் நலம் பற்றியதன்று. இங்கு இருவகைக் கருத்து களும் பெருமளவில் வேறுபடுகின்றன. ஒரு தனி நபரின் கல்வி, சமூகப் பாதுகாப்பு (social security) உட்படத் தனி நபரின் நலம், வறுமையை அல்லது வேலையில்லாத் திண்டாட்டத்தை அல்லது வேறு சமூகப் - பொருளியல் சீர்கேடுகளை ஒழித்தல் போன்றவற்றை வாணிகத் திட்டக் கொள்கை வாதிகள் தங்கள் ஆராய்ச்சிக்கு நேரடியாக எடுத்துக்கொள்வதே இல்லை. அரசின் நலத்திற்குரிய வேறு முக்கிய நடவடிக்கைகளின்போது, இவற்றைத் தொட வேண்டிய இன்றியமையா நிலைமை ஏற்பட்டால் மட்டுமே இவை பற்றி அவர்கள் ஆராய்வார்கள். வாணிகத் திட்டக் கொள்கை வாதிகளின் நலக்குறிக்கோளுக்கும், கற்பிதக்கொள்கை வாதிகளின்

நலக்குறிக்கோளுக்கு மிடையில் காணப்படும் பொதுவான அம்சம் இயற்பொருள் உற்பத்தி (Physical output) ஒன்றுதான்.

மரபுவழிச் சிந்தனையிலிருந்து விலகிச் சென்றவர் பேக்கன் ஆவார். "அவருடைய கற்பிதக்கொள்கையைச் சமூக விஞ்ஞானத்தின் வரலாற்றில் மிக முக்கியமான தொரு சாதனையாகக் கருதலாம்", எனவே அவரைத் தொழிற் புரட்சியின் (Industrial Revolution) ஆன்மிகத் தந்தை என்று அழைப்பது மிகவும் பொருந்தும். அவர் தம்முடைய 'Novo Atlantics' என்ற நூலை 1669ஆம் ஆண்டில் இலத்தீன் மொழியில் எழுதினர். ஓர் ஆராய்ச்சிக் கூடத்தின் முன்மாதிரியெனக் கருதப்படும் 'சாலமன் மாளிகை' (House of Solomon) பற்றிய வருணனையும், பொருள்வள நலத்தை உருவாக்குவதில் விஞ்ஞானத்தின் பங்கு பற்றிய வருணனையும் அந்நூலில் முக்கியமாக இடம் பெற்றிருக்கின்றன.

நலம் இடையறாது பெருகுவதற்கும், அறிவு வளர்வதற்கும், மனித இயல்பைப் புரிந்து கொள்வதற்கும் ஏற்றதான பொருள் வளச் சூழ்நிலைகளை உருவாக்கக்கூடிய விஞ்ஞானத்தின் மூலமாகவே மனிதகுலம் முன்னேற்றமடைய இயலும் என்ற செயல்முறைச் சாத்தியமான கருத்தைப் பேக்கன் கொண்டிருந்தார். இதுபற்றிக் கருத்துக்கூறிய மெக்காலே, 'மனிதன் மனிதனுகவே நீடித்திருக்கவும், அதே சமயம் அவனுக்கு வேண்டியவற்றையெல்லாம் வழங்கவும் வழிசெய்வதே இக்கருத்தின் நோக்கம்' என்று எழுதியுள்ளார். பேக்கன் கனவு கண்ட சமுதாயம் பத்தாம்பசலித்தன மானதல்ல; மாறுக, இயக்க ஆற்றலுடைய, விஞ்ஞான முறையில் இயங்குகின்ற, வளர்ந்து வரும் சமுதாயமாகும். நவீன காலக் கருத்துகளைக் கொண்ட முதலாவது 'கற்பனை உலகம்' (utopia) இதுவேயாகும்.

பேக்கன் தம் குறிக்கோள் ஈடேறுவதற்குரிய பல திட்டங்களைத் தெரிவித்துள்ளார். அவற்றுள் பொருள் நலத்துக்குப் பொருந்தக் கூடிய ஒருசில திட்டங்களை இங்கு குறிப்பிடுவது நலமாக இருக்கும். முதல் தொகுதியில் மனிதன், அவனுடைய செல்வம், கல்வி, வேலை ஆகியவை பற்றிய திட்டங்கள் காணப்படுகின்றன. மண்வளம் புதுப் பொருள்கள், உணவு ஆகியவற்றைப் பெருக்குவது பற்றியவை இரண்டாம் தொகுதித் திட்டங்களாகும். தொழில் வளர்ச்சிக்குப் பயன்படக்கூடிய யந்திர சாதனங்கள், இரசாயனப் பொருள்கள், சக்தியை உண்டாக்குவதற் குரிய புதிய ஆதாரங்கள், பொருள் செல்வத்தைப் பெருக்குவதற்கான வழிதுறைகள் ஆகியவைபற்றி மூன்றும் தொகுதித் திட்டங்கள் கூறுகின்றன. கடைசித் தொகுதியில் விளையாட்டு, செய்தித் தொடர்பு, ஆகியவைபற்றிய

திட்டங்களைச் சேர்த்துள்ளார். விமானங்கள், நீர்மூழ்கிக் கப்பல்கள் தொலைபேசிகள் ஆகியவை பற்றிய குறிப்புகளும் அவருடைய திட்டங்களில் காணப்படுகின்றன.

பேக்கனுக்குப் பிற்பட்ட காலத்தில் தோன்றிய வேறுபல கற்பனை உலகுகளுக்கு பேக்கனின் கற்பனைஉலகு முன்மாதிரியாக அமைந்தது. நலப் பொருளியல் கண்ணோட்டத்தில் பார்க்கப் போனால், அவர் முக்கியமான எதையும் கூறிவிடவில்லை என்றே சொல்ல வேண்டும். பொருளியல் சிக்கல்களையே அவர் ஒட்டு மொத்தமாகத் தவிர்த்து விட்டார் எனலாம். நடைமுறைச் சிக்கல் களைத் தீர்ப்பதற்கு விஞ்ஞானச் சூழ்நிலையை உருவாக்கியிருப்பதும், திட்டமிட்ட ஆராய்ச்சியின் அவசியத்தை வலியுறுத்தியிருப்பதும், மனித குலத்துக்கான சேவையில் விஞ்ஞான அமைப்புகளைத் திருப்ப வேண்டும் என்ற கொள்கையும், அவருடைய நூலில் காணப்படும் பாராட்டத்தக்க அம்சங்களாகும். வெறுங் கற்பனைத் தத்துவங்களுக்குப் பதிலாக நடைமுறை சாத்தியமான குறிக்கோள் களைக் கூறியிருப்பது அவருடைய மிகப்பெரிய சாதனையாகும். அவருடைய எழுத்துகள், தொழில்நுட்ப முன்னேற்றத்தைத் துரிதப்படுத்தின. பேக்கனுடைய காலம் வரையில் மனித முன்னேற்றத்தில் விஞ்ஞானத்தின் பங்கு மிகக்குறைந்தஅளவே எனக் கருதப்பட்டு வந்தது. விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளை மைய மாகக் கொண்டே மனித குலத்தின் முன்னேற்றம் அமைந்திருக் கிறது என்ற உண்மையைப் பேக்கன் உலகுக்கு உணர்த்தினர்.

### ஹார்ட்லிப்பின் 'இன்ப உலகம்':

நாட்டின் பொதுநலனுக்கு உகந்த சீர்திருத்தங்களைப் புதிய நாடாளுமன்றம் (New Parliament) மேற்கொள்ள வேண்டும் என்னும் கருத்தை வலியுறுத்தும் 'இன்ப உலகம்' (MACARIA) என்ற நூலைப் போலந்து நாட்டைச் சேர்ந்த சாமுவல் ஹார்ட்லிப் (Samuel Harlib) என்பார் எழுதினர். இந்நூலில் கூறப்பட்டுள்ள ஆலோசனைகளை நாடாளுமன்றமே நேரடியாகச் செயலாக்க வேண்டும் என்பது ஆசிரியரின் விருப்பம். இந்த வகையில் இந்நூல் மிக நவீனக் கொள்கைகளையுடையதாக விளங்குகிறது. இதில் கூறப்பட்டுள்ள ஆலோசனைகளை இக்காலப் பொருளியல் பண் பாட்டுத் திட்டங்களுக்கு ஒப்பாகக் கூறலாம்.

இன்றையச் சமுதாயக் கட்டமைப்பின்கீழ் ஹார்ட்லிப்பின் நூலைத் தனிச்சிறப்புடையதாகவும், இடைக்காலத்தில் எழுந்த கற்பனை உலக நூல்களுள் நலப்பொருளியல் பற்றிச் சிந்தித்த முதல் நூலாகவும் கொள்ளலாம்.

மனித இயல்பை (Human Nature) ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மையென ஹார்ட்லிப் எடுத்துக்கொண்டார். மனித இயல்பில் தன்னலம் (Self interest) முக்கிய பகுதியாக அமைந்துள்ளது. 'சமுதாயத்தின் பொருளியல் விவகாரங்களை ஒழுங்குபடுத்துவதற்காகச் சீராக இயங்கும் ஓர் அமைப்பை (அமைச்சரவை) அரசு ஏற்படுத்த வேண்டும். இந்த அமைப்பானது நாட்டின் பொருளியல் நிலைமையை நன்கு கண்காணித்து வரவேண்டும். அப்பொழுதுதான் அரசு விரும்பிய கொள்கைகளை எளிதாகச் செயலாக்க இயலும்'. உத்தேச அமைச்சரவையில், தேசிய நலம், உள்நாட்டு வாணிகம், வெளிநாட்டு வாணிகம், வேளாண்மை, மீன்பிடித்தல், குடியேற்றுகள் (Colonies) ஆகியவற்றைக் கவனிப்பதற்காக ஐந்து தனித்தனித் துறைகள் இடம்பெற வேண்டும். இங்கு குறிப்பிடப்பட்டுள்ள அமைச்சுத் துறைகள் யாவும் ஒரு நாட்டின் தேசிய நடவடிக்கைகள் அனைத்தையும் தழுவியனவாக இருப்பதைக் காணலாம். இந்த ஆலோசனை இருபதாம் நூற்றாண்டு பிறந்த பிறகுதான் பல நாடுகளில் செயலாக்கப்பட்டன.

நாட்டின் நலத்தை அடிப்படையாகக் கொண்ட, செயலாக்கு மிக்கதொரு ஆலோசனையை ஹார்ட்லிப் தெரிவித்தார். தேசிய நலத்திற்குரியனவாக அவர் தெரிவித்த ஆலோசனைகள் இங்கு குறிப்பிடத்தக்கவை. பொதுப் பணிகள், தரிசு நிலங்களைப் பண்படுத்துதல், சாலைகள் அமைத்தல், கட்டிடங்கள் கட்டுதல் போன்ற பொதுநலக் காரியங்களை அரசு மேற்கொள்ள வேண்டும். ஒரு சொத்தின் உரிமையாளர் இறந்ததும் அச்சொத்தின் மதிப்பில் 1/20 பங்கை வாரிசு உரிமை வரியாக (Inheritance Tax) வசூலித்து அத் தொகையைக்கொண்டு இப் பொதுப்பணிகளுக்குச் செலவிடலாம். முற்போக்கு வரி விதிப்பு முறையைக் (Progressive Taxation) கையாண்டு, சொத்தைப் பறிமுதல் செய்வதாக அச்சுறுத்தியும், நாடு கடத்துவதாக மிரட்டியும் வேளாண்மை உற்பத்தித் திறனைப் பெருக்கலாம். இரண்டாம் உலகப் போரின்போது வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்குப் பிரிட்டனில் இதே ஆலோசனைகள் அப்படியே செயலாக்கப்பட்டதை இங்கு குறிப்பிட வேண்டும்.

மக்கள் தொகைச் சிக்கல் பற்றிய அவருடைய அணுகு முறையும் இங்கு குறிப்பிடத் தக்கது. மக்கள் தொகைப் பெருக்கச் சிக்கலுக்குத் தீர்வு காண்பதற்கு, அரசு உதவித் தொகையளித்து மக்கள் வெளிநாடு செல்வதற்கு ஊக்கமளிக்கலாம் என்பது அவர் கூறும் ஆலோசனை. விஞ்ஞான முன்னேற்றம் குறித்து அவருடைய கருத்துகள் அடிப்படையில் பேக்கனுடைய கொள்கைகளையொட்டியனவாகவே அமைந்துள்ளன. ஆனால், பேக்கனின்

கொள்கைகளைக் காட்டிலும் இவருடைய கருத்துகள் சுருக்கமான வைகளாகவும், நடைமுறை சாத்தியமானவைகளாகவும் விளங்கு கின்றன. அரசியல் சுதந்திரம், பொருளியல் துறையில் அனைவருக் கும் சமவாய்ப்புகள், அவற்றுக்கு அரசினரின் பாதுகாப்பு, குடி மக்களின் திடமனம், ஆரோக்கிய வாழ்வு ஆகிய அடிநிலைக் கொள் கைகளை ஆதாரமாகக் கொண்டு ஹார்ட்லிப் தம்முடைய குறிக் கோள்கைகளை வகுத்துள்ளார் என்பது தெளிவாகத் தெரிகிறது.

ஆரம்பகால வாணிகக் கொள்கையாளர்களின் நடைமுறைகள் பெரும்பாலும் பணம், வெளிநாட்டு வாணிகம் ஆகியவைபற்றிய சிக்கல்களையே கவனத்தில் கொண்டு அமைந்திருந்தன. இந்த நடை முறைகளிலிருந்து ஹார்ட்லிப் பெரிதும் வேறுபடுகிறார். தனியான பொருளியல் சிக்கல்கள் என்று யாதுமில்லை. உணவுப்பொருள்களைக் கையாள்தல், திறம்பெற்ற தொழிலாளர்களின் (Skilled labour) எண்ணிக்கையை ஒழுங்குபடுத்துதல், வேலைவாய்ப்புகளை உரு வாக்குதல், தரிசு நிலங்களைச் சாகுபடிக்குப் பண்படுத்துதல், மக்கள் குடியேற்றம் (Emigration) ஆகியவை நாட்டின் நலத்தை உயர்த்து வதற்குரிய வழிமுறைகளாகும். நாட்டு மக்களின் வறுமையைப் போக்கிச் செல்வத்தைப் பெருக்குவதற்காக நாடு தழுவிய தேசிய கொள்கையாக ஹார்ட்லிப் தெரிவித்த கொள்கை இதுவேயாகும்.

ஹார்ட்லிப் வாழ்ந்த காலத்தில் எழுந்த மற்றக் கற்பனை உலக நூல்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, ஹார்ட்லிப் தமது நூலில் ஒரு முக்கியமான அம்சத்தை நன்கு வலியுறுத்தி இருப்பதைக் காணலாம். ஒரு நடவடிக்கையில் இறங்கவோ அல்லது ஒரு சீர்திருத்தத்தை மேற்கொள்ளவோ தொடங்குவதற்கு முன்னர் முதலில் உண்மை நிலைமைகள் என்ன என்பதைத் தெள்ளத் தெளி வாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதே அவர் வலியுறுத்தி யுள்ள அந்த அம்சமாகும். பின்னணிச் சூழல்பற்றிப் போதிய அறி வும் (Background knowledge), நடைமுறையில் நிலவும் நிலைமை பற்றிய தெளிவான கருத்தும் இல்லாமல் ஒரு நாட்டின் பொருள் வளத்தை மேம்படுத்தும் பணியை நிறைவேற்ற இயலாது. பொருளியல் வாழ்வின் உட்சிக்கல்களையெல்லாம் ஐயந்திரிபின்றி அறிந்து கொள்ள வேண்டுவது, வரலாற்றுக் கண்ணோட்டத்திலும் மிக முக்கியமானதாகும். விஞ்ஞான முறைப்படி சரியானதெனக் கருதத் தக்கதொரு அணுகுமுறையை நலப் பொருளியலுக்கு ஹார்ட்லிப் வழங்கியிருக்கிறார்.

ஹார்ட்லிப் வாழ்ந்த அதே இடைக்காலத்தில் வாழ்ந்த மற்றொரு எழுத்தாளர் பீட்டர் சேம்பர்லின் (Peter Chamberlin,

1649) ஆவார். அவரும் அதே போன்ற பொருளியல் திட்டம் ஒன்றை அளித்தார். ஆனால் அவருடைய திட்டத்தில் கற்பனை உலக அலங்காரங்கள் (Utopian ornamentation) யாதுமில்லை. உண்மையை உரைத்தால், நாட்டின் மோசமான பொருளியல் நிலையைச் சீர்திருத்துவதற்கு உடனடியாக மேற்கொள்ளத்தக்க திட்டங்களாக அவருடைய திட்டங்கள் அமைந்துள்ளன.

அரசனின் சொத்துகளையும், குருமார்கள் (Clergy), பொது மக்கள் ஆகியோரின் சொத்துகளையும், காடுகளையும், எல்லாத் தரிசு நிலங்களையும், பயன்படுத்தப் படாமல் கிடக்கும் நிலங்களையும் வேலை நடைபெறாமலிருக்கும் சுரங்கங்களையும், பூமியிலும் நிலத்திலும் கண்டெடுக்கப்படும் புதையல்களையும் (Treasures) அரசுடைமையாக்குவதன் (Nationalisation) மூலம் மிக உயர்ந்த பொருள் நலத்தைச் சாதிக்க இயலும் என அவர் கருதினார். செல்வத்தைப் பெருக்குவதன் மூலமே வறுமையை ஒழிக்க முடியும் என்பதும் அவருடைய கருத்து. எனினும், தேசியச் செல்வத்தைத் திசை மாற்றுதல் (Diversion) குறித்து அவர் ஏதும் குறிப்பிடவில்லை.

'ஏழை எளியோரின் வாழ்க்கைத் தேவைகள் உண்ண உணவும், உடுக்க உடையுமே. இந்தக் குறைந்த அளவு வாழ்க்கைத் தேவைகளையாவது அவர்களும் அவர்களுடைய சந்ததியினரும் பெறுவதற்குரிய வாய்ப்புகளை 'ஏற்படுத்த வேண்டும்' என்னும் சேம்பர்லின் கூற்றில் 'பிழைப்பு மட்டக் கூலிக் கோட்பாடு' (Subsistence of theory of wages) பொதிந்திருப்பதைக் காண்கிறோம். 'நலக் கொள்கையை நிலைநாட்டுவதற்குரிய ஒரே நிறுவனம் அரசாங்கமே' என்றார் அவர். இக்கருத்து, வாணிகக் கொள்கையாளர்களின் சிந்தனையில் காணும் அடிப்படைக் கொள்கையைப் பிரதிபலிக்கிறது. மேலும், தேசியச் செல்வமானது பொருள் நலத்துக்கு ஒப்பானது என்றும் அவர் நிறுவியுள்ளார். இதை அவருடைய குறிப்பிடத்தக்க சாதனையாகக் கூறலாம். இந்த வகையில், கால்பர்ட் (Colbert) போன்ற மற்ற வாணிகக் கொள்கைவாதிகளின் கருத்திலிருந்து அவர் வேறுபடுவதைக் காண்கிறோம். சமூகத்தின் மற்றப் பிரிவினர்களைப் போலவே, ஏழை மக்களும் சமுதாயத்தின் ஓர் அங்கமாக விளங்குகிறார்கள். எனவே அவர்களின் தேவைகளை நிறைவு செய்வதும், அவர்களின் சமூகப் பொருளியல் மறுவாழ்வுக்கான (Rehabilitation) வழிதுறைகளை அவர்களுக்குக் காட்ட வேண்டியதும் நமது குறிக்கோள்களாக இருக்கவேண்டும் எனச் சேம்பர்லின் வலியுறுத்துகிறார்.

இடைக்கால எழுத்தாளர்கள் வரிசையைச் சேர்ந்த மற்றொருவர் வில்லியம் காபே (William Goffe) ஆவார். அவர்

நாடுகளின் வாணிகத்தைப் பெருக்குவது குறித்தும், ஏழை எளியோரை வேலைக்கு அமர்த்திக்கொள்வது பற்றியும் எழுதி யுள்ளார்.

ஏழைகளின் துன்பங்கண்டு இரங்கிப் பிச்சையிடுவதைப்போல் ஒழுங்கற்ற முறையில் கூலி கொடுப்பதை விடுத்து, ஏழைகள் ஒழுங்காகச் சம்பளம் பெறுகின்ற வகையில் அவர்களை வேலையில் அமர்த்திக்கொள்வதற்கான நடைமுறை சாத்தியமான ஆலோசனை களை அவர் கூறியுள்ளார். இதற்குத் தேவைப்படும் நிதியை எல்லா வட்டாரத் திருச்சபைகளிடமும் (Parishers) மூன்றாண்டு களுக்கு வரி வசூலித்துப் பெறலாம் என்பதும் அவர் கூறியுள்ள ஆலோசனை. இந்த ஆலோசனையை, இடைக்காலத் திருச்சபை களுக்கு எதிரான சீர்திருத்தக் கோட்பாடாகக் கொள்ளலாம். ஏழை எளியோருக்கு வேலை வாய்ப்பு நல்குவதற் குரிய காபேயின் ஆலோசனைகளை இன்றையச் சூழ்நிலைகளின் அடிப்படையில் ஆராய்வது பொருத்தமாக இருக்கும். தொழிலாளர்களின் அபரிமித இடம் பெயர்வாற்றலைத் (Excessive mobility) தடுக்கவேண்டு மெனக் கூறியதன் மூலம் அவர் தம்முடைய கூர்மையான பொரு ளியல் நுண்ணறிவை வெளிப்படுத்தியுள்ளார். வேலையில்லாதோர் ஒரு தொழிலைப்பெற்று, நியாயமான வாழ்க்கைக்குரிய ஊதியத்தைச் சம்பாதிக்க வழிவகை செய்ய வேண்டுமென்பது அவருடைய நோக்க மாகும். இன்று சில துறைகளில் போதிய அளவு தொழிலாளர்கள் இல்லா நிலை நிலவுகின்றது. இத்தகைய ஒரு நிலை ஏற்படாத வாறு, தொழிலாளர்களை 'மறு பகிர்வு' (Redistribution) செய்தல் வேண்டும் என்ற எண்ணம் அவருடைய மனத்தில் இருந்திருக்க வேண்டுமென்பதை நாம் ஊகித்தறிய முடிகிறது. எனினும், கப்பல் கட்டுதல், மீன்பிடித்தல் போன்ற துறைகளில் வேலைவாய்ப்புகளைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது, அவருடைய உள்ளத்தில் குடிகொண் டிருந்த வாணிகக்கொள்கை வாதம் தலைதூக்கிவிடுவதால், உள் நாட்டுத் தொழில் பாதுகாப்பு வாதத்தின் (Protectionist) தீவிர ஆதரவாளராக அவர் மாறிவிடுகிறார்.

இன்றையச் சமுதயாக் கட்டுக்கோப்புக் குட்பட்ட நல நடவடிக்கையை (Welfare Action) காபே, சேம்பர்லின் ஆகியோரின் நூல்கள் ஆதரிப்பதாகக் கொள்ளலாம். சமுதா யத்தின் கட்டமைப்பைப் பாதிக்காத வகையில் அரசினர் தலையிட வேண்டும் என்பதும் அவர்கள் வற்புறுத்தும் கருத்தாகும். இது முரண்பாடான கருத்தாக அமைவதாகக் காணலாம். பிற்காலத்தில், சமுதாயத்தின் கட்டமைப்பில் இறுதிமாற்றத்தை ஏற்படுத்துவதற் குரிய வழிவகையாக அரசினர் தலையீட்டை பிகோ வலியுறுத்தி யுள்ளதையும் நாம் பார்க்கிறோம்.

இதே கருத்தோட்டமுள்ள பிற்கால நூல்களில் ராபர்ட் வாலஸ் எழுதிய (1761) 'பல்வகை வாய்ப்புகள்' (Various Prospects) என்ற நூலும், தொழில்களின் தொகுதியை (College of Industry) உருவாக்குவது குறித்து ஜான் பெல்லர் (Beller) தெரிவித்துள்ள ஆலோசனைகளும், பெர்னார்டு மெண்டவில் (Bernard Mendeville) எழுதிய தேனீக்களின் கதை அல்லது தனியார் குற்றங்களும் (Private Vices) பொதுமக்கள் நலன்களும் (Public Benefits)' என்னும் நூலும் (1705—1728) குறிப்பிடத்தக்கவை.

இந்த நூல்களில் தனியார் சுவாதீனக் கொள்கையும் (Individualism)' தன்னலமும் (Self-interest) வலியுறுத்தப்படுவதைக் காணமுடிகிறது. 'சோம்பலை ஒழிக்கவேண்டும்; விரிவாகத் தொழில்களை ஏற்படுத்திப் பாதுகாக்கவேண்டும். தொழிலாளர்களை முறையாகவும், சரிசமமாகவும் பகிர்தல்வேண்டும்; ஒவ்வொருவரும் தங்களுக்குரிய பங்குப் பணியைச் செய்ய முன்வரவேண்டும் என்று வாலஸ் கூறியுள்ளார். அதேபோன்று ஜான் பெல்லரும் தனியார் பங்கு பெறுவதற்கு ஊக்கமளிப்பது (Motive) இலாபமே (Profit) எனச் சுட்டிக்காட்டுகிறார். தொழில், வேளாண்மை, கல்வி, வீட்டுவசதி முதலிய பல்வேறு துறைகளிலும் தம்முடைய திட்டங்கள் செயல்படுவதற்கும், முதுமைக்கால ஓய்வு ஊதியங்கள் (Old age Pensions) போன்ற சமூகநலத் திட்டங்களைச் செயல் படுத்துவதற்கும் ஏற்றதொரு மையமாக அவர் தம்முடைய தொழில் தொகுதியை (College of Industry) அமைத்துள்ளார்.

இன்றுள்ள சமுதாயத்தில் தனியாரின் செயல் சுதந்திரத்தை அடிப்படையாகக்கொண்டு மெண்டவில் தம்முடைய நலமுற் கோள்களை (Welfare Proposals) அமைத்துள்ளார். "சகிப்புணர்வும் (Toleration), சுதந்திரமும், அமைதியும் நிலவுவதற்குரிய சூழ் நிலையை உருவாக்குவதனால் மட்டுமே அரசினரால் நலத்தை மேம்படுத்த இயலும். வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படும் பொழுது வேலைவாய்ப்புகளை உண்டாக்குவதைத் தவிர, வேறு எந்த வகையிலும் பொருளியல் விவகாரங்களில் அரசினர் தலையிடுதல் கூடாது என்று மெண்டவில் கூறுகிறார். பொருளியல் நடவடிக்கைகள் குறைந்துபோவதற்குச் சிக்கன நடவடிக்கையே (Frugality) முக்கிய காரணம் என்றும் அவர் சுட்டிக்காட்டுகிறார். வேலைவாய்ப்பை ஊக்குவிப்பதில் செலவினம் (Spending) மிக முக்கியமான பங்கு பெறமுடியும் என்றும் அவர் கருதுகிறார். இந்த வகையில் அவர் கெயின்ஸ் (Keynes) ஆதரவாளராகக் காட்சி தருகிறார். "பணக்கார நாடுகளில், ஏழை எளியோரில் பெரும் பகுதியினரை ஒருபோதும் சோம்பித்திரிய விடக்கூடாது; அதே

சமயம் அவர்கள் சம்பாதிப்பதைத் தொடர்ந்து செலவிட்டுக் கொண்டிருக்கும்படி பார்த்துக்கொள்ளவேண்டும். அப்போதுதான் தேவைகள் (Demand) இடைவிடாமல் ஒரே சீராக இருந்து கொண்டே இருக்கும் என்கிருர் மெண்டவில். இக்கருத்தின் அடிப்படையில் பார்க்கும்பொழுது, இக்காலப் பெருக்கி அணுகு முறையை (Multiplier approach) உண்மையில் தோற்றுவித்தவர் அவரே எனக் கருதலாம். அவருடைய அடிப்படை நலமுற்கோள் களுடன் இணைக்கப்பெற்றுள்ள பணவியல் பிற்சேர்க்கையும் (Monetary supplement) பெரும்பாலும் கெயின்ஸ் கொள்கையை ஆதாரமாகக் கொண்டதேயாகும். புழக்கத்தில் இருக்கும் பணத்தை வேலைவாய்ப்பு, விலைவாசி, ஊதியங்கள் இவற்றுடன் நெருங்கிய தொடர்புடையதாகச் செய்யவேண்டும். குறிப்பாகச் சொல்லப் போனுல், வாழ்க்கைச் செலவோடு ஊதியங்கள் தொடர்புடையன வாக இருத்தல்வேண்டும். இக்கருத்து இக்காலக் குறைந்தபட்ச ஊதியக் கோட்பாட்டை (Concept of minimum wages) ஒட்டியதாக அமைந்துள்ளது.

### தொன்மைப் பொருளியல் சிந்தனைகள்

பேக்கனுக்கும் ஸ்மித்துக்கும் இடைப்பட்ட காலத்தில் எழுந்த பொருளியல் நூல்களிலிருந்து நலச் செயல்முறை குறித்துத் திட்ட வட்டமான மூவகைக் கொள்கை நிலைகளை நாம் அறிந்துகொள் கிறேம். அவை, (1) நல உலகைக்காண விழைந்த கனவுலகவாதி களின் கற்பனைக் கோட்பாடுகள்; (2) பொருள்நலம், தேசீய மேலாதிக்கம் (National Supremacy) என்னும் இரட்டைக் குறிக் கோள்களையுடைய வாணிகக்கொள்கை; (3) உரிமை, தனியார் சுதந்திரம் ஆகியவற்றின் அடிப்படையில் நிகர மகிழ்ச்சியைப் பெருக்குவதற்குரிய நடைமுறை சாத்தியமான வழிதுறைகள் பற்றிய கொள்கைகள்.

இந்தக் காலத்தில் பல எழுத்தாளர்கள் பல்வேறு வகையான தீர்வுகளைக் கூறினர்கள். அத்தீர்வுகளை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். அவை (1) நடுவழித்தீர்வுகள்; (2) கூட்டாண்மைத் தீர்வுகள், (3) தனியார் சுவாதீனத் தீர்வுகள் என்பன. அந்த எழுத்தாளர்கள் கூறியுள்ள கருத்துகளை யெல்லாம் அடிப்படை நலமுற்கோள்கள் என்றும், துணை நல முற்கோள்கள் என்றும் சுருக்க மாகப் பகுத்துக்கூறலாம். வேளாண்மை அபிவிருத்தி, தாது வளங்களைப் பயன்படுத்தல், உற்பத்தித்திறனை ஊக்குவித்தல், தொழில்நுட்ப முன்னேற்றம், பணத்தின் பங்கு, அயல்நாட்டு வாணிகம் ஆகிய அனைத்தையும் அடிப்படை நல முற்கோள்களில் அடக்கலாம். பொருள் வளத்தைப் பெருக்குவதற்குரிய உடனடி

யான திட்டங்கள் இவையாகும். கல்வி (பொதுக்கல்வி, தொழிற் கல்வி), பொதுச் சுகாதாரம், விஞ்ஞான முன்னேற்றம், விஞ்ஞான ஆராய்ச்சி, கலைப்பண்பாட்டு வளர்ச்சி முதலியவைபோன்ற பொது நலத்தை மறைமுகமாக மேம்படுத்துவதற்குரிய எல்லா நடவடிக்கை களையும் இரண்டாவதாகக் கூறிய துணைநல முற்கோள்களில் அடக்கலாம். நாடு, இனப்பாகுபாடு கருதாமல் மாணவர்களையும், விஞ்ஞான ஆராய்ச்சிகளையும் பல்கலைக் கழகங்கள் தமக்குள் பரிமாறிக்கொள்வதற்கு வழிசெய்யும் ஒரு தாராளக் கொள்கையை வகுப்பதற்குத் துணை நலமுற்கோள்கள் வகை செய்கின்றன. எல்லா நல நடவடிக்கைகளும், முழுவேலை வாய்ப்பை உருவாக்குவதையே பிரதான அம்சமாகக் கொண்டிருக்கின்றன. வேலையில்லாத் திண்டாட்டம் என்பது மோசமான பொருளியல் அமைப்பைப் பிரதி பலிப்பதாகும். அது நீக்கமுடியாக் கேடு அன்று; தவிர்த்துவிடக் கூடிய கேடுதான். பொருளியல் சக்தி (Economic Power), வர்க்க ஆதிக்கம் (Class domination), தொழிலாளர்களைச் சுரண்டல் (Exploitation) ஆகியவை தொடர்பாக அரசியலுக்கும் பொருளிய லுக்குமிடையே நிலவும் உறவு நிலையைப் பொருத்து நலநடவடிக்கை களின் சாதனைகள் அனைத்தும் அமையும். உண்மையைக் கூறின், அரசாங்கம், சமுதாயம் பற்றிய கோட்பாடுகளைப் பொருளியல் கண்ணோட்டத்துடன் விளக்குவதற்கு மேற்கொள்ளப்பட்ட ஆரம்ப முயற்சிகளே இவை எனலாம். அரசாங்கத்தை ஒரு பொருளியல் நிறுவனமாகவும் (Economic institution), நாட்டின் பொது நலத்துக்கு உத்தரவாதமளிக்கும் நிறுவனமாகவும் அவர்கள் ஏற்றுக் கொண்டிருப்பது இங்கு முக்கியமாகக் குறிப்பிடத்தக்கதாகும். எல்லாவற்றுக்கும் மேலாக, ஒரு திட்டமான நலம் (Standard Welfare) குறித்து அவர்கள் தெரிவித்துள்ள கருத்தை நலப் பொரு ளியலுக்கு அவர்கள் செய்துள்ள மிகப் பெரிய சேவை எனக் கருதலாம். இக்காலத்திலும்கூடத் திட்டமான நலம் குறித்துப் போதிய கவனம் செலுத்தப்படவில்லை என்பது கவனிக்கத்தக்கது. 'பிழைப்பு (Livelihood) ஒவ்வொரு மனிதனுக்குப் பிறப்புரிமை அல்லவா? அது அவனுடைய சொத்து சுகம் அல்லவா? நீதியின் பொருளியல் சமூகக் குறிக்கோள்களுக்கு இணங்க அவனுடைய இந்த உரிமை இருக்கவேண்டாமா?' என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

மிகப்பெரிய மாளிகையாக உருப்பெற்றிருக்கும் நலப்பொரு ளியற் கோட்பாட்டுக்கு வலுவான அடித்தளம் அமைத்தவர் பெந்தாம் ஆவார். கால வரிசைப்படி பார்த்தால் ஸ்மித்துக்குப் பிற்பட்டவரே பெந்தாம். எனினும் பெந்தாமின் தத்துவம் அறிவியல் அடிப்படையில் அமைந்துள்ளதால், அவரின் சாதனையைப்

முதலில் ஆராய்வதே பொருத்தமாக இருக்கும். மகிழ்ச்சிக்கும் (Happiness), நலத்திற்கும் இடையிலான பாகுபாட்டைத் திட்ட வட்டமாக வகுத்துக் காட்டிய பெந்த்தாம், சமத்துவத்தின் (Equity) பொருளியல் முக்கியத்துவத்தை வலியுறுத்தியுள்ளார். சமூக ஏற்றத்தாழ்வோடு (Social inequity) சம அளவுப் பயன் பாடும் வெவ்வேறு மனிதருக்கு வெவ்வேறான முக்கியத்துவம் வாய்ந்ததாக அமையும். இந்த அடிப்படைக் கருது கோளிலிருந்து (Premise) அவர் தம்முடைய விதிகள் (Axioms) பலவற்றை வகுத்துள்ளார். அவ்வாறு அவர் வகுத்த விதிகள் வருமாறு: (1) செல்வத்தின் ஒவ்வொரு பாகத்திற்கும் இணையான மகிழ்ச்சியின் பாகம் உண்டு. (2) ஏற்றத்தாழ்வான செல்வங்களை உடைய இரண்டு தனிநபர்களில், யாரிடம் பெரும்பான்மையான செல்வம் உள்ளதோ அவருக்குப் பெரும்பான்மையான மகிழ்ச்சி கிட்டும். (3) பணக்காரருக்குக் கிடைக்கும் மிகுதியான மகிழ்ச்சி அவருடைய செல்வத்தின் மிகுதியைவிட அதிகமாக இருக்காது. (4) அதே காரணங்களினால், இரண்டு செல்வத்தொகுதிகளுக்கு (Masses of Wea th) இடையிலான ஏற்றத்தாழ்வு பெருமளவில் இருக்குமானால், அவற்றுக்கு இணையான மகிழ்ச்சியின் தொகுதிகளும் அதே அளவு ஏற்றத்தாழ்வுடனேயே அமைந்திருக்கும். (5) ஏற்றத்தாழ்வுகள் குறைந்து கொண்டே வந்து சமநிலையை நெருங்க நெருங்க மொத்த மகிழ்ச்சியின் தொகுதியும் அதிகமாகிக்கொண்டேபோகும்.

சமத்துவத்தின் முக்கியத்துவத்தை அவர் எந்த அளவுக்கு வலுயுறுத்தினாரோ அதே அளவுக்குப் பூரணசுதந்திரத்தையும் (Perfect Liberty) அவர் வலியுறுத்தினார். எனினும் இவை இரண்டும் ஒன்றுக்கொன்று முரண்பாடான சக்திகளாகும். எனவே 'சமத்துவ உச்சம் நாடும் தத்துவம் (Equality Maximising Principle) ஒன்றை மேற்கொள்ளமுடியாவிட்டால், குறைந்தது ஏற்றத்தாழ்வுக் குறைப்புத் தத்துவம் (Inequality minimising Principle) ஒன்றையாவது பிரகடனம் செய்யவேண்டும்' என்று அவர் விதிவகுத்துள்ளார். இந்தவகையில் முதலாளித்துவத்தையும் (Capitalism), பொதுவுடைமையையும் (Communism) இணைக்கும் சங்கிலியாகப் பெந்த்தாம் விளங்குகிறார். பொதுவுடைமையில் காணும் நீதியையும். முதலாளித்துவத்தின் திறமையையும் அவர் ஒன்றாகக் கலந்துள்ளார்; வாழ்க்கை வாய்ப்புகளின் சமத்துவத்தையும் சுதந்திரத் தொழில் முயற்சி உரிமையினையும் அவர் இரண்டறக் கலந்துவைத்துள்ளார். அனுபவ வாதத்தையும் (Empiricism) பகுத்தறிவு வாதத்தையும் (Rationalism) ஒன்றிணைத்து அவர் ஒரு

5 Strark H: Jeremy Bentham as an Economist or Liperty and Equality, 'Economic Journal 1941, pp. 73, 74.

தத்துவக்கோட்பாட்டை வகுத்தது போன்றே, சுதந்திரத்தையும் சமத்துவத்தையும் ஒருங்கிணைத்து நடைமுறைச் சித்தாந்தம் ஒன்றையும் அவர் வகுத்தார். இதன் மூலம் தனி நபருக்கும் சமுதாயத்திற்குமிடையே இணக்கத்தை ஏற்படுத்தி இருக்கிருர். 'இது போன்றதோர் உயர்ந்த கோட்பாட்டை இதுவரை எவரும் சிந்தித்துப் பார்த்ததில்லை' என அறிஞர் ஸ்டார்க் (Stark) கூறியுள்ள கருத்து சாலவும் பொருந்தும்.

பெந்ததாமிய முறை முழுவதுமே உணர்ச்சிகளின் அடிப்படையில் உருவாக்கப்பட்டுள்ளது. அவருடைய தத்துவம் மனவெழுச்சியை உண்டாக்க வல்லது; தன்னலமுனைவுத் தன்மை (Hedonistic) உடையது. 'ஒரு குறிப்பிட்ட சமூகத்தில் ஒரு குறிப்பிட்ட காலத்தில் உச்ச அளவு மகிழ்ச்சியை உண்டாக்குவதே அவருடைய முறையின் நோக்கம்', அவருடைய அறநெறிக் கணிதத்தில் (Moral Arithmatic), மகிழ்வூட்டும் உணர்ச்சிகள் என்பவை நேர் எண் (positive) அளவுகளாகும். துன்பம் தரும் உணர்ச்சிகள் என்பவை எதிர் எண் (Nagative) அளவுகளாகும். மனிதனின் மகிழ்ச்சியை உச்சமடையச் செய்வதற்கான அவருடைய தன்னலச் செலவு வசதி யமைப்பில் (Hedomistic imperative), அரசாங்கத்திற்கு இரண்டாந்தரமான பங்குதான் உண்டு.

மிகவும் பயன்தரக் கூடியது தடையிலாப் பொருளியலே (Free economy) என்று 'அரசியல் பொருளியல் கையேடு' (Manual of political economy, 1973) நிரூபிக்கிறது. பொருளியல் விவகாரங்கள் அனைத்திலும், அரசினர் தலையிடாமல் ஒதுங்கி நின்று கவனிக்கும் போக்கையே மேற்கொள்ள வேண்டும் என்றும் அது வற்புறுத்துகிறது. இந்த அடிப்படையான கொள்கையை அடித்தளமாகக் கொண்டுதான், தேசிய நலத்தை இயன்ற அளவு உச்ச நிலைக்கு மேம்படுத்துவதற்குரிய வழிதுறையாகிய அரசியல் பொருளியல் முறை உருவாக்கப் பெற்றுள்ளது.

பொருளியலுக்கு உகந்த எல்லா நடவடிக்கைகளையும் மூவகையாகப் பகுக்கலாம். முதலாவது தனி நபர் நடவடிக்கைகள் (Sponte acta individuals); இரண்டாவது அரசினரின் திட்டமிட்ட நடவடிக்கைகள் (Agenda of the Government); மூன்ருவது அரசினர் திட்டமிடா நடவடிக்கைகள் (Non agenda of the Government). பொருளியல் கொள்கைகளின்கீழ் அனுபவ வாயிலாக வகுக்கப்பட்ட நடவடிக்கைகள் யாவும் ஆராயப்பட்டு, அரசின் திட்டமிட்ட நடவடிக்கைகளிலோ அல்லது திட்டமிடா நடவடிக்கைகளிலோ சேர்க்கப்படுகின்றன. இலாப நட்டம் பற்றிய பயன்

பாட்டு நுண்கணிப்பு (utilitarian calculus), பெந்த்தாமுக்கு ஒரு கட்டளைக் கல்லாகப் (Touchstone) பயன்படுகிறது. இவ்வாறாக, அவர் நலக்கொள்கையை வகுப்பதற்குரிய துல்லியமான விஞ்ஞான முறை ஒன்றை வகுக்கிறார். பொருளியல் நடவடிக்கைகளில் அரசினர் தலையிடுவதைவிடத் தலையிடாமல் இருப்பதன் மூலம் பொது நலனுக்கு அதிகமாகத் துணை செய்ய முடியும் என்பதையும் அவர் நிருபிக்கிறார், ஆடம் ஸ்மித்துக்கு 20 ஆண்டுகளுக்குப் பின்னரும், ரிக்கார்டோவுக்கு 20 ஆண்டுகளுக்கு முன்னரும் வாழ்ந்த பெந்த்தாம் எழுதிய நூல் சமூக விஞ்ஞான வளர்ச்சியில் மிகவும் சுவையுடையதாக விளங்குகிறது. அயல்நாட்டு வாணிபம், கடும் வட்டி முறை (Usury) ஆகியவற்றில் அரசினர் தலையிடுவது பகுத்தறிவுக்கு உகந்ததே என்பது ஆடம் ஸ்மித் கருத்து; இக்கருத்தைப் பொருளியல் அரசியல், சமூகவியல் காரணங்களைக் காட்டி பெந்த்தாம் மறுக்கிறார். பொருளியல் சுதந்திரம் என்பது ஆடம் ஸ்மித்தைப் பொருத்த வரையில் வாய்ப்பின் ஒரு முற்கோளே யாகும்; ஆனால் பெந்த்தாமுக்கு அது ஒரு தத்துவம்.

'தனி நபர் நலனைத் தவிர, வேறு உண்மையான நலன் யாதுமில்லை; மிகப்பெரும் தொகையினரின் மிகப்பெரும் நலன் என்பது மேற்போக்கானதே' என்னும் பெந்த்தாமின் கொள்கை ஒத்துக்கொள்ள இயலாததாக அமைந்துள்ளது. 'தற்பெருமை (Egotism) என்பது அண்டை அயலார் மீது அன்பாக உருப் பெறுவதுபோல், தனியார் சுவாதீனம் (individualism), சமுதாய சுவாதீனக் கொள்கைக்கு (Societism) வழி வகுக்கும்.' சுதந்திரச் சிந்தனையின் சாரம் இதுதான். தனி நபரின் தன்னலத்திற்கும், மொத்த நலத்திற்கும் இடையில் தானாகவே ஒருவகை இணைப்பு ஏற்பட்டுவிடும் என்று சுதந்திரச் சிந்தனையாளர்கள் கருதுகிறார்கள். எனவே சமூகக் கட்டுப்பாடுகளிலிருந்து தனி நபர்களை முற்றிலும் விடுவித்துவிட வேண்டும் என்று அவர்கள் தீவிரமாக வலியுறுத்துகிறார்கள்.

பயன்பாட்டுத் தத்துவம் (utilitarian principle), அறிவியல் வழியாகச் சென்று கணிதத்துடன் இணைந்து, நலப் பொருளியல் ஒரு தனிப்பெரும் ஆராய்ச்சித் துறையாகப் பல்கிப் பெருகுவதற்கான பெரும் வாய்ப்புக்களை உண்டாக்கியிருக்கிறது. இந்த வகையில் பெந்த்தாம் ஆற்றியுள்ள தொண்டு மகத்தானது. ஒரு சமுதாயத்தின் மொத்த மகிழ்ச்சி (sum total of the happiness) அச் சமுதாயத்திலுள்ள தனி நபர்களின் மகிழ்ச்சியின் கூட்டு மொத்தமேயாகும்; தனி ஒரு மனிதனுடைய மகிழ்ச்சி என்பது அவன் பல வகைகளிலும் பெற்ற மன நிறைவுகளின் கூட்டு மொத்தமாகும். பயன்பாட்டை உச்ச நிலைக்கு உயர்த்தும்

தத்துவம் (Maximisation of utility principle) என்பது இதுவே யாம். இதையே பயன்பாட்டு நுண்கணிப்பு (Utility Calculus) என்றும் சொல்வார்கள். இது விஞ்ஞான அறிவியல்களுள் (Scientific ethics) ஒன்று. மனநிறைவை உச்ச நிலைக்கு உயர்த்து வது என்பது பெரும்பாலும் பொருளியல் காரணங்களினுலேயே சாத்தியமாகின்றது என்ற உண்மை அறிவியலின் ஒரு பிரிவாக அமைந்துள்ளது. இந்த பிரிவிலிருந்து நலப்பொருளியல் உரு வாகிறது. 'அறிவியல் பொருளியல் சிக்கல்களில் வேறுபாட்டு நுண் கணிப்பைப் (Diffierential Calculus) பயன்படுத்த வேண்டிய அவசியத்தை உச்ச மகிழ்ச்சித் தத்துவம் உண்டாக்குகிறது' என்ற கருத்தில் விட்டில், எட்ஜ்வொர்த் இருவரும் உடன்படுகிருர்கள். பெந்த்தாமியத் தத்துவத்தின் பலனுகக் கிடைத்துள்ள அளவை அறவியல் கோட்பாடுகளில் (quantitative ethical concepts) கணிதத்தைப் பயன்படுத்தியதன் விளைவாகவே நலக்கோட்டின் பெரும்பகுதி வளர்ச்சியடைந்துள்ளது.

கோட்பாட்டு நிலை, நடைமுறை நிலை இரண்டிலும் பெந்த்தாம் கோட்பாட்டினுல் ஏற்பட்டுள்ள விளைவு மிக மகத்தானது எனலாம். 19 ஆம் நூற்றுண்டில் எழுந்த பொருளியல் நூல்கள் பல்வேறு மக்களின் மன நிறைவு ஒப்பீட்டுத்தன்மை (Comparability of satisfaction of diffierent people) போன்ற சில சிறந்த நுட்ப முறைகளின் போர்வை போர்த்திக் கொண்டிருந்தாலும், அவற்றைப் பெந்த்தாமியக் கோட்பாட்டுக்குப் புத்துயிர் கொடுக்க எழுந்தவை என்றே சொல்ல வேண்டும், மிகப் பெருமளவு மக்களின் மிகப் பெருமளவு நலனை ஈடேற்ற வேண்டியது, இறுதியாக அரசாங்கத் தின் பொறுப்பாகவே அமையும்: அந்த அரசாங்கமும், வாக்குரிமை யின் மூலம் மக்கள் பெற்ற புதிய அதிகாரத்தின் விளைவேயாகும் என்னும் கொள்கையைச் சிறிதும் விதிவிலக்கின்றி உலகிலுள்ள எல்லா நாடுகளுமே ஏற்றுக்கொண்டுள்ளன.

இறுதியாக இன்ப வாழ்வியல் நுண்கணிப்பின் (Felicific Calculus) அடிப்படையில் அமைந்த சமன்பாட்டுத் திட்டத் தரம் (Equalitarion standard) ஒன்றின் நிறைகுறைகளைக் குறித்து ஆராய வேண்டியது அவசியமாகும். இந்தக் கோட்பாட்டின் நேர்மைத் தக வானது (Validity) முற்றிலும் அதன் எடுகோளையே (assumption) நம்பியிருக்கிறது. வெவ்வேறு தனிநபர்களின் செல்வ ஏற்றத்தாழ் வுக்கு ஏற்றவாறு அவர்களுக்கு மகிழ்ச்சியை ஏற்றத்தாழ்வுடன் கொடுக்கின்ற சக்தி, செல்வத்திற்கு உண்டா? உண்டு என்று பெந்த்தாம் கருதுகிருர். ஆனுல், அறிஞர் ஹெகால் (Hegal) அவ்வாறு கருதவில்லை. தனி நபர்கள் ஏற்றத் தாழ்வுடன் இருப்பது

இயற்கை என்று அவர் கருதுகிறார். இவ்விரு கருத்துகளிலும் எது சரியானது என்பதை நிருணயிக்கப் பொருளியலில் எவ்விதச் சாதனமும் இல்லை. இந்தச் சிக்கல் அறிஞர் மில்லுக்கு மிகுந்த தொல்லையைக் கொடுத்தது. அறிஞர் பிகோ இச் சிக்கலுக்குத் தீர்வு காணத் துணிந்து பெந்த்தாம், ஹெகால் ஆகிய இருவரின் கருத்துகளுக்கும் இடைப்பட்டதொரு நிலையை வகுத்தார். செல்வத்தைச் சரிசமப் படுத்துவதால் பொருள் நலத்தைப் பெருக்குவது இயலாமல் போகலாம்' என்பது பிகோவின் கருத்து.

## தொன்மைக் கண்ணோட்டம்

உழைப்பு அடக்கவிலைக் கோட்பாட்டில் (Labour cost theory) ஸ்மித்துக்குள்ள ஆழ்ந்த நம்பிக்கைதான் அவருடைய பொருளியல் தத்துவத்தின் உயிர்நாடி (Keynote) என்று சொல்ல வேண்டும். ஒவ்வொரு நாட்டின் ஆண்டு உழைப்பையும் அந் நாட்டின் நிதி (Fund) எனலாம். நாட்டு மக்கள் ஆண்டுதோறும் நுகர்கின்ற தேவைப் பொருள்கள் அனைத்தையும் வழங்குவது ஆண்டு உழைப்புதான். மக்கள் நுகரும் பொருள்களில், உழைப்பினால் நேரடியாகக் கிடைக்கும் பொருள்களும், உழைப்பினால் உற்பத்தியான பொருள்களை மற்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதன் மூலம் கிடைக்கும் பொருள்களும் அடங்கும்' என்று 'நாடுகளின் செல்வம்' (Wealth of Nations) என்னும் தமது நூலின் முன்னுரையில் ஸ்மித் குறிப்பிடுகிறார். செல்வத்தின் உண்மையான ஆதாரமாக இருப்பது மனித நடவடிக்கைதான். எனவே, நாட்டின் இயற்கை வளங்களைப் (Natural resource) பெருக்குவதற்குரிய உழைப்பின் விளைவுகளை நாடு முழுவதற்கும் பகிர்ந்தளிப்பது (National Dividend) குறித்தும், அந்த உழைப்பை ஆதாரமாகக் கொண்டு எல்லா மதிப்புகளையும், பொருள் நலத்தையும் மதிப்பிடுவது பற்றியும் ஸ்மித் கூறியுள்ள அடிப்படையான கருத்துகள் தாம் 'அங்காடிச் செயல் முறைகள்' அனைத்துக்கும் பின்னணியாக விளங்குகின்றன.

ஸ்மித் வகுத்த விலை முறையில் (Price system) பெரிதும் ஆதிக்கம் செலுத்துவதும் அவருடைய உழைப்பு அடக்கவிலைக் கோட்பாடுதான். ஆங்கிலப் பொருளியல் சிந்தனையில் காணும் ஒதுக்கீடற்ற அம்சங்களுக்கு (non-allcative elements) எல்லாம் மூல ஊற்றாக அமைந்திருப்பதும் அவருடைய உழைப்பு அடக்கவிலைக் கோட்பாடேயாகும். இதைப் பொருளியல் சிக்கல்களைத் தீர்ப்பதற்கு 'இயற்கைக்கு எதிராக மனிதன் என்னும் அணுகுமுறை

[6] Myint, HLA : Welfare significance of productive Labour 'Review of Economics studies' 1943-44, p 20.

எனக் கூறலாம். உழைக்கும் தொழிலாளர்களின் சக்திக்கு எதிரான 'உண்மையான' அல்லது தொழில் நுட்பத் தடங்கல்களை யெல்லாம் அகற்றுவதன் மூலமாகவோ, அல்லது பயன்படுத்தும் உழைப்பின் அளவை அதிகரிப்பதன் வாயிலாகவோ பொருள்நலத்தைப் பெருக் கலாம் என்பதே தர்க்க முறைப்படி நாம் அறிந்துகொள்ளக்கூடிய உண்மையாகும்.

இந்தப் பின்னணியில், ஸ்மித்தின் உழைப்புப் பகிர்வுக்கோட் பாட்டை (Theory Division of Labour) ஆராயும்பொழுது, 'உழைப் புக்கு எதிரான தொழில் நுட்பத் தடங்கல்களை நீக்கிவிட்டுப் பொருள் நலத்தைப் பெருக்கவேண்டும்' என்னும் உண்மை தெள் ளத் தெளிவாகப் புலனாகின்றது. இதிலிருந்து, பெருகிவரும் பொருளியலுக்குச் சிறந்ததொரு முன்மாதிரியாகத் 'தடையிலா நுகர்வுக்கொள்கை' உருவாவதற்கு வழிபிறப்பதைக் காணலாம்.

மேம்பாட்டுக்கான (Expansion) ஒரு கருவியே போட்டி (competition) என்று தொன்மைப் பொருளியல் வாதிகளில் பெரும் பாலோர் கருதுகிறார்கள். ஆனால் நவீன நலக்கோட்பாட்டுவாதி களோ, போட்டியை மறுசீரமைவுகளின் (Readjustments) பயன் களை மேலும் தீவிரப்படுத்துவதற்குரிய ஓர் அடிப்படை முறை என்று கருதுகின்றனர். சுருங்கக்கூறின், போட்டியானது அதிகமான இறுக்கத்தை (Tightening) உண்டாக்குகிறதேயன்றி, மேலும் விரி வடைவதற்கு (Widening) வழி வகுக்கவில்லை என்பதே அவர்கள் கருத்து.

பொருளியல் என்றால் மதிப்புக் கோட்பாட்டை (Value Theory) விட மேம்பட்டது என்று ரிக்கார்டோவும் கருதுகிறார். 'வளங்கள்' (Riches) அல்லது பொருள்நலத்தில், பொருளியல் அக்கறை காட்டு கிறது என்று அவர் கூறுகிறார். 'இந்த 'வளங்கள்' அல்லது பொருள் நலம் என்பது சமூக உற்பத்திப் பொருள்களின் அளவுகளுக்குச் சமமாகும் என்பது அவர் கொள்கை. அவர் தமது மதிப்புக் கோட் பாட்டிலிருந்து, சமூக உற்பத்திப் பொருள்களின் நிகர மதிப்பு (Aggregate Value) பற்றிய கோட்பாட்டை உருவாக்குகின்றார். ஒரு குறிப்பிட்ட அளவு சாகுபடி நிலத்திற்குள், ஒரு குறிப்பிட்ட கருவிகளைக்கொண்டு, ஒரு குறிப்பிட்ட அளவான சமூக உற்பத்திப் பொருள்களை உற்பத்தி செய்வதற்குத் தேவையான மொத்த உழைப் பின் அளவைக்கொண்டு சமூக உற்பத்திப் பொருள்களின் நிகர மதிப்பு நிருணயிக்கப்படுகின்றது. இவ்வாறாகச் சமூக உற்பத்திப் பொருள்களை எதிர் நோக்கும் தொழில் நுட்பத் தடங்கல்களைக் (Technological obstacles) காட்டும் குறியீடாக (Index) இம்மதிப்

பீடு அமைவதுடன், இம்மதிப்பானது பொருள் நலத்திலிருந்து தலைகீழ் விகிதத்தில் (Inversely) மாறுபாடுகிறது. 'நிகர வருவாயைப் (Net Revenue) பெருக்குவதன் மூலமாக, அதாவது, நிகரச் சமூக உற்பத்தி அளவுக்கும், பிழைப்பு மட்ட நிதிக்கும் (Subsistence Fund) இடையிலான இடைவெளியைப் பெருக்குவதன் வாயிலாகவே, உற்பத்தியாகும் பொருள்களின் அளவைப் பெருக்க முடியும்.

அறிஞர் மால்தஸ் (Malthus) வகுத்த புகழ்பெற்ற 'மக்கள் தொகைக் கோட்பாட்டுக்கு' (Theory of Population) அடித்தளமாக அமைந்திருப்பது 'பயன்பாட்டுக்கொள்கை' (Utilitarnism) ஆகும். எனவே, அவருடைய மனிதாபிமானத்தை (humanism) ஐயுறுவதற்கு இடமில்லை. எளியோர் நிவாரணம் (Poor Relief) போன்ற சட்டபூர்வமான நிவாரணங்கள் அனைத்தையும் அவர் எதிர்க்கின்றார். எளியோருக்கு உதவிபுரிவதை அவர் எதிர்க்கவில்லை' ஆனால் அத்தகைய உதவி மேலெழுந்த வாரியாகத்தான் இருக்க முடியும் என்பதே அவரது கருத்து.

ஏறத்தாழ 3·6 கோடி மக்களின் மகிழ்ச்சிக்குக் காரணமாகிய செல்வத்துடன் தொடர்புடைய காரணங்களேயன்றி, இன்னும் அதிக முக்கியமான காரணங்களுக்காகத் தோழிலாளர் வர்க்கத்தினருக்கு நல்ல ஊதியம் வழங்கவேண்டும்' என்னும் மால்தஸின் கூற்றைச் சற்று ஆராய்வோம். அவர் கையாண்ட சிக்கல்கள் பற்றிய உண்மையை அறிய எல்லோருமே ஆவலுடையவர்கள்தாம். செல்வத்தைக் காட்டிலும் மனிதனே முக்கியமானவன், முதன்மையானவன் என்றும், மனிதனின் நல்வாழ்வுடன் தொடர்புடையதே செல்வம் என்றும் முதன் முதல் வலியுறுத்திய பெருமை மால்தஸையே சாரும். 'மற்றப் பொருளிய லறிஞர்கள் செல்வத்திற்குப் பதிலாக மனிதனுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்திருப்பார்களானல், பொருளியல் விஞ்ஞானத்தின் போக்கே வேறு திசையில் சென்றிருக்கும்'.

ரிக்கார்டோவுடனும், அவர் காலத்திய மற்றப் பொருளிய லறிஞர்களோடும் ஒப்பிடும்பொழுது, அறிஞர் சீனியர் (Senior), மதிப்பைக் (Value) கையாண்டிருக்கும் விதம், சில அம்சங்களில் தனித்தன்மை வாய்ந்ததாக விளங்குகின்றது. மதிப்புக் கோட்பாட்டில் (Value Theory), பயன்பாட்டுக்கு (Utility) ரிக்கார்டோ அளித்ததைவிட அதிகமாக முக்கியத்துவத்தை சீனியர் அளித்துள்ளார். 'இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட்பாட்டை (Marginal Utility Theory) முன்னரே உணர்ந்து உரைத்த (Prophets) பலருள்

சீனியரும் ஒருவர்' என்று ஜெவான்ஸ் பாராட்டுகிறர். எனினும் அவருடைய ஆய்வில் (Treatment) பொதிந்துள்ள உண்மைப் பொருளைப் பரிவுணர்வோடு நாம் உணர்ந்துகொண்டாலன்றிப், பயன்பாட்டுப் பகுப்பாய்வுக்கும், நலப் பகுப்பாய்வுக்கும் அவர் ஆற்றியுள்ள அருந்தொண்டின் அளவை நம்மால் அறிந்துகொள்ள இயலாது. பயன்பாட்டு நோக்கங்கள் ஆளுக்கு ஆள் வேறுபடுவதை அவர் நன்கு உணர்ந்திருக்கிறர். அதேபோல், இறுதிநிலைப் பயன் பாட்டுக் கோட்பாட்டுக்குரிய பல்வகைப் பயன்பாட்டு அம்சங்களை அளவிடுவதில் ஏற்படும் சிரமங்களையும் அவர் அறிந்துள்ளார். இந்தச் சிரமங்களுக்கு இடையிலும், அவர் தம்முடைய கருத்துகளை ஓர் ஒழுங்கான கோட்பாடாக உருவாக்கியுள்ளார்.

இறுதிநிலைத் தத்துவச் சிந்தனையாளர்களில் (Marginalists), நலமுறையை (Welfare System) உருவாக்கிய விக்செல் (Wicksell) குறிப்பிடத்தக்கவர். உச்ச அளவு நலத்தை அடைவதற்குரிய இறுதி நிலைச் சூழல்களை (Marginal Conditions) முதன் முதலில் கொண் டிருந்தது விக்செலின் நலமுறையேயாகும். இறுதிநிலைச் சூழல் களுக்கு உதவக்கூடிய செயல்முறைகளை அவர் ஒழுங்குபடுத்தினர். பரிமாற்றங்கள் (Exchanges) குறித்து அவர் வகுத்த இறுதிநிலைச் சூழல்கள், பயன்பாட்டின் ஆரக்கால் ஒப்பீடுகளைச் (Inter Personal) Comparisons) சார்ந்தனவாக இருக்கவில்லை. அந்த இறுதிநிலைச் சூழல்களை அளவிடுவதிலுள்ள சிரமங்களையும், அத்தகைய அளவீட் டினல் உண்டாகும் பயனின்மை (futility) குறித்தும் அவர் ஆராய்ந் துள்ளார். ஆனல், மற்ற இறுதிநிலைச் சூழல்கள் யாவும், ஆரக்கால் ஒப்பீடுகளின் கருதுகோளை (Premise) அடிப்படையாகக் கொண்டன வாக அமைந்துள்ளன. சம வருமானங்களுக்குரிய சம இறுதிநிலைப் பயன்பாடுகளை அடிப்படையாகக்கொண்டு, பணக்காரர்களிட மிருந்து ஏழைகளுக்கு வருமானத்தை மாற்றுவதன் மூலமாக நலத்தைப் பெருக்க இயலும் என அவர் வாதிடுகிறர். இதைத் தொடர்ந்து, குறைந்த அளவு ஊதியங்களையும் (Minimum Wages), சுங்கவரிகளையும் (Tariffs), ஏற்படுத்த வேண்டுமென அவர் வலியுறுத்துகிறர். இவ்வாறு வலியுறுத்துவது, பரிமாற்றத்திற்குரிய இறுதிநிலைச் சூழல்களில் தலையிடுவதாகும் என்பதை அவர் உணர்ந் துள்ளபோதிலும், அவ்வாறு வலியுறுத்துவதை அவர் கைவிட வில்லை. இத்தகைய விதிமுறைகளைத் தாம் வகுத்துள்ளபோதிலும், பெந்த்தாமினுடைய உச்ச நிறைவுக் கோட்பாட்டை விக்செல் கண்டிக்கிறர். எனினும், அவர் உற்பத்தியை உச்ச அளவுக்குப் பெருக்குவதற்குத் தேவையானதொரு நிபந்தனையாகத் தடை

[7] Ruggles, Nancy: The Welfare of the Marginal cost princing principles 'Review of Economic studies' 1949-50, p 29.

யிலாப் போட்டியைக் கொள்கின்றார். எவ்வாறாயினும், அவருடைய கொள்கை, வால்ராஸின் (Walras) கொள்கையிலிருந்து மிகவும் முற்போக்கானது என்பதில் ஐயமில்லை.

அதே சிந்தனைப் போக்கோடு சமுதாயத்தின் பல்வேறு வடிவங்களில் பொருளியல் கணிப்பு (Economic Calculation) பற்றிய சிக்கலைப் பொது நிதியியல் (Public Finance) குறித்த அறிஞர் சாக்ஸின் (Sax) நூலோடு சேர்த்து அறிஞர் வைசர் (Weiser) ஆராய்ந்துள்ளார். இதில் அவர் கையாண்டுள்ள முறை ஏறத்தாழ ஆங்கில நலப் பொருளியலுக்குரிய ஆஸ்திரிய இணைமாற்றையும் (Equivalent), பொருள்வளங்களின் உத்தம ஒதுக்கீட்டுக்கான (Optimum Allocation) இத்தாலிய பாரிட்டோ—பாரோன் விதிமுறையையும் ஒத்திருக்கிறது. ஆனால் ஆஸ்திரிய முறை முன்னதைப்போன்று ஒரு முறையான ஆய்வு என்றோ, அல்லது பின்னத்தைப்போன்று தூய துல்லியமான கோட்பாட்டுச் சூத்திரத்தின் விளக்கமாகவோ அமைந்திருக்கவில்லை. வைசரின் கருத்துப்படி பரிமாற்றப் பொருளியலானது பரிமாற்ற மதிப்புகளை உச்சநிலைக்கு உயர்த்துகிறது; இயற்கை மதிப்புகளை (சமூகப் பயன்பாடு) அரசாங்கம் உச்சநிலைக்கு உயர்த்துகிறது. இவ்விரு நோக்கங்களும் ஒன்றுக்கொன்று முரண்படுவதாகத் தோன்றலாம். இதைத் தவிரப் பரிமாற்ற மதிப்புகளுக்கு எதிரிடையாக இயற்கை, சமூக மதிப்புகளைக் கணக்கிடுவது எவ்வாறு என்ற பகுப்பாய்வுக்குமேலாக வைசர் யாதும் சொல்லவில்லை. கணக்கிடுவதற்குரிய பரிமாற்ற மதிப்புகளை மட்டும் சமூகக்கொள்கைக்கான தெளிவிலக்கணங்களாகக் கொள்ளமுடியாது.

இந்த வகையில் லாந்தார்ட்ஸ் (Laundharts) ஆற்றியுள்ள சேவையைக் குறிப்பிட்டாகவேண்டும். அவர் முற்றிலும் விதியியலாய் அமைந்த நலப்பொருளியல் கோட்பாடு (Pure Theory of Welfare Economics) ஒன்றை வகுத்தளித்தார். சமநிலையில் (Equilibrium) பரிமாற்றமானது. உச்ச அளவு நிகரப்பயன்பாட்டை உண்டாக்குகிறது என்பதை அவர் நிரூபித்துக் காட்டினார். சமநிலை விலையைக்காட்டிலும் (Equilibirium Price), ஏழை எளியோருக்கு அதிகச் சாதகமாக இருக்கக்கூடிய ஒரு விலையில் பரிமாற்றம் நிகழுமானால், ஏழை மனிதனுக்குக் கிடைக்கும் இலாபம் அதிகமாக இருப்பதுடன், மொத்த இலாபமும் (Total Gain) அதிகமாக இருக்கும் என்று லாந்தார்ட்ஸ் வாதிடுகிறார். தலையிடாமைக் கொள்கை பெருஞ்செல்வாக்குடன் விளங்கிய இக் குறிப்பிட்ட காலத்தில், அந்தக் கொள்கையை இவர் கடுமையாகத் தாக்கி வந்தார் என்பதையும் இங்குக் குறிப்பிடவேண்டும். 'தலையிடாமைக்

கொள்கையை ஆதரிப்பதென்பது வலியோரின் தயவை எளியோர் எதிர்பார்க்கும்படி செய்வதாகும்' என்கிறார் அவர்.

இதே காலத்தைச் சேர்ந்த மற்றொரு பொருளியல் அறிஞரான சிஸ்மாண்டி (Sismondi) என்பார் அரசினர் தலையிடவேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துகிறார். தொன்மைப் பொருளியல்வாதிகளின் பொதுவான கொள்கைகளை அவர் ஏற்றுக்கொண்டாலும், இறுதிக் குறிக்கோள், அதை அடையும் முறை ஆகியவை குறித்துப் பெரிதும் வேறுபடுகிறார்; பழைய மரபுகளை (Orthodoxy) அவர் உடைத்தெறிகிறார்; ஏற்றத்தாழ்வுகள் (Inequalities) பெருகுவதற்குக் காரணம் தலையிடாமைக் கொள்கையே என்று அவர் திட்டமாகக் கூறுகிறார். நல்வாழ்வே (Well Being) இறுதிக் குறிக்கோள்; உற்பத்தியாகும் பொருள்களை நுகர்வுக்காகச் சிறந்த முறையில் பகிர்வதன்மூலம் மக்களுக்கு மகிழ்ச்சி பெருகும் என்கிறார் அவர். ஸ்மித்தின் அடிப்படைகளையும் (Fundamentals), தாம் சொந்தமாக வகுத்த முற்போக்குக் கொள்கையையும் (Liberalism) ஒருங்கிணைத்த ஒரு கலவையாகச் சிஸ்மாண்டியின் கொள்கை அமைந்துள்ளது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பயன்பாட்டுச் சிந்தனையாளர்களில் தலையாயவராக விளங்குபவர் மில் ஆவார். 'பெந்த்தாமின் பயன்பாட்டுக் கொள்கையே அவருடைய (மில்) தத்துவம்; அவருடைய தந்தையின் உளவியலே அவருடையதுமாகும்' என்று அறிஞர் ஜே. எப். பெல் குறிப்பிடுகிறார். நாகரீக நாடுகளில் முற்போக்கான பொருளியல் முன்னேற்றங்களைக் குறிப்பிடுவனவாகப் பல அம்சங்களை மில் குறிப்பிடுகிறார். முதலாவது செல்வத்தில் முன்னேற்றம்; இரண்டாவது பொருள்வள வாய்ப்புகளில் வளர்ச்சி; மூன்றாவது உற்பத்தியிலும், மக்கள் தொகையிலும் பெருக்கம்; நான்காவது இயற்கையை வெல்வதற்குரிய மனிதனின் சக்தியில் உயர்வு; ஐந்தாவது மனித குலத்தின் பொது மக்களுடைய வாணிகத் திறமைகளில் ஏற்படும் மேம்பாடு; ஆறாவதாக ஒருங்கிணைந்து செயலாவதற்குரியமனித இனத்தின் ஆற்றலில் உண்டாகும் அபிவிருத்தி; உற்பத்தி செய்வதற்காக அல்லது மக்களின் பொதுவான நுகர்வுக்காகக் கூட்டுப்பங்குக் கம்பெனிகளையும் (Joint stock companies), தொழிலாளர் சங்கங்களையும் அமைப்பதற்கு ஏற்றவாறு மக்களிடையே கூட்டுறவு உணர்வும், கூட்டுறவுத் திறனும் உண்டாவதால். சுருங்கக் கூறின், நலம் அல்லது பொருளியல் நல்வாழ்வு என்பது பரிமாற்ற மதிப்புடையதும், பயனுள்ளதும், ஏற்றுக்கொள்ளத் தக்கதுமான எல்லாப் பொருள்களையும் உள்ளடக்கியதாகும் எனலாம். இவற்றுள் திறமைகளையும்;

செயல் திறன் களையும்கூட, அவர் சேர்த்துள்ளார். தம்முடைய காலத்தின் பயன்பாட்டுக் கொள்கைகளுக்கெல்லாம் முன்னோடியாக மில் கருதப்பட்ட போதிலும், அவர் கொண்டிருந்த முற்போக்குக் கருத்துகள் அவருடைய பொருளியல் அடிப்படைகளுக்கு மாறுபட்டனவாக விளங்குகின்றன. அவரை ஒரு முற்போக்குவாதி என்றும் கூறலாமெனினும், அவர் தம் நூலில் மட்டுமே முற்போக்குக் கருத்துகளைக் கூறியுள்ளாரேயன்றி, உண்மையில் முற்போக்கு இயக்கத்தோடும், அதன் தலைவர்களோடும் நேரடியாக எவ்விதத் தொடர்பும் கொண்டிருக்கவில்லை. ஒரு முற்போக்கு அரசின் கீழ் பயன்பாட்டுக் கொள்கையைச் செயலாக்குவதன் மூலம் உண்டாகும் விளைவுகளையும் அவர் முழுதும் அறிந்திருக்கவில்லை. கொள்கை அளவில் பார்த்தாலும், அவருடைய பயன்பாட்டுக் கொள்கை கூட்டுமுறையில் (Corporate form) அமைந்த பொருளியல் நிறுவனங்களை (Economic Institutions) அமைப்பதற்கு நேரடியாக வழி செய்கிறது; இதன்மூலம் நிறுவனத்தில் பங்குகள்கொண்ட ஒரு சில பங்குதாரர்களின் சார்பாக அல்லாமல், அந்நிறுவனத்தின் சேவையைப் பெறுகின்ற ஆயிரக்கணக்கான மக்களின் சார்பில் முடிவுகளை எடுக்க முடிகிறது.

மார்ஷலைப் போலவே மில்லும் எல்லாத் தரப்பினரிடமும் பரிவு காட்டும் திறனுடையவராகக் காணப்படுகிறார். ஆனால் மார்ஷல் போலன்றி, மகிழ்ச்சி (Pleasure) என்ற சொல்லானது வறுமையை ஒழிக்கும் ஆர்வத்தைக் குறிப்பதற்குப் பொருத்தமானதொரு சொல் என்று மில் கருதுகிறார். 'மற்ற மக்களின் நிலைமை குறித்துப் பெந்த்தாம் கொண்டிருந்த வெறுப்புணர்வு (antipathy) மில்லிடம் இல்லை. ஆனால் பெந்த்தாமைப் போலவே, நிகரமொத்த மகிழ்ச்சியைப் (Sum total hapiness) பெருக்குவதை அவர் தம் நோக்கமாகக் கொண்டிருந்தார். ஒரு குறிப்பிட்ட அளவு வரித் தொகையைப் பணக்காரர்களிடம் வசூலிப்பதால் ஏற்படும் தீங்கைக் காட்டிலும், அதே அளவு வரித்தொகையை ஏழைகளிடமிருந்து வசூலிப்பதால் உண்டாகும் தீங்கு (hurt) அதிகமாக இருக்கும் என்று மில் எடுத்துக்காட்டியுள்ளார்.

மில்லினுடைய கொள்கை விரிவானதாகவோ, முறைப்படுத்தப் பட்டதாகவோ இல்லையென்றாலும், தேசிய வருமானம் பற்றி மார்ஷல்-பிகோ கூறிய கருத்துகளுக்கு முன்னோடியாக விளங்கியவர் மில் என்பதில் ஐயமில்லை. தொழிலாளர் நலக் கோட்பாட்டின்

Mill John Staurt : 'Lectures on progress and poverty (London 1883.)

உட்பொருள்களையெல்லாம் தர்க்க முறையிலான முடிவுகளாக மில் உருவாக்கினர். மேலும், பொருள் நலத்தை மூலதனத்தின் அளவில் கணக்கிடலாம் என்பதையும், மூலதனப்பங்கில் ஏற்படும் ஒவ்வொரு உயர்விலும் பொருள் நலம் உயரும் என்பதையும் ஒரு திட்ட வட்டமான கொள்கையாக அவர் ஒழுங்குபடுத்தினர்.

— —

# 3. பிகோவியன் பகுப்பாய்வின் அமைப்பு

## முன்னுரை

பொருள் நலக் கோட்பாட்டை உருவாக்குவதில் தொன்மைப் பொருளியல்வாதிகள், புதிய சம்பிரதாயவாதிகள் ஆகியோரின் செயல் கணக்கற்ற நூல்களில் கண்டனத்திற்குளாகியிருக்கிறது. பல்வேறு அம்சங்கள் குறித்துக் கூறப்பட்ட கண்டனங்களின் சில பகுதிகளை இங்குக் காணலாம்.

தொன்மைப் பயன்பாட்டுக் கோட்பாடுகள் (Classical utilitarian precepts) முதலில் தாக்குதலுக்கு இலக்காயின. ராபின்ஸ் தொடக்கத்தில், பயன்பாட்டுப் பகுப்பாய்வுக்குப் பேராதரவாக இருந்தார்; பிகோவின் நலப் பொருளியலில் அவர் மோகம் கொண்டிருந்தார். கானனும் அவரைக் கவர்ந்திருந்தார். ஆனால், பின்னர், அவர் நல எதிர்ப்பாளராக (anti-welfarist) மாறிவிட்டார். 'நலப் பொருளியல்' போன்ற நூல்களில், 'கொள்கையின் சிக்கலான விளைவுகள் (Repercecssions) மூலமாக இலாபமும் நட்டமும் மிக நயமான முறையில் சமன் செய்யப்பட்டிருப்பது ராபின்ஸைக் கவர்ந்தது. ஏற்றத்தாழ்வைக் (Inequality) குறைக்கும் நோக்கத்தை நிரூபிப்பதற்காக, மதிப்புக் கோட்பாட்டின் (Theory of Value) அண்மைக்கால வளர்ச்சிகளைப் பயன்படுத்த முடியும் என்று எட்வின்கானனும் மற்றவர்களும் மிகுந்த ஆற்றலுடன் வலியுறுத்தியதுகண்டு, நான் நலக்கோட்பாட்டின்பால் பெரிதும் ஈர்க்கப்பட்டேன்' என்று அவரே கூறுகின்றார். ஆனால் பிறகு பொருளியலும் முக்கியத்துவமும் என்ற கட்டுரையில் (Essay on the Nature and significance of Ecconomic Science') ராபின்ஸ் தமது கருத்தை நேர்மாறாக மாற்றிக் கொண்டார். இதில், பொருள் நல வடிவில் பொருளியலுக்குப் பொருள் விளக்கம் கூறுவதையே அவர் நிராகரிக்கிறார். மேலும், பொருள் நலம் என்பது விஞ்ஞானமுறை ஆய்வுக்குப் (Scientific enquiry) புறம்பானது

என்றும் அவர் கூறுகிறார். எனினும் பொருள்வள நலக் (Material welfare) கருத்துக்கு ராபின்ஸ் தெரிவிக்கும் இந்தக் கடிய எதிர்ப்பு வலுவற்றது என்று கானன் கருதுகின்றார். 'இத்தகைய முடிவுகள் உற்பத்தி பற்றிய சிக்கல்கள் அல்ல; வாழ்க்கை பற்றிய சிக்கல்கள். பொருளியலில் பொருள்வள நல விளக்கத்திற்குப் பாதி வெளியில் அம்முடிவுகள் இருக்குமானல், அவை இருக்க வேண்டிய இடமும் அதுவேயாகும். அவை பொருளியலுக்குள் பாதியும், பொருளியலுக்கு வெளியில் பாதியுமாக அமைந்துள்ளன'[1] என்கிறார் கானன். சமுதாயத்தின் மகிழ்ச்சிக்கான காரணங்களை ஆராய்வதுதான் நலப் பொருளியல் என்று கூறுவது தவறானது எனக் குறிப்பிட்டு, நலப் பொருளியலின் 'தர்க்கமுறை நுண்கணிப்பானது' (logical calculus)[2] மனநிறைவு (Satisfaction) அல்லது மகிழ்ச்சியின் (Happiness) வடிவில் வெளியிடப்பட வேண்டும் என்ற பயன்பாட்டு வாதிகளின் கருத்தையும் கானன் நிராகரிக்கிறார்.

பிகோ 'தமது நலப் பொருளியல்' என்று நூலில் பொருளியலுக்கு நெகிழ்வான பொருள் விளக்கம் கொடுத்துள்ளார். இதனால் பொருள் விளக்கங்கள் பற்றிப் பலவிதமான குழப்பங்கள் ஏற்பட வழி ஏற்பட்டது. மேலும், பொருள் நலத்தின் உட்பொருள் பொருள் (Content) தெளிவாக வரையறுத்துக் கூறப்படவில்லை. பொருளியலின் உட்பொருளை நலத்துடன் தொடர்புபடுத்திச் சீர் திருத்தி யமைக்க ஹாப்சன், கிளே, ஹாட்ரி போன்ற பொருளியல் அறிஞர்கள் ஆரம்பத்தில் முயற்சிகள் மேற்கொண்ட போதிலும், பிகோ போன்ற முன்னோடிகள் நலத்திற்கு நெகிழ்வான பொருள் விளக்கம் கூறியதோடு, 'மொத்த நலத்தைச் (Iotal welfare) சுட்டிக் காட்டும் சாதனமாகப் பொருள் நலம் பயன்படாது[3] எனவும் கருத்துத் தெரிவித்திருப்பதால் சற்றுத் தெளிவற்ற நிலையே உருவாகியிருக்கிறது.

பிகோவின் நூலை முழுமையாக ஆராயுமிடத்து, அது நலம் பற்றிய சிறந்ததொரு நூல் என்பதும், நிகழ்வுவாரியான (Case-by-Case) நுட்பமான ஆராய்ச்சி நூல் என்பதும் தெளிவாகும். ஆனல் தனது பகுப்பாய்வினை நடைமுறை வாழ்க்கைக்குப் பொருத்திக் காட்ட வேண்டும் என்ற ஆர்வத்தினல், உண்மை உதாரணங்களை மிதமிஞ்சிய அளவுக்கு பிகே நூலில் நிறைத்திருக்கிறார்; சில சமயம் அவர் காட்டும் உதாரணங்கள் சோர்வளிக்கக்கூடிய அளவுக்கு மிக நீண்டதாக இருக்கின்றன.

[1] Cannan, E: 'Review' Robbins L: Nature and Significance of 'Economic Journal' September 1932, p 426, 427.

[2] Little, I.M.D: 'A Gitique of Welfare Economics' (Oxford, 1948) p. 275.

[3] Pigou, A. C: Economics of welfare (London 1932) p. 12.

## சில கோட்பாட்டு முரண்பாடுகள் :

பிகோவியன் நலப் பொருளியல் பற்றிக் கூறப்படும் கண்டனங்கள் பலதரப்பட்டவைகளாக இருப்பதால், வெறும் விவாதத்திற்கும் தர்க்கத்திற்கும் உரிய சிக்கல்களிலிருந்து கோட்பாட்டுச் சிக்கல்களை (Conceptual issues) தனியாகப் பிரிக்க வேண்டியது இன்றியமையாததாகிறது. ஆகவே, முதலில் கோட்பாட்டுப் புதிர்களை (Conceptual Conundurm) ஆராய்ந்து விட்டுப் பிறகு முறைமை இயல் சார்ந்த சிக்கல்களை (Methodological difficulties) ஆராய்வது நலம். பொருள் நலம், பயன்பாடு, சமூக உற்பத்திப் பொருள் முதலியவை பற்றிய பிகோவின் பல்வேறு கோட்பாடுகளுக்கு எதிராகக் கூறப்படும் மறுப்புக் கருத்துகள் குறித்து இங்கு ஆராய்வோம்.

பிகோவின் 'செல்வமும் நலமும்' (Wealth and welfare) என்னும் நூலில், 'நலம் (welfare) என்பதும் 'நன்மை' (good) என்பதும் ஒன்றுதான் எனக் கூறப்பட்டுள்ளது. ஆனால் இக் கருத்து அவருடைய நலப் பொருளியல்' என்ற நூலில் காணப்படவில்லை. அதில் 'நலம் என்பது விரிந்த எல்லையுடைய ஒன்று. அதன் உட்பொருள்கள் குறித்த பொதுவான விவாதத்தில் இறங்க வேண்டிய அவசியம் இல்லை' என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு, நலம் என்ற சொல்லுக்குப் பொருள் விளக்கம் கூறுவதிலிருந்து பிகோ நழுவிச் சென்றுள்ளார். பொருள் விளக்கத்தில் அவரிடம் காணப்படும் இத்தகைய உறுதியின்மை (Difinitional indeterminateress) அவரிடம் காணப்படும் 'மிகப் பெரிய குறைபாடு[4] ஆகும். நலத்தின் பொருள் பற்றித் திட்டமான வரையறுத்த விளக்கம் யாதும் அவர் கூறவில்லை. நலத்தைப் பொருளியலில் சேர்க்க விரும்பும் ஒரு நலப் பொருளியல்வாதி அல்லது, அறவியலிலிருந்து பொருளியலைத் தனிமைப் படுத்த முடியாது' என்று ஹாப்சன், ஹாட்ரி இவர்களோடு சேர்ந்து நிரூபிக்க விரும்பும் ஒரு நலப் பொருளியல் வாதியானவர் தெளிவான மாற்றுக் கோட்பாடு ஒன்றை வகுத்து, விஞ்ஞானிகள் ஏற்றுக் கொள்ளத்தக்க திட்டமான நல அம்சங்களைச் சுட்டிக் காட்டுவதற்கு முயற்சி மேற்கொண்டிருக்க வேண்டும். பிகோவின் நூலிலோ 'நலம்' என்ற சொல் எதைக் குறிக்கிறது என்பது தெளிவாக இல்லை. பிகோவின் நூல்களிலிருந்து நலப் பொருளியல் எதைப்பற்றிக் கூறுகிறது என்பதைத் துல்லியமாக அறிந்துகொள்ள இயலவில்லை எனப் பொருளியல் வாதிகள் கருதுகிறார்கள்.

[4] Wolfe, A B: On the content of Welfare 'American Economic Review' June, 1931, p. 217.

பொருள் நலத்திற்கும் (Ecconomic welfare), பொருள் சார் பற்ற நலத்திற்கும் (non-ecconomic welfare) இடையே அவர் காட்டும் வேறுபாடு (Distinction), 'தெளிவற்றது' (Pointless) அல்லது 'பொருளற்றது' (Meaningless[5] அதனால் அதை ஆதரிக்க இயலாது. தேசிய உற்பத்திப் பொருளுக்கும் (National product) ஆக்க பூர்வமான மனித நடவடிக்கையின் (Purposeful humen activity) இறுதி விளைவுகளுக்கும் (end results) இடையே உள்ள வேற்றுமையை மட்டும் அடிப்படையாகக் கொண்டு இத்தகைய வேறுபாட்டை வகுப்பது அறிவுக்குப் பொருந்துவதன்று (not sensible). குறிக்கோள்களுக்கும் (ends) அவற்றை அடையும் வழிவகைகளுக்கும் (Means) இடையே தெளிவின்மை காரணமாகவே, பொருள் சார்ந்த குறிக்கோள் (economic target) என்று மக்கள் சிந்திக்கவும், பொருள்சார்பற்ற குறிக்கோள்களை விலக்கிவிட்டுப் பொருள் சார்ந்த குறிக்கோள்களை அடைய முயல்வதுதான் நலப் பொருளியல் என வரையறுக்க முயலவும் இடம் ஏற்படுகின்றது. 'பொருள் சார்ந்த மன நிறைவுகள்' (economic satisfactions) பற்றிய விவாதத்தில் ஈடுபட்டுள்ள சில பொருளியல் வாதிகளிடையே இருந்துவரும் இந்தப் பழக்கமானது, மையப் பொருளியல் பகுப்பாய்வுக்கு மாறுனது. ஆனால் இந்தப் பழக்கம் கடும் எதிர்ப்புக்குப் பின் மறைந்து விட்டது. இந்தச் சந்தர்ப்பத்தில், பிகோவின் நலக் கோட்பாடு பற்றிய அறிஞர் ஹிக்ஸின் (J. R. Hicks) கருத்துகள் தெளிவூட்டுவனவாக அமைந்துள்ளன. 'பொருளியல் வாதியின் கவனம் பொதுவான நலத்தில் இருக்கவில்லை; பொது நலத்தின் ஒரு பகுதியிலேயே இருக்கிறது' என்ற பிகோவின் கூற்று 'தொல்லை தரக்கூடிய அம்சம்' (Point of trouble) என்று ஹிக்ஸ் கூறுகிறார். சமூக நன்மையானது (Social good), அங்கம் அங்கமாகப் பிரிக்கக் கூடிய ஒன்றல்ல. இது ஒப்புக் கொள்ளப்பட்டுள்ள உண்மை; மேலும், 'மிகவும் ஐயத்திற்கிடமாகியுள்ள சொற்றொடரைத் (Phrase) தவிர்ப்பதில் நாம் அனைவரும் கவனமாக இருக்கிறோம்,' எனினும், 'சாராம்சத்தில் பாகுபாடு ஆழமாக - மிகவும் ஆழமாக வேரூன்றி இருக்கிறது' என்று ஹிக்ஸ் வலியுறுத்துகிறார். சமூக வருமானத் தொகையின் (Social dividend) உற்பத்தி, பகிர்வு இவற்றுக்குள் பொருள் நலக் கோட்பாட்டை வரையறுப்பவர்கள் தம்மை யறியாமல் நலப் பொருளியல்வாதிகளுடன் சேர்ந்து செல்வாக்கு மிக்க ஒரு தனிப் பொருளியல் சிந்தனைக் குழாமாக (Dominant school of economic thought) ஆகியிருக்கிறார்கள். பொருள் நலத்திற்கு விரிவானதொரு பொருள் விளக்கம் கொடுக்க ஹிக்ஸ் முயல்கின்றார். பொருள் நலம் என்பதை, அதை

[5] Majumdar, T: Measurement of utility (London. 1958) p. x 11.

விடச் சற்று விரிவானதாகக் கொண்டு, பொருள்கள் (goods), ஊழியங்கள் (Services) இவற்றின் பண மதிப்பில் முழுமையாகத் தெரிவிக்க இயலாத உபரிகள் (Surpluses), உழைப்பிலும் ஓரளவு சேமிப்பிலும் அடங்கியுள்ள 'முயற்சிகள்' (efforts) 'தியாகங்கள்' (Sacrifices) ஆகியவை போன்ற அகநிலை அம்சங்களை (Subjective elements உள்ளடக்கக் கூடியது என்று பொருள் நலத்திற்கு விளக்கம் கூறலாம். (அதாவது) பண அளவுகோலுடன் மறைமுகமாகத் தொடர்பு படுத்தக்கூடிய அம்சங்களையும் உள்ளடக்கும் வகையில் பொருள் நலத்தை விரிவுபடுத்தலாம். இவ்வாறு விரிவுபடுத்தினாலும் பொருளியல் வாழ்வின் இறுதி நோக்கங்கள் பொருளியலுக்குள் அடங்கியிருப்பதால், பொருளியல் நலக் கோட்பாட்டின் சிறப்பியல்பு பாதுகாக்கப்படுகின்றது.

'கூடுதல் அல்லது குறைவு' (greater or less) என்னும் வகை இனத்தின் (Category) கீழ்க்கொண்டு வரக்கூடிய ஒன்றாக மன நிறைவை (Sotisfaction) வருணிப்பதும் கடும் கண்டனத்திற்குள்ளாகியிருக்கிறது. இவ்வாறு வருணிப்பது, திட்டமாகத் தவறான கருத்தைத் தோற்றுவிப்பது' என்று கூற முடியாவிட்டாலும் 'அவசரப்பட்ட முடிவு' (Premature) என்று நிச்சயமாகக் கூறலாம். இந்த வருணனை, நலத்தின் அளபுடைத் தலைமை (Cardinality of welfare) குறித்து முடிவில்லாத சர்ச்சையைத் தோற்றுவித்துள்ளது, 'பயன்பாட்டை (நலம்) அளவிடுதல் இயலாத காரியம்'[6] என மார்ஷல் திட்டவட்டமாக அறிவித்துவிட்ட பின்னரும், சுமார் 20 ஆண்டுக் காலமாக நலத்தின் அளவிடும் தன்மை (Measurablity) குறித்து கடும் விவாதங்கள் நடந்து வருவதாகப் பிகோ குறிப்பிடுகின்றார்.

பகிர்வு பற்றிய சிக்கல் குறித்துக் கவலைப்படாமல், 'பொருள் நலத்தின் ஆக்க அம்சங்களை' (Positive elements of economic welfare), உண்மையான நிகர வருமானத்தைச் சுட்டிக்காட்டும் கருவியாகக் கொள்வது முற்றிலும் இயலாத காரியம் என்று மறுப்புத் தெரிவிக்கப்படுகிறது. சமூக உற்பத்திப் பொருள் (Social product) என்பதற்குப் பொருள் விளக்கம் கூறும் சிக்கலை பிகோ 'நேரடியாக' (Squarely) அணுகவில்லை. குறியீட்டெண்கள் (Index numbers) பற்றிய அவருடைய விவாதம் முக்கியமான ஒன்று என்றாலும், நலத்தில் ஏற்படும் மாறுதல்களைக் குறிப்பிடுவதற்கான ஒரு தோராயமான தெளி விலக்கணம் (Criterion) அல்லது குறியீட்டையே (Indicator) அவர் தெரிவித்துள்ளார்.

சமூக, தனியார் நிகர உற்பத்திப் பொருள்களுக் கிடையிலான வேற்றுமைகளில் இறுதிநிலை நிலைமைகளும் (Marginal Conditions)

[6] Pigou A.C: 'Marshall and current thought' (London, 1952) p.40

அடங்கியுள்ளன என்று பிகோ தமது 'நலப் பொருளியல்' நூலில் கூறுகின்றார். ஆனால், இறுதிநிலைத் தனியார் நிகர உற்பத்திப் பொருள், இறுதிநிலைச் சமூக நிகர உற்பத்திப்பொருள் ஆகிய வற்றுக்கிடையிலான வேற்றுமை குறித்த பிகோவின் பகுப்பாய் வானது, உற்பத்தியின் இறுதிநிலை உயர்வுடன் தொடர்புகொண்ட 'உண்மையான' புறச் சிக்கனங்கள் (External Economics) அல்லது சிக்கனக்கேடுகள் (Diseconomics) பற்றிய சிக்கலை ஆராய்வதுடன் நின்றுவிடுகிறது என்று நிரூபிக்கப்பட்டுள்ளது. ஆனால் பிகோ எடுத்துக்காட்டும் பெரும்பாலான உதாரணங்கள், இறுதிநிலை நிலைமைகளை உடையனவாக இல்லாமல், ஹிக்ஸ் குறிப்பிட்டுள்ள 'முழு நிலைமைகளை' (Total Condition) உடையனவாக இருக் கின்றன. எடுத்துக்காட்டாக, நகரமைப்பு (Town Planning), குடிசை ஒழிப்பு (Slum Clearence) ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

## பிகோவின் முறைமையியல்

தொன்மைக் கோட்பாட்டுக்கான (Classical Doctrine) ஆக்க முறை, அழிவுமுறைத் திறனாய்வினால் (Constructive and Destructive Criticism),. பொருளியல் சிக்கல்களுக்குத் தீர்வு காணும் முறையில் (Methods) பரிணாம (Evolutionary) மாறுதல்களும், அதன் சில கட்டங்களில் புரட்சிகரமான (Revolutionary) மாறுதல் களும் ஏற்பட்டுள்ளன. நுகர்வு (Consumption), தேவை (Demand), பயன்பாடு (Utility) ஆகியவை அதிகமாக வலியுறுத்தப் படுகின்றன. பொருளியல் அரங்கில், செல்வத்திற்கான பதிலீடாக (Substitute) நேரடிக் குறிக்கோள் (Directive Objective) என்ற முறையில் நலமானது (Welfare) இப்பொழுது கவனத்தை அதிகமாக ஈர்த்துவருகின்றது.

மிகப் பரவலான பொது ஒப்புதலைப் பெற்றுள்ள ஒரு மீக்கோள் தரம் (Norm) அல்லது தெளிவிலக்கணத்திலிருந்து (Criterion) தொடங்கி, அதிலிருந்து தர்க்க முறைப்படி முடிவுகளைப் பகுத் தறிவதே (Deduce) நலப் பகுப்பாய்வின் (Welfare Analysis) அடிப்படை முறையாகும். பிகோ தமது 'நலப்பொருளியல்' என்னும் நூலில் கையாண்டுள்ள முறை இதுதான். ஆனால், சமுதாய நலம் உச்சப்பாடு அடையும் தத்துவம் (Community Welfare Maximisation Principle) எதிர்ப்புக்குள்ளாகியுள்ளது. இத் தத்துவம், 'தனியார் (Individual) அல்லது குடும்பப் பயன்பாடு உச்சப்பாடு அடையும் தத்துவத்தை (Household Utility Maximisation Principle) விடத் தெளிவற்றதாயிருக்கிறது என்பதும், ஒரு புறம் ஏற்க இயலாத அனுபவப் பொருளையும் (Refutable Empirical

Content), மறுபுறம் மறுப்புக்குரிய தரஞ்சூழ் பொருளையும் (Diniable Normative Content) கொண்டு அதே மாதிரியான நுண்மை (Tenuousness) அல்லது வெறுமையை (Emptiness) உடையதா யிருக்கிறது என்பதும்'[7] இத் தத்துவத்திற்கு எதிராகக் கூறப்படும் வாதங்களாகும்;

சமுதாயத்தின் பொருள் நலக் கோட்பாடு, தேசிய வருமானத் தொகையின் (National Dividend) அளவு (Size) பகிர்வு (Distribution) ஆகியவற்றைத்தழுவி 'நலப்பொருளியல்' உருவாக்கப்பட்டுள்ளது. 'நாடுகளின் செல்வம்' என்னும் நூலில் பொருளியலை அணுகிய முறைக்கும், அண்மையில் 'தேசிய வருமானம்' என்ற நூலில் விவரிக்கப்பட்ட முறைக்கும் தலைசிறந்த தொன்மை எடுத்துக் காட்டாக 'நலப்பொருளியல்' விளங்குகிறது'. எனவே, பிகோவின் முறை தொன்மை சார்ந்ததாகவும் (Classical), அதே சமயம் நவீன மானதாகவும் (Modern) அமைந்துள்ளது. முறைமையியலைப் பொறுத்தவரையில், மார்ஷலைப் பெரிதும் பின்பற்றுகிறார் பிகோ. பணத்தின் ஓர் அலகானது (Unit of Money) எல்லாவற்றுக்கும் ஒரே மாதிரியான அகநிலைப் பயன்பாட்டை (Subjective Utility) உடையது என்னும் யூகத்தை மார்ஷல் சில நேரங்களில் பயன் படுத்துகிறார்; எனினும் இந்த யூகம் இயல்புக்கு மாறானது (Unrealistic) என்பதையும் அவர் ஒப்புக்கொள்கிறார். மதிப்பின் அளவுமுறை (Objective Measure) ஒன்று இருப்பதை முன்னதாகக் கருத்தில் கொண்டால், அது அர்த்தமுடையதாக இருக்கும். மார்ஷலின் இந்த முறையை பிகோ விரிவுபடுத்திப் பயன்படுத்து கின்றார். 'நலப்பொருளியல் என்று அமைக்கப்பட்ட ஒன்று விஞ்ஞானத்திற்கும் அரசியலுக்கு மிடையிலான பிணைப்புகளில் ஒன்றாக ஆகிவிட்டது.'[8] மார்ஷலின் நுகர்வோர் உபரிக்கோட்பாடும், பிகோவின் சமூக நிகர உற்பத்திக் கோட்பாடும் மார்ஷலினுடைய முறையைப் பயன்படுத்தியமைக்குக் குறிப்பான சான்று களாகும். இம்முயற்சியில் இடையூறுகளும் (Difficulties) தர்க்க முறையிலான அசாத்தியங்களும் (Impossibilities) ஏற்படுவதாக அவர்கள் இருவருமே ஒப்புக்கொள்கிறார்கள். எனினும், அந்த அசாத்தியங்களுடன் போராட அவர்கள் சிறிதும் தயங்கவில்லை.

தர்க்கத்தை, விளக்கக் குறியீடுகளைப் (Symbols) பயன்படுத்து வதற்குப் பதிலாக, நலப்பொருளியலில் எப்பொழுதும் அந்தத் தர்க்கத்தைச் சொற்களிலேயே தெரிவிக்கிறார்கள். 'இவற்றின்

[7] Graaf. J de. V: 'Theoretical welfare economics' (London, 1957) p. 167.

[8] Myrdal. G: 'The political Element in the Development of Economic theory' (London, 19 5) p. 101.

கூட்டு விளைவாகிய முற்கோள்கள் (Resultant Propositions), இந்த முறைக்குரிய ஒரு விளக்கமாகும். பயன்பாட்டுப் பொருளியல் (Utilitarian Economics) அல்லது தன்னல முனைவு நுண்கணிப்பு (Hedonistic calculus) என்பது இத்தகைய விளக்கங்களுள் ஒன்றாகும்.'

பிகோவின் முறையை மதிப்பிட்டுப் பார்த்தால், அதனுடைய வெற்றியின் அளவு மிகக் குறைவானதே என்று சொல்லவேண்டும். எடுத்துக்காட்டாக, சமூக அடக்கவிலைகளைக் (Social costs) கணக்கிடுவதற்கான அவருடைய முறையைக் குறிப்பிடலாம். ஒரு குறிப்பிட்ட முதலீட்டு அலகு (Unit of investment) தொடர்பான நேரடியான – மறைமுகமான அடக்க விலைகளை, அப்போதையச் சந்தை விலைகளின் (Market prices) அடிப்படையில் மதிப்பிட்டு, அவற்றின் கூட்டுத் தொகையாக அவர் சமூக அடக்கவிலையைக் (Social costs) கணக்கிட்டார். ஆனால், சந்தை விலைகள் (Prices) சமூக அடக்கவிலைகளைக் குறிப்பிடாமல், தனியார் அடக்கவிலைகளைக் (Private cost) குறிப்பிடுமானால், அப்பொழுது இந்த மதிப்பீட்டு முறை தோல்வி கண்டுவிடும். எனவே, ஒரு பகுதிப் பகுப்பாய்வில் (Partial analysis) மட்டுமே, பிகோவின் முறையைப் பயன்படுத்த முடியும். பொருளியல் முழுவதிலும், தனியார் சமூக அடக்கவிலைகளின் வேறுபாடு பரவியிருக்குமானால், மனநிறைவின் (Satisfaction), ஓர் அளவுகோலாகச் சந்தை விலையைப் பயன்படுத்த முடியாது.

மனநிறைவுகள், மனநிறைவின்மைகள் (Dissatisfactions) இரண்டையும் ஆராய்ந்து, அவை இரண்டையும் ஒப்பிட்டுப் பார்க்கும் முயற்சியில், கணக்கற்ற நிலைகளை (Situations) பிகோ விரிவாக ஆராய்கிறார். இந்த முறையில் ஒன்றிரண்டல்ல, மூன்று சோதனைகள் உள்ளன; மேலும் இந்த மூன்று சோதனைகளின் முடிவுகளை ஒரு பொதுவான அளவையில் குறிப்பிடவும் வழியில்லை. பிகோவின் முறை முழுவதிலும் உள்ள மிகப்பெரிய குறைபாடு இது தான். சமத்துவத்தில் (Equality) ஏற்பட்டுள்ள ஒரு குறிப்பிட்ட அளவுக்குறைவை ஈடுசெய்வதற்குக் கூடுதலாக எவ்வளவு உற்பத்தித் தேவைப்படும்? ஏற்றத்தாழ்வுகளில் ஏற்பட்டுள்ள ஒரு குறிப்பிட்ட அளவு உயர்வினைச் சரிப்படுத்துவதற்கு உற்பத்தியை எவ்வளவு குறைக்கவேண்டும்? இவ்வினாக்களுக்கு விடைகள் காணப்படவில்லை. மற்ற அம்சங்கள் யாவும் சமமாக இருக்கும்பொழுதுதான் நாம் இதுபற்றி ஒரு திட்டமான முடிவு (Definite judgment) காண முடியும்.

பிகோவின் முறையில் காணும் தரஞ்சூழ் யூகம் (Normative assumption) காரணமாக, அவரது முறையைக் குறை கூறி கொண்டிருப்பது, அவருடைய உண்மை நோக்கத்தைத் தவறவிடுவ தாகும். 'உண்மை உலகில், நிறைவற்ற போட்டி இயக்கக் கோட் பாடானது (Imperfectly competitive dynamic theory), சந்தைச் சார்பற்ற (Non-market) நேரடியான செயல் பிணைப்புகளால் (Interactions) படிப்படியாகச் சீர்குலைந்து விடுகிறது; பயன்பாடு களில் நியாயமான, விரிவான தனிநபர் ஒப்பீடுகளுக்கு நாம் தயா ராக இருந்தால், இந்தச் செயல் பிணைப்புகளை நீக்கிவிடலாம்' என்பதே பிகோவின் கொள்கையாகும். பிகோவின் நூல் ஓர் ஆய்வுக் கட்டுரை (Treatise) அல்ல; தம் காலச் சூழலுக்கு ஏற்ற ஒரு கருத்துரையே (tract for the times) ஆகும். இக் கருத்தின் அடிப்படையில் பார்க்கும் பொழுது, அவரது முறைமையியல் அவருடைய அறிவார்வத்தைக் (Intellactual curiosity) காட்டிலும் அதிக நிறைவுடையதாக அமைந்துள்ளது.

### யூகங்களும் தெளிவிலக்கணங்களும்

பொருள் நலம், பொது நலம் இவற்றுக் கிடையிலான தொடர்பு (correlation), பயன்பாட்டின் ஒப்பிடுந் தன்மை (comparability), தேசிய வருமானத் தொகையின் (National Dividend) உண்மை யான மதிப்பை உச்சநிலை அடையும்படி செய்தல் ஆகிய மூன்றும் பிகோவின் முக்கிய எடுகோள்களாகும் (Assumptions). இந்த மூன்று எடுகோள்களும் வன்மையான கண்டனங்களுக்கும், சீர் திருத்தங்களுக்கும் உள்ளாகக் கூடியனவாகும்.

முதல் எடுகோளுக்கு எதிர்ப்புத் தெரிவிப்பவர்கள் நேர்கட்சி வாதிகள் (Positivists) ஆவர். அந்த எடுகோள் ஒரு குறிப்பிட்ட கண்ணோட்டத்தைப் பிரதிபலிப்பதாகவும், அதனால் அதை எல்லோ ரும் ஏற்றுக் கொள்ள இயலாது என்றும் அவர்கள் கருதுகிறார்கள். இக் குறையைப் போக்க ஹராட் (Harrod) முயல்கிறார்.[9] பொரு ளியல் கொள்கைகள் பற்றி விவாதத்தில் அரசியல், சமூக மதிப்புகள் நோக்கங்கள் பற்றிய மதிப்புத் தீர்ப்புகள் (value judgments) தேவையில்லை என்னும் எடுகோள் பரவலாக ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ள ஒன்றாகும். ஆனால் இந்த எடுகோளை அறிஞர் ஹிக்ஸ் கண்டித்துள்ளார். 'பொருளியல் வாழ்வினைப் (Economic life) பொருளியலின் வரம்புக்குட்பட்டதாகக் கொள்வதே பொருள்நலத் தத்துவத்தின் தனிப் பண்பு. இதன் அடிப்படையில் பார்க்கும்

[9] Harrod, R F: 'Scope and Method of Economics' 'Economic Journal' September, 1938.

பொழுது, இந்த எடுகோள் செயற்கைத் தன்மை (Artificiality) உடையதாக இருக்கின்றது' என்று ஹிக்ஸ் கருதுகிறார்.

தனி நபர்களின் பயன்பாட்டை ஒப்பிட இயலும் என்பது பிகோவின் இரண்டாவது எடுகோள். இதை ராபின்ஸ், ஹிக்ஸ் இருவரும் எதிர்க்கிறார்கள். ஆனால், அறிஞர் கால்டார் (Kaldar) இதைச் சீரமைத்துக் கொள்ள முயல்கிறார்.[10] தனி நபர் பயன் பாட்டு ஒப்பிடும் தன்மை குறித்து அடுத்த அத்தியாயத்தில் விரிவாக விவாதிக்கப்பட்டுள்ளது.

தேசிய வருமானத் தொகையின் உண்மையான மதிப்பை உச்ச நிலை அடையும்படி செய்யலாம் என்பது மூன்றாவது எடுகோள். 'சமூக வருமானத்தின் உண்மையான மதிப்பை உச்சநிலை அடையும் படி செய்வதே பொருளியல் கொள்கையின் குறிக்கோளாக இருக்க வேண்டும்' என்னும் விதியை இந்த எடுகோளிலிருந்துதான் பிகோ வகுத்துள்ளார். இத்தகைய உண்மையான மதிப்பைக் கணக்கிடு வதற்குச் சந்தையில் நிலவும் குறிப்பிட்ட விலைகளின் அடிப்படையில் பல்வேறு பொருள்களின் அளவுகள் மதிப்பிடப்பட வேண்டும். இந்த உச்ச மனநிறைவுக் கோட்பாட்டுக் (Maximum satisfaction doctrine) கூற்றை நிராகரிக்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. செல்வம் பற்றிய வணிகவியல் வாதிகள் (Mercantilists) கருத்து, பயன்பாடு பற்றிய தொன்மைப் பொருளியல் வாதிகள் கருத்து, பிகோவின் 'மன நிறைவுகள்' பற்றிய கருத்து இவற்றில் எதுவும் மனநிறைவை உச்சநிலைக்கு உயர்த்துவதற்கு உதவக்கூடியதெனக் கருத இயலாது. இந்த எடுகோள் 'கையாளுவதற்கு இயலாத அளவுக்கு அலங்கோலமானது' என்று ஹிக்ஸ் கருதுகிறார். இந்தக் குறைகளையெல்லாம் களையக்கூடிய கணிதப் பகுப்பாய்வு (Mathematical analysis) ஒன்றை அறிஞர் ஹோட்டலிங் (H. Hotelling) என்பார் தமது ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்றில் குறிப்பிட்டுள்ளார்[11]. எனினும், பிகோவினுடைய எடுகோள்களின் முரண்பாடுகளைப் (angularities) போக்குவதற்கு அவருடைய கணிதத் திறன் (Mathamatical elegance) உதவவில்லை.

பொருள்நலத்தில் ஏற்படும் மாறுதல்களைக் கணக்கிடுவதற்கு இரண்டு தெளிவிலக்கணங்களை (criteria) பிகோ கையாள்கின்றார். பணத்தின் வடிவில் நலத்தை அளவிடலாம் என்பதும் அவருடைய

[10] Kaldor, N: 'Welfare propositions and International comparison of utility.' 'Economic Journal' Sepiember. pp 549 552

[11] Hotelling, H: 'The General Welfare in relation to the problem of Taxation and of Railway and utility Rates' 'Econometrica' July, 1938.

ஆராய்ச்சியில் அடங்குகிறது. அவர் ஒரு பொதுவான முறையை ஆதரிக்கின்றார்; நுகர்வோர் உபரிமுறையின் ஒரு பகுதியைப் பயன்படுத்துவதை அவர் பெரும்பாலும் மறுக்கிறார். காரணிகளின் அளிப்பில் (supply of factors) எவ்வித உயர்வுமின்றித், தேசிய வருமானத் தொகையில் உயர்வு ஏற்பட வேண்டும் என்பதும் பிகோ வகுத்துள்ள இரண்டு தெளிவிலக்கணங்களாகும். சில பொருள்களைப் பிற பொருள்கள் குறையாதவாறு உயர்த்தியோ, அல்லது சமூக மதிப்பு உயர்வாக உள்ள நடவடிக்கைகளுக்குக் காரணிகளை மாற்றியோ தேசிய வருமானத் தொகையின் மதிப்பை உயர்த்து வதனால் மொத்தத் தேசிய வருமானத் தொகையில் ஏற்படக்கூடிய மாறுதல்களை (variations) அளவிடுவதில் பெருஞ் சங்கடங்கள் உண்டாகின்றன. மேலும், ஏழையின் பங்கு குறையாத வகையில் நலத்தில் உயர்வு ஏற்பட வேண்டும் என்றும் விரும்புகிறார்கள். இதற்கு பல்வேறு தொழில்களிலும் செல்வாதாரங்களின் இறுதி நிலைச் சமூக நிகர உற்பத்தி (Marginal social net product) சமமான தாக இருக்க வேண்டுவது அவசியம். இது முதலாவது தெளி விலக்கணத்தின் ஒரு பகுதியை மட்டுமே குறிப்பிடுவதாகும். ஏனென்றால், அத் தெளிவிலக்கணத்தை நிறைவு செய்வதற்கு இது போதுமான நிலை (sufficient condition) இல்லை என்றாலும்கூட, இது மிகவும் அவசியமான ஒரு நிலை ஆகும். (necessary condition).

இரண்டாவது தெளிவிலக்கணத்தைப் பொறுத்த வரையில், தேசிய வருமானத்திற்குக் கேடு செய்யாமல் ஏழையின் பங்கினை உயர்த்தும் வகையில் பொருளியலைச் சீரமைப்பதைச், சமூக நலத்தின் ஓர் ஆதாயமாக ஏற்றுக் கொள்ள வேண்டும். பொருளியல் சீரமைப்பினால் உண்டாகும் வேறெந்த விளைவும் ஐயத்திற்கிடமாகி விடும்[12].

எப்படிப்பார்த்தாலும், ஒரு வினாவிற்குத் தகுந்த விடை கிடைக் காமலே இருக்கின்றது. தேசிய வருமானத் தொகையில் உயர்வு, அதே சமயத்தில் அவ்வுயர்வினால் உண்டாகும் வருமான மறுபகிர்வு ஆகிய இருமாறுதல்களும் ஏற்படுவதாக யூகித்துக் கொண்டாலும், இத்தகையதொரு நிலையில் நமக்குத் தெளிவான வழிகாட்டுவதற்கு பிகோவின் தெளிவிலக்கணம் உதவுகிறதா? இக்கேள்விக்குத்தான் இன்னும் விடை கிடைக்கவில்லை.

**அறவியல், மற்றும் கொள்கை அம்சங்கள்:**

தொடர்ச்சியாக எழுந்த முறைமையியல் (Methodoligical discussions) சர்ச்சைகள், நவீன நலப் பொருளியல் வளர்ச்சிக்குப்

[12] Mishan E. J: 'A Survey of Welfare Economics,' Economic Journal' April, 19 0. pp. 203 - 204

பெருந் தூண்டுதலாக அமைந்தன. பொருளியல் கண்டிப்பாக விஞ்ஞான முறையி லமைந்ததாக இருக்க வேண்டும். இந்த விஞ் ஞானமுறைப் பொருளியலானது விலைப் பொருளியல் பகுப்பாய் வின் (analysis of price economics) ஆக்கக் காரணம், விளைவு இவற்றை ஆராய்வதுடன் நின்று விடவேண்டும். இதன்படி பார்க் கும்பொழுது, தனி நபர் பயன்பாட்டு ஒப்பீடுகள், தரஞ்சூழ் மதிப் புத் தீர்வுகள் ஆகியவைகளைக் கொண்டதாக இருப்பதால் நலப் பொருளியல் விஞ்ஞான முறையில் அமைந்ததல்ல. பொருள் நலத் தின் சமூக நோக்கங்களை அவற்றின் அறவியல் சாயல்களோடும் அதே சமயம் கண்டிப்பான விஞ்ஞான முறைப் பகுப்பாய்வு ஆர்வத் தோடும் நிலைநாட்டுவதற்கு மார்ஷலும் பிகோவும் விரும்புவதை அவர்களுடைய நூல்களில் காண முடிகிறது. இக்கருந்துடன் பார்த் தால் மார்ஷல், பிகோ இருவருடைய போக்கும் ஓரளவாக நிறை வளிக்கிறது. தரஞ்சூழ் பொருளியல் வாதிகளின் (Normative economists) கருத்தை அவர்கள் உணர்ந்துள்ளார்கள். மேலும், பொரு ளியல் விஞ்ஞானமானது, சமூக நலத்துக்கு நடைமுறையில் உதவ வேண்டுமானல், அது சமூக நன்மையைத் தனது குறிக்கோளாகக் கொண்டிருக்க வேண்டும் என்றும் அவர்கள் கருதுகிறார்கள். ஆகவே, பொருளியல் விஞ்ஞானமானது ஓர் ஆக்க விஞ்ஞானமாக (Positive Science) மட்டுமே வளர வேண்டும் என்றும், அந்த வகையில் சமூக நலனுக்கு உகந்த கொள்கைகளை வகுப்பதற்குரிய அடிப்படைகளை வழங்க அது முயலவேண்டும் என்றும் அவர்கள் வலியுறுத்துகிறார்கள்.

மார்ஷலின் 'பொருளியல் தத்துவங்கள்' (Prniciples of Eccomics) என்ற நூலில் காணப்படும் விதியமைப்புத் தன்மை (Prescriptive Nature) பற்றி அறிஞர் எட்ஜ்வொர்த் குறிப்பிடுகையில், 'வறுமைத் துயரை ஒழிக்க வேண்டும் என்ற தமது தீவிர வேட் கையை மார்ஷல் இந்நூலில் வலியுறுத்துகிறார். இவ்வாறு கூறும் பொழுது கற்பித இலட்சியச் சோசலிச வாதிகளுக்கு (Utopian Socialists) அவர் இடம் கொடுத்து விடவில்லை' என்கிறார். மனிதன் மனி தனுக வாழ்வதற்குரிய வாய்ப்புகள் எல்லோருக்கும் கிடைக்க வேண்டுமென மார்ஷல் விரும்புகிறார். அந்த இறுதிக் குறிக்கோளை எட்டுவதற்கு வகைசெய்யும் வழி துறைகள் பற்றி அவர் விவாதிக் கிறார். 'தடுமாறச் செய்யும் விஞ்ஞானங்களுள் ஒன்றாகிய பொரு ளியல் பற்றிய மற்ற எந்த விரிவான ஆராய்ச்சி நூலையும்விட மார் ஷலின் நூலானது தவறுகள் குறைந்ததாக விளங்குகின்றது'-எட்ஜ் வொர்த்தின் இக்கருத்து முற்றிலும் பொருத்தமானதாகும்.

பிகோவின் நூல், பொருள் நலத்தின் காரணங்கள் பற்றிய விஞ்ஞானமுறை ஆராய்ச்சியேயன்றி அது பரிந்துரை

இயல்புடைய ஆய்வுக் கட்டுரை அல்ல. பொருள் நலத்தை உயர்த்துவது எது என்பதை ஆராயும்போது. அதற்கென விதிமுறைகளை அவர் அதிகமாக வகுக்காமல் அப்படியே விட்டுவிடுகின்றார். இது முக்கியமானதாகும். 'நலப் பொருளியல்' என்ற நூல், நலத்தின் காரணங்கள் பற்றிய ஆராய்ச்சியானதால், எது எப்படி இருக்க வேண்டும் என்பது பற்றிய தரஞ்சூழ் ஆராய்ச்சியாக அல்லாமல், ஆக்கமுறை ஆராய்ச்சியாகவே அந்நூல் அமைந்துள்ளது என்பது புலனாகிறது. எனினும், நலத்தின் காரணங்களுக்கும் விதியமைப்புகளுக்கும் (Prescription) வேற்றுமை அதிகம் இல்லை; விதியமைப்புக்கான ஆயத்தமே நலத்தின் காரணங்கள் என்பது பெரும்பாலோர் கருத்து.

தலையிடாப் போட்டியில் (Laissez fair Competition) உற்பத்தி உச்சநிலைக்கு உயர்த்தப்படுகிறது என்னும் அசைக்க முடியாத (unpregnable) வாதத்தின் அடிப்படையில் புதிய சம்பிரதாய நலப் பகுப்பாய்வின் (neo classical welfare anlysis) முக்கிய கோட்பாடு அமைந்துள்ளது. நிறைவுப் போட்டியின் (Perfect competition) இந்த அம்சம் பற்றி, 1930 முதல் 1940 வரையிலான காலத்தில் தீவிரமாக ஆராயப்பட்டது. வளர்ந்து செல் விளைவுகளை உடைய தொழில்கள் என்றும், குறைந்து செல் விளைவுகளை உடைய தொழில்கள் என்றும் பிகோ செய்துள்ள பாகுபாடு குறித்துக் கடுமையான சர்ச்சைகள் எழுப்பப்பட்டன. இச் சர்ச்சைகளின் தன்மையைப் பொருள் இல்லாத வெற்றுப் பெட்டிகள் (Empty Ecconomic Boxes) என்ற தலைப்பிலமைந்த பல கட்டுரைகள் புலப்படுத்துகின்றன. குறிப்பிட்ட தொழில்களுடன் விளைவு வாதிகள் (Laws of Returns) ஒருபோதும் இணைக்கப்படவில்லை என்றும், இப் பெட்டிகள் உண்மையில் காலியானவையே என்றும், தெளிவாக்கும் வகையில் செய்யத் தக்கனவற்றைச் செய்யாதிருந்த தவறுகள் (errors of omission) மூலமாகப் பெருமளவுக் கேடுகள் விளைவிக்கப்பட்டுள்ளன என்றும் கிளாப்ஹாம் (Clapham) கருதுகிறார். கூடிய விரைவில் இப்பெட்டிகள் நிரப்பப் படாவிட்டால், மனித நலம் (human welfare) பற்றிய ஐயத்திற்கிடமான முடிவின் விரிவாக, பொருளியல் போன்ற நடைமுறை விஞ்ஞானம் ஆகிவிடக் கூடிய பேராபத்து ஏற்படக்கூடும். 'தொழில்களின் விளைவு விகிதக் (rate of returns) கோட்பாட்டில் முக்கியமாக வளர்ந்து செல் விளைவு விகிதத்தை உறுதியிடுவதில் இடையூறுகள் உள்ளன என்பதை பிகோவே ஒப்புக் கொள்கிறார்; நடப்புக் காலத்தில் எந்தக் குறிப்பிட்ட தொழில்கள், வளர்ந்து செல் விளைவு அல்லது குறைந்து செல் விளைவு நிலைமைகளுடன் இயங்கி வருகின்றன என்பதைத் தீர்மானிப்பதில் இடையூறுகள் உள்ளன என்று பிகோ கூறுகின்றார். இந்த

**இடையூறுகள்தாம் இந்தப் பொருளியல் பெட்டிகளை வெறுமை யாக வைத்திருக்கின்றன. இப்பெட்டிகளை நிரப்ப முடிந்தாலுங்கூட, அதனால் நடைமுறையில் நன்மை ஏதும் விளையப் போவதில்லை. ஆகவே பெட்டிகள் பயனற்றவை; ஆபத்தானவை; ஒழித்துக் கட்டப் பட வேண்டியவை.'**

உற்பத்தியான பொருள்களின் நுகர்வோருக்கான மொத்தப் பயன்பாடுகளைக் கொண்டு, உச்ச நிலைக்கு உயர்த்தப்பட்ட சமூக நலம் அளவிடப்படுகிறது. பயன்பாடுகளை மொத்தமாக்கும் (Aggregation of utilities) கோட்பாடு, ஏன், பயன்பாட்டுக் கோட்பாடே கடும் கண்டனத்திற்கு உள்ளாகியுள்ளது. இறுதி நிலைப் பயன்பாடு விலையின் அடிப்படையில் அளவிடப்படுகிறது; இறுதிநிலைப்பயன்பாடும், இறுதிநிலை அடக்கவிலையும் சமமாக இருக்குமானால், மனநிறைவு உச்சநிலையில் இருக்கிறது. ஆனால், ஒவ்வொரு குறிப்பிட்ட பொருளும் எந்த அளவுக்கு உற்பத்தி செய்யப்படவேண்டும் என்பதைக் காட்டுவதற்கு மட்டுமே இறுதி நிலைத் தத்துவம் உதவுகின்றது. எந்தப் பொருளை உற்பத்தி செய்ய வேண்டுமென்பதை நிருணயிப்பதற்கு உதவிபுரிய இத்தத்துவத் தினால் இயலாது.

பண்பியல்புக் காரணங்களின் அடிப்படையில் அமைந்த, கட்டுப்பாடற்ற தலையிடாமைக்குப் (Uncontrolled Jaissez faire), புதிய சம்பிரதாயவாதிகள் பெரும் எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். தலையிடா நிலைமையில், உற்பத்தி உச்சநிலையை அடைவதில்லை என்பது அவர்கள் கருத்து. நிலையான அடக்கவிலை (Constant costs) நிலைமைகளின் கீழ், பொருள்கள் உற்பத்தியாகவில்லை யென்றாலும், நிலையான அடக்கவிலையிலிருந்து அடக்கவிலை நிலைமைகள் மாறுபட்டதாகவும், அந்நிலைமைகள் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டதாக இருந்தாலும், 'அந்த அளவுக்கு, உற்பத்திக் காரணிகளின் கட்டுப்பாடற்ற போட்டி ஒதுக்கீட்டினால் (uncontrolled competitive allocation of productive factors) அக்காரணி களால் உண்டாகும் உச்ச மனநிறைவைக் காட்டிலும் குறைவான அளவு மனநிறைவே விளையும்'.[13]

நலப்பொருளியலின் முடிவையே எதிர்ப்புக்குள்ளாக்கி விடக் கூடியதாக மேற்கண்ட விவாதம் அமைந்துள்ளது. எனினும், 'நலப் பொருளியலின்' கொள்கை விளக்கங்களில் இவ்விவாதம் மிக முக்கிய மான இடத்தைப்பெற்று, விதியியல் கோட்பாட்டுத்துறையில்

[13] Meriam R. S: 'Supply curves and satisfactions.' Quarterly Journal of Economics 1928, Vol XL II pp 196—197.

மார்ஷலின் 'பொருளியலில் தத்துவங்கள்' என்ற நூல் சிறப்பாக மதிக்கப்படுவதுபோன்று, பொருளியல் கொள்கைக் கோட்பாட்டுத் துறையில் 'நலப் பொருளியல்' என்னும் நூலேயும் ஒரு தலைசிறந்த நூலாக ஆக்கியிருக்கிறது. இந்நூலில் கோட்பாட்டு ஒருமைப்பாடு (Theoretical unity) காணப்படுவதாகக் கூறுவது வெறும் மாயத் தோற்றமே; ஆயினும், தம்கால சமூக—முற்போக்குப் பொருளியல் சிந்தனையாளர்களின் கொள்கைகளை விமர்சிப்பதில், இந்நூல் ஒருங் கிணைந்த முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளது. பகுப்பாய்வு வளமும், நலப்பொருயலில் மிகப் பரவலான நடைமுறை முடிவுகளும் இந்நூலின் தனிச் சிறப்புகளாகும்.

பெந்தாமியக் (Benthamnite doctrine) கோட்பாடுகளும், காம்ப்டியச் (Comte) சமூக ஆர்வமும், மார்ஷலியன் அறநெறி மேம்பாடும், ஜி. இ. மூரின் (G. E Moore) பொருள் விளக்கமும் பிகோவின் நூலில் ஆங்காங்கே சிதறிக் காணப்படுகின்றன. இதனால், இந்நூலைப் பொருளியல் கொள்கையில் பல்வேறு செயல் முறைகளின் ஒருங்கிணைப்பாகக் கருதலாம். ஆயினும் இதனால் பிகோவின் நூலில் தனித் தன்மை எதுவும் இல்லை என்று கருதிவிடக் கூடாது.

பொருளியல் நடவடிக்கையில் பிகோ கூறியுள்ள விளக்கத்தில் தான் அவருடைய முக்கிய சாதனை அடங்கியுள்ளது. மனநிறைவை உச்சநிலைக்கு உயர்த்தவேண்டுமானால், இறுதிநிலை அடக்கவிலை களுக்கு (Marginal costs), அதாவது, தேவை வளைகோடும் (Demand curve), இறுதிநிலை அடக்கவிலை வளைகோடும் ஒன்றையொன்று வெட்டிக்கொள்ளும் புள்ளிக்குச் சமமாகத் தேவை விலையைக் கொண்டுவரும் வகையில், உற்பத்தி செய்யவிருக்கும் பொருளின் அளவு இருக்கவேண்டியது அவசியமாகும் என பிகோ வாதிடுகிறார். எனினும், அளிப்பு வளைகோட்டைத் ( upply curve ) தேவை வளை கோடு வெட்டுகின்ற புள்ளியை எட்டுகின்றபோக்குடன் உற்பத்தி காணப்படுகின்றது. அளிப்பு வளைகோடும், இறுதிநிலை அடக்கவிலை வளைகோடும் ஒன்றேடொன்று இணைந்துவிடுவதால், நிலையான அடக்க விலைகளோடு (Constant cost) அந்தப் புள்ளி சரியானதாக இருக்கும். சராசரி விலை வளைகோட்டுடன் (Curve of average costs), அளிப்பு வளைகோடு இணையுமானல் அது குறைந்து செல்லும் அடக்க விலையைக் குறிக்கும்; அப்போது, ஊக்கத்தொகை (Bounty) வழங்குவதன் மூலமோ அல்லது வேறு வழியிலோ அரசு தலையிடாத வரை, அது சரியான புள்ளியாக இராது; சமூக நலனுக்கு உகந்த அளவைவிட மிகக் குறைந்த அளவுக்கு உற்பத்தி கொண்டு செல்லப் படும். ஆனல் மன நிறைவைக் குறைக்காமல், ஊக்கத் தொகைக்

கான பணத்தை எங்கிருந்து பெறலாம் என்பதைக் குறிப்பிடவோ இவ்வாறு குறைகின்ற மன நிறைவின் அளவு கூடுகின்ற மன நிறை வின் அளவைவிட அதிகமாக இல்லை என்பதை நிரூபிக்கவோ பிகோ முயலவில்லை. பிகோவின் சாதனை பற்றிய இந்த விவாதத்தில் போருக்கு முந்திய காலத்தில் 'நலப் பொருளியல்' என்ற நூல் தர மான மேற்கோள் நூலாக (Reference work) விளங்கியது என்று சொல்லலாம். 'நோக்கத்தின் பரப்பில், அறிவாழத்தில், முறை யான துலக்கமான பொருள் விளக்கத்தில்' இந்த நூல் தலையாயது; இதைப் படிக்கும் எவரும் மகிழ்ச்சியும், அவ்வப்போது வியப்பும் கொள்ளாமல் இருக்க முடியாது'. இந்நூலில், ஆராய்ச்சிகள் யாவும் கவனமாக முறைப் படுத்தப்பட்டுள்ளன; ஆழமாகவும், நடு நிலைமையோடும் விவாதிக்கப்பட்டுள்ளன; எல்லாச் செய்திகளும் திறமையுடன் விளக்கப்பட்டுள்ளன. நலத்தின் மையச் சிக்கல் மீதான ஒருமுகச் சிந்தனையிலும், முழுமையிலும் பகுப்பாய்வை முடிக்கும் நேர்த்தியிலும் இந்நூல் தனிச்சிறப்புடன் திகழ்கிறது 'நலப் பொருளியல் பற்றிய பழைய சிந்தனைகளின் முழுவடிவமே பிகோ[14]. அவருடைய நூல் உறுதியற்ற முடிவுகள் (loose end) நிறைந்ததாகவும் உறுதியற்ற கோட்பாடு (Impressionist thought) உடையதாகவும் அமைந்துள்ளது. எனினும் தொன்மையான நலப் பொருளியல் பற்றிய இந்த இலக்கியப் படைப்பை (Magnum opus), இரண்டாம் முறை, மூன்றும் முறையாக அடுத்தடுத்துப் படிக்கும் பொழுது அதன் குறைபாடுகள் எல்லாம் மங்கி மறைந்துபோய் விடுகின்றன.

[14] Lakachman, R: 'History of Economic Ideals New York, 1964 p. 386.

———

# 4. புதிய நலப் பொருளியலின் தோற்றம்

**புதிய நலப் பொருளியல் பாரிட்டோவிலிருந்து தொடக்கம்**

மரபான நலப் பொருளியல், பிற்கால எழுத்தாளர்களின் வன்மையான கண்டனத்திற்கு உள்ளாகியது. பாரிட்டோவின் சம நோக்குப் பகுப்பாய்வை (Indifference analysis) இந்தப் புதிய பொருளியல் வாதிகள் தங்களின் அடிப்படைக் கருவியாகக் கொண்டனர். ஆகவே, புதிய நலப் பொருளியலின் (New welfare economics) 'தந்தையாக' பாரிட்டோவைக் கொள்ளலாம்.

அகநிலை நலப் பொருளியலின் (subjective welfare economics) வரலாற்றில் ஒரு தெளிவான பகுப்பு முறையாக (water-shed) பாரிட்டோவின் பணி விளங்குகிறது. 'இன்ப வாழ்வுக்குரிய நுண் கணிப்பு முறையின்' (felicific calcules) முக்கிய எடுகோளாக (assumption) விளங்கும் அளவுடைத் தன்மை (cardinaiity), பயன் பாடுகளின் ஒப்பீட்டுத் தன்மை (comparabilities of utilities) ஆகியவற்றை ஆரம்ப கால எழுத்தாளர்கள் ஏற்றுக் கொண்டார்கள். நலத்தை உச்சநிலைக்கு உயர்த்த வழி செய்வதுதான் செல்வாதாரங்களின் உத்தம ஒதுக்கீடு (optimum allocation of resources) என்னும் கருத்து இந்த யூகங்களி னடியாகப் பிறந்த தாகும். எப்படியோ ஆரக்கால் ஒப்பீடுகள் (Interpersonal comparisons) பற்றிய சிக்கலை பெந்தாமியக் கோட்பாடு தட்டிக்கழித்துவிட்டது. வெவ்வேறு வருமானப் பகிர்வுகளுடன் தொடர்புடைய வெவ்வேறு உத்தமங்களை (optima) ஒப்பிடும் இச்சிக்கலை பாரிட்டோவுக்கு முந்திய எல்லா எழுத்தாளர்களும் புறக்கணித்துவிட்டார்கள். தனி நபர் வருமான ஏற்றத் தாழ்வுகளின் செயலே நிகர உபரி என்ற உண்மைக்குப் போதிய முக்கியத்துவம் கொடுக்காமலே நுகர்வோர் உபரிக் கோட்பாட்டை மார்ஷல் கையாண்டார். தேவை - மன நிறைவுக்கான, அதாவது, ஒப்பீட்டுத் தன்மைக்கான சமத் திறமைக் கோட்பாட்டை (concept of equal capacities) எட்ஜ்

வொர்த் ஒதுக்கித் தள்ளினர். ஆனல், பின்னர் ஒரு படித்தான தனி நபர் வருமானப் பயன்பாட்டுச் சார்பலன்களின் (Functions) அடிப்படையிலான வரிவிதிப்பில் சம விகிதாசாரத் தியாக விதியை (Rule of equi-proportionate) அவர் ஆதரித்துள்ளார். தம் காலத்திய மற்ற எழுத்தாளர்களைவிட அதிகமாக இச் சிக்கலை விக்செல் (wicksell) ஆராய்ந்தார். எனினும், திட்டமான பொருளியல் கொள்கைக்கு ஆதரவான அவருடைய வாதமும், ஒப்பீட்டுத் தன்மையைப் புறக்கணித்து விடலாம் என்னும் உண்மையின் அடிப்படையிலேயே அமைந்துள்ளது. ஆனல், பாரிட்டோ மரபு முறையிலிருந்து திட்டவட்டமாக விலகிச் சென்ருர். அவ்வாறு செல்கையில், அளபுடைப் பயன்பாடு (cardinal utility), கூடுதல் பயன்பாட்டுச் சார்பலன்கள் (additive utility functions) இவற்றை அவர் அவ்வளவாக ஒதுக்கிவிடவில்லை; மாருக, எத்தகைய ஆரக்கால் ஒப்பீடுகளையும் சாராத நல முடிவுகளில் மட்டுமே அவர் தம் கவனத்தைச் செலுத்தினர்.[1]

பாரிட்டோவின் நலப் பொருளியல் மூன்று குறிக்கோள்களைக் கொண்டது. அவையாவன: (1) செல்வங்கள் (Riches) பற்றிய தெளிவற்ற கோட்பாடுகளைத் தெளிவு படுத்தி, அவற்றுக்கு அளவு அறுதி செய்தல் (quantity); (2) அரசியல், தேசிய, அறவியல் காரணங்களினல் விரும்பத் தக்கவை யெனக் கருதப் படுகின்ற அரசுக் கொள்கைகள் (Public policy) பற்றிய விவகாரங்கள் குறித்துப் பொருளியல் வாதிகள் கூறுவதைத் தெளிவு படுத்துதல் (3) அறவியல் அல்லது மதிப்புத் தீர்ப்புகளுக்கு (value judgments) அடிமைப்படாமல் விஞ்ஞான முறைப்படி அமைந்த கோட்பாடுகளை உருவாக்குதல்.

முதல் குறிக்கோளை விளக்கிக் கூறுங்கால் பொருளியல் உற்பத்தியாகிப் பகிர்வு செய்யப்பட்டுப் பரிமாறிக் கொள்ளப்படுகின்ற பொருள்கள், ஊழியங்கள், (services) இவற்றைப் பற்றியே முக்கியமாக அக்கறை கொண்டது என்பதும், அதன்றி உற்பத்தியாளர்கள், பகிர்வாளர்கள், பரிமாறுவோர், நுகர்வோர் ஆகியோரைப்பற்றி மக்கள் என்ற முறையில் அக்கறை கொள்வதில்லை என்பதும் புலனுகின்றது. இரண்டாவது குறிக்கோளின்படி சமூக உத்தமம் (Social optimum) அல்லது உச்சப் பயன்பாட்டு நிலையே முக்கிய நோக்க மாகின்றது. நலப் பொருளியலில் அடங்கியுள்ள கொள்கைச் சிக்கல்களை மூன்ருவது குறிக்கோள் வெளிப்படுத்துகிறது.

[1] Blaug, M: Economic Theory in Retrospect (London 1964) pp. 535-536.

நலப் பொருளியலுக்கு பாரிட்டோ செய்துள்ள சேவையை அவருடைய நூலில் (Manual) காணலாம். இந்நூலின் ஆறும் அத்தியாயத்தில் சமூகக் கோட்பாடு பற்றிக் கூறப்பட்டுள்ளது. இந்நூலின் கணிதப் பிற்சேர்க்கையில் (Mathematical appendix), நிறைவுப் போட்டி, நலத்தை உச்ச நிலைக்கு உயர்த்துகிறது என்ற முடிவுக்கு வருவதற்குரிய காரணங்களை விளக்குகிறார்.

நிலையாக இருக்கின்றவை தவிர, மற்ற எல்லாத் தனி நபர்களின் நலன் (ophelimities) கூடுதலாகின்ற அல்லது குறைகின்ற அளவுக்கு ஒரு சிறு மாறுதலும் செய்யமுடியாததொரு நிலையே உச்ச நலன் (Ophelimity) நிலை என்பதாகும். இந்த விளக்கம் ஒரு தனிப்பட்ட நிலையைமட்டும் குறிப்பிடுவதில்லை; ஒப்புமையுடைய நிலைகளின் ஒரு முழுத்தொகுதியைக் குறிப்பிடுவதாகும்.

'சமூகவியல்' (Sociology) பற்றிய தமது ஆராய்ச்சியில், சமூக உச்ச நிலைகள் பற்றிய பொருள்விளக்கச் சிக்கலில் திருந்திய பகுப்பாய்வோடு பாரிட்டோ மீண்டும் ஈடுபடுகிறார். தனியார் (Spheliminities) களின் உச்ச நிலைகளை அடைவதற்குரிய கணக்கற்ற இலக்குகள் (Points) உள்ளன என்று தெளிவுபடுத்துகிறார். சமூக உச்சநிலைபற்றிய இந்தத் தூய பகுப்பாய்வினை 30 அல்லது 40 ஆண்டுகளுக்கு முன்னதாகவே பாரிட்டோ செய்துள்ளார். இத்தகைய கணக்கற்ற உச்சநிலை வாய்ப்புகளைப் பற்றிக் கூறுகின்ற பாரிட்டோ, சிலருக்கு ஆதாயத்தையும் வேறு சிலருக்கு நட்டத்தையும் ஏற்படுத்துகின்ற பெரும்பான்மையான மாறுதல்களைக் குறித்து யாதும் கூறவில்லை. கிரமத்தேர்வுகள் கோட்பாட்டை (Concept of ordinal preference) பாரிட்டோ பயன்படுத்துகிறார். வேறொருவரின் நலத்துக்கு ஊறு செய்யாமல், ஒருவரின் நலத்தை மேம்படுத்த இயலாத ஒரு நிலையே சமூக உத்தமம் என்று விளக்கப்பட்டுள்ளது. உற்பத்தி அல்லது பரிமாற்றத்தின் மூலமாகப் பொருள்களையும் ஊழியங்களையும் மாற்றி ஒருவர் விரும்புகின்ற நிலைக்கு அவருடைய நிலையை மேம்படுத்துவதே ஒருவரின் நலம் (welfare) எனப்படுவதாகும். 'உறுதியற்ற' (Ambiguous) மாறுதல்களை நலத்தில் பாரிட்டோ கணக்கிடவில்லை. அவர் வகுத்துள்ள சமூக உச்ச நிலை, தனித் தன்மை வாய்ந்ததோ (Unique), முழுமையானதோ அன்று; மாறாக, ஒப்பிட இயலாத கணக்கற்ற நல உத்தமங்களை அவர் வகுத்துள்ளார்.

பொருந்திய முறையில் வருமானப் பகிர்வு நடைபெறுமானால் அதனால் போட்டி உத்தமமாக இருக்கும் என விக்செல், மார்ஷல்

[?] Pareto. Vilfredo: 'Manuel d' Econcmic Politique, (Parls, 197.)

இருவரும் கருதுகின்றார்கள். ஒப்பீட்டுத்தன்மை பற்றிய யூகம் இன்றியே வருமானப் பகிர்வைப் பொருட்படுத்தாவிடினும், ஒருவகை மொத்த உச்சநிலைப் பயன்பாட்டைப் (Maximum & utilite collective) போட்டி உண்டாக்குகிறது என்னும் கருத்தை பாரிட்டோ மேற்கொள்கிறார்.

பாரிட்டோவின் வாதத்தைப் புரிந்துகொள்வது எளிதாக இல்லை. வகையீடுகள் (Differentials) அல்லது முதல் வரிசை மாறிகளை (First order variations) அவர் பயன்படுத்துவதால், அவருடைய விளக்கம் குழப்பமானதாக உள்ளது. வெவ்வேறு தனி நபர்களின் பயன்பாடுகள் அல்லது நலன்களை (Ophelimities), $(u^1+u_2+u^3+...)$ என்ற முறையில் மொத்தமாகக் கூட்டவோ, அல்லது $(du^1+du^2+du^3+\ \ )$ என்ற சிறு மாறுதல்களை (Small variations) கூட்டவோ அவர் தயாராக இல்லை.

எனினும், கூட்டிய மாறிகளை (Summed variations) ஒப்பிடுவதில் இவர் அக்கறை காட்டுகிறார். பாரிட்டோவைப் பொருளியல் வாதிகள் அதிகமாகப் பொருட்படுத்தாமலிருந்த போதிலும், நவீனக் கோட்பாடுகள் பலவற்றுக்கு அவருடைய நூல் அடிப்படையாக அமைந்தது; அறிஞர் பாரோன் (Barone) ஆற்றிய அரிய தொண்டுக்கும் அந்நூல் பேருதவியாக விளங்கியது.

பாரிட்டோவின் உத்தமமானது, பருவினைச் சமநிலையுடன் (Macro—equalibrium) ஒருங்கிணைகிறது. 'வேறொரு நுகர்வோரின் மனநிறைவு குறைவுடபடாத வகையில், ஒரு நுகர்வோர் உயர்வான மனநிறைவை அடையக்கூடிய ஒருநிலையைச் செல்வாதாரங்களின் வரம்புக்குள்ளும், கிடைத்துள்ள தொழில் நுட்ப அறிவுக்குள்ளும் உருவாக்குவதே பருவினைச் சமநிலை எனப்படுவதாகும்.' 'சுவைகள் ஒத்த'[3] (Taste—adequate) பொருள்களுடன் கிடைத்துள்ள செல்வாதாரங்களை முழுமையாகவும், மிகுந்த தொழில்நுட்பத் திறனோடும் பயன்படுத்துவதன் மூலமாக இத்தகைய உச்சநிலையை அடையலாம். எனினும், பருவினைச் சமநிலைக் கொள்கைக்கும், பாரிட்டோவின் உத்தமக் கொள்கைக்கும் ஒருவேறுபாடு உண்டு. உற்பத்திக் காரணிகளின் போட்டிப் பேரத்திலிருந்து (copetitive bargaining) எழுகின்ற மொத்த உற்பத்தி மீதான பகிர்வுக் கோரிக்கைகள் (Distributional claims) பாரிட்டோவின் கொள்கையில் காணப்படவில்லை.

[3] Lowie, Adolph: On Economic knowledge. (New York 1965)

**1908** ஆம் ஆண்டில் இத்தாலிய மொழியில் எழுதியுள்ள கட்டுரையொன்றில், உத்தமத்திற்கு பாரிட்டோ வகுத்துள்ள நிலைமைகள் பற்றிய, முக்கியமாக சமூக உரிமைப் பொருளியலின் (Collectivism) கீழ் உற்பத்தியைத் திட்டமிடுதல் தொடர்பான கொள்கை பற்றிய பொருள் விளக்கத்தை பாரோன் மேலும் விரிவு படுத்தியிருகின்றார். சமநோக்குக் கோடுகள் (Indifference curves) பற்றிக்குறிப்பிடுவதைத் தவிர்த்து, அவர் குறியீட்டெண்கள் பற்றிய தமது பொருளியல் கோட்பாட்டினைக்கொண்டு புதிய அடிப்படைகளை வகுத்திருக்கின்றார். ஆயினும், நிறைவுப்போட்டி உற்பத்தியை — அல்லது சில பொருள்களின் உற்பத்தியை — உச்சநிலைக்கு உயர்த்துகிறது என்னும் கூற்று பாரோனுக்குப் போதிய அளவு மனநிறை வளிக்கவில்லை.

### பாரிட்டோ - பிகோ தெளிவிலக்கணங்கள்

பாரிட்டோவின் தெளிவிலக்கணம் (Criterion), சமூக உத்தமம் (Social optimum) பற்றிய அவருடைய பொருள் விளக்கத்தின் தொடர்ச்சியேயாகும். ‘எவருக்கும் கேடு செய்யாத சிலரை அவர்களுடைய சொந்த மதிப்பீட்டில், மேம்படுத்தக்கூடிய எந்த மாற்றத்தையும் மேம்பாடு (Improvement) என்று கருதவேண்டும்’ என்று அவருடைய தெளிவிலக்கணம் கூறுகிறது.

இத்தெளிவிலக்கணத்தைப் பின்வருமாறு வரைபடமாக வரைந்து காட்டலாம்;



X, Y என்னும் இரு நபர்களையுடைய ஒரு சமுதாயத்தை (Community) எடுத்துக்கொள்வோம். X என்பவரின் பயன்பாட்டை X-அச்சாகவும், Y என்பவர் பயன்பாட்டை Y-அச்சாகவும் கொள்வோம். A என்ற ஒரு நிலையிலிருந்து (Situation) தொடங்குவோமானால், Aக்கு வலப்பக்கம் அல்லது Aக்கு மேலே உள்ள B, C அல்லது D ஆகியவற்றில் எந்தப் புள்ளிக்காவது நகரும் வகையில் விளைவுகள் ஏற்படுமாயின், அப்பொழுது ஒரு கொள்கையின் மாற்றத்தினால் மேம்பாடு ஏற்பட்டுள்ளது எனலாம். பாரிட்டோவின் தெளிவிலக்கணப்படி X-க்கு இழப்பு ஏற்படுத்திவிட்டு Y-இன் நலம் உயர்வதால், இணைப்பு E நிகழ இயலாது. அரை நூற்றாண்டுகளுக்கு முன்னே வகுக்கப்பட்ட இந்தத் தெளிவிலக்கணம் 'சிறிதும் குழப்பமற்றது; சிறிதும் மறுப்புக்கு இடந்தராதது'[4]

இக்கூற்று இன்றைக்கும் மிகவும் பொருந்துவதாகவும், குறைந்த வெறுமையுடையதாகவும் (less empty) இருக்கிறது. எனினும் சிலருக்குச் சாதகமும், மற்றவர்களுக்குப் பாதகமும் விளைவிக்கக் கூடிய எந்தக் கருத்துக்கும் இந்தத் தெளிவிலக்கணம் பயன்படாதாகையால், பல கருத்துகள் இத்தெளிவிலக்கணத்தின் உதவியால் மதிப்பிட இயலாதனவாக இருக்கின்றன. ஆனால் இதன் உதவியினால், சில தெளிவான பகுப்பாய்வு விளைவுகளைப் பெற முடியும். நிறைவுப் போட்டியின் கீழ் நடைமுறையில் அடையக் கூடிய நலத்தின் அளவைக் கூட்டாண்மை நிலை (L'e'tat collectviste) அதிகரிக்கும் என்பதை நிரூபிக்க இந்தத் தெளிவிலக்கணத்தைப் பயன்படுத்த முடியும் என்பதை பாரிட்டோவே மெய்ப்பித்துள்ளார்.

பகிர்விலிருந்து திறமையை வேறுபடுத்துவதைத் தெள்ளத் தெளிவாக்குவதே பாரிட்டோவினுடைய பொருள் விளக்கத்தின் சிறப்பாகும். ஆனாலும், திறமை ஆய்வுகளின் அடிப்படையில் மட்டுமே பொருளியல் கொள்கை பற்றிய முக்கியமான கருத்துகளை வகுக்க முடியும் என்று பாரிட்டோ நம்புகிறார். புதிய நலப் பொருளியலில் அண்மையில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம்: அதாவது சைட்டோவஸ்கியின் (Scitovsky) செம்மையான இரட்டைத் தெளிவிலக்கணம், பாரிட்டோவின் இந்த நம்பிக்கைபற்றி ஐயத்தை எழுப்பியுள்ளது.

ஒரு நிலைமையை இன்னொரு நிலைமையை விடச் சிறந்தது என எப்பொழுது கூற முடியும் என்பதை பாரிட்டோ திட்டமாகக்

[4] Baumol. W. J: Economic Theory and Operational Analysis, (New Jersey, 1961)

கூறவில்லை என்பது அவர் பற்றிக் கூறப்படும் மற்றொரு குறை பாடாகும். நிறைவு செய்ய வேண்டிய சில நிபந்தனைகளை மட்டும் அவர் வகுத்துள்ளாரே யன்றிச் சமூக உத்தமத்திற்குப் போதுமான நிபந்தனைகளை அவர் வகுக்கவில்லை.

'வருமானப் பகிர்வு பற்றிய திட்டம் எல்லா இடங்களிலும் ஒரே மாதிரியாக இருக்கும்'[5] என்பது வருமானப் பகிர்வு குறித்து பாரிட்டோ வகுத்துள்ள விதியாகும். ஒரே மாதிரியான இரசா யனக் கூறுகளையுடைய ஏராளமான படிகங்களை (crystals) நாம் பார்க்கிறோம். அவற்றில் சில பெரியவை; வேறுசில நடுத்தர மானவை; இன்னும் சில சிறியவை. ஆனாலும் அவை யாவும் ஒரே வடிவத்தை (Form) உடையவை. வருவாயின் (Dividend) நிகரத் தொகைக்கும், ஏழையின் பங்குக்கும் எதிராகச் செயல்படக் கூடிய காரணம் எதுவும் இருக்க முடியாது என்பது அவருடைய கருத்து. 19ஆம் நூற்றுண்டில், பல்வேறு நாடுகளின் வருவாய் பற்றிய புள்ளி விவரங்களை ஒப்பிட்டுக் காட்டி இந்த உண்மையை அவர் பகுத்தறிவு முறைப்படி நிரூபிக்கின்றார்.

X-என்பது ஒரு குறிப்பிட்ட வருமானம் என்றும், N-என்பது அக்குறிப்பிட்ட வருமானத்திற்கு (x) அதிகமான வருமானங்களை யுடைய நபர்கள் என்றும் கொண்டு, ஒரு வரைபடம் வரைவோம். ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ள எல்லா நாடுகளுக்கு மான இந்த வரைபடத்தில், நிலையச்சுத்தூரங்கள் (ordinates) x-இன் மடங்கெண்களாகும் (logarithms); இடையச்சுத்தூரங்கள் (abscissa), n-இன் மடங்கெண்களாகும். இவ்வரைபடத்தில் காணும் வளைகோடு (Curve) ஏறத்தாழ ஒரு நேர்கோடாகவும், அந்நேர்கோடானது, செங்குத்து அச்சில் ஒரு குறிப்பிட்ட கோணத்தை ஏற்படுத்தக் கூடிய அளவுக்குச் சாய்வான தாகவும் (Inclined) அமைந்திருக்கும். அந்தக் கோணம், எந்த ஒரு நாட்டி லும், 56°-இலிருந்து மூன்று அல்லது நான்கு டிகிரிக்கு மேல் வித்தி யாசப்படாமலும் அமைந்திருக்கும். இதிலிருந்து நாம் அறிய முடிவது என்னவென்றால், x-க்கு அதிகமான வருமானங்களின் எண்ணிக்கை N-க்குச் சமமாக இருக்குமெனில், m-இன் எந்த மதிப் புக்கும், m x-க்குக் கூடுதலாகவுள்ள எண்ணிக்கை $= \frac{1}{m^{1.5}} N$ (ஃ ∢ an $56° = 1·5$),

இவ்விதியை பிகோ சுருக்கமாகக் குறிப்பிட்டுவிட்டு, ஆராய்ச்சி யின் (Thesis) அனுபவ அம்சத்தை (Empirical Content) ஆராய்

[5] Pigou, A. C: Economics of kleyare. (London, 1932) p. 647.

கின்ருர். 'முழுமையான தேசிய வருமானத் தொகையின் இயக்கங்களுக்கும் (Movements) ஏழைக்குப் போய்ச் சேரும் முழுப் பங்கிற்கும் (absolute share) இடையில் ஒத்திசைவின்மை (Dishormony) ஏற்பட இயலாது என்பதைப் புள்ளி விவரச் சான்றுகளால் நிரூபிக்க இயலாது' என்ற முடிவுக்கு அவர் வருகிருர்; இவ்விஷயம் குறித்து மேலும் விரிவான ஆராய்ச்சி தேவை என்றும் அவர் கருதுகிருர்.

பாரிட்டோவின் விதி, இந்திய வருமான வரிப் புள்ளி விவரங்களுக்குச் செல்லுபடி யாகுமா என்பதை அறிஞர் ஷிராஸ் (Shiras) ஆராய்ந்து பார்த்து, பிகோவைப் போலவே, இந்த விதி பொருத்த மற்றது என்ற முடிவுக்கு வருகின்ருர்.[6] பிகோவின் விதியைக் கண்டிப்பாகக் கையாண்டு, தேசிய வருமானத்தை ஆராய்ந்த அமெரிக்க ஆராய்ச்சியாளர்களும் ஷிராஸின் கருத்தை ஆமோதித்தார்கள். ஒரு மடங்கெண் நேர்கோட்டிற்குப் (logarithmic straight line) பதிலாகச் சராசரிச் சாய்கோடு (Mean slope) ஆண்டுக்கு ஆண்டு மாறுதலடைந்தது என்று அவர்கள் வாதிட்டார்கள். வருமானத்தில் முழுமையான ஒரு மாறுதலின் முக்கியத்துவத்தை பாரிட்டோவின் விதி வலியுறுத்தியிருக்க, பகிர்வு மாற்றங்களே (Changes in distribution) நலத்தின் முக்கியமான அம்சங்கள் என்ற முடிவுக்கு அவர்கள் வருகிருர்கள். எனினும், பாயில் விதி, டார்வின் விதி போலவே, பாரிட்டோவின் விதியும் ஆராய்ச்சியின் (Investigation) ஒரு முக்கிய கட்டமாக அமைந்துள்ளது - இவ்விதியில் திருத்தம் செய்யப்பட்டுள்ள போதிலும், இவ்விதி தனது ஆரம்ப வடிவைப் பெரிதும் ஒத்தாகவே விளங்குகிறது. மேலும் இவ்விதியை யாரும் எளிதில் புறக்கணிக்க முடியாத நிலையும் இன்னும் நீடிக்கிறது.

பொருளியலில் பிகோவைக் கவர்ந்த அறிஞர்கள் பெராரா (Ferrara), எட்ஜிவொர்த் ஆகியோ ராவர்; தத்துவத்தில் அவரைக் கவர்ந்தவர் ஏ. காம்ப்டே (A, Compte) ஆவார். மற்றும் ஜெவான்ஸ், வால்ரஸ் ஆகியோரின் செல்வாக்கையும் அவரிடம் காணலாம். மதிப்பு (Value) விலைகள் பற்றிய கோட்பாட்டில் கணித ஆராய்ச்சித் தொடர்பாக அவர் ஆற்றியுள்ள சாதனையைக் கணித பௌதிக ஆசிரியரின் (எட்ஜ்வொர்த்) உதவியின்றி அவர் செய்திருக்க இயலாது. இந்தச் செல்வாக்குகள், பழைய நூல்களின் கருத்துகளைக் கவர்ந்து கொள்ளவோ, ஒரு பொதுச் சம முறையைத் (system of gnneral equilibrium) தமக்குச் சொந்தமான ஒருபகுதிக் கொள்கைகளைக் கொண்டே விளக்குவதற்கோ அவருக்கு வழிசெய்து விடவில்லை.

[6] Adarkar, B. P: and Sengupta, S, N: 'A. Note: The Parctolaw and the Distribution of Income, in India. Economic Journal, March, 1936 pp. 168-171.

தனியார், சமூக அடக்கவிலைகள் பற்றிய பிகோவின் பாகு பாட்டைக் (Distinction) கடுமையாக்க முடியாது. மாறுகச், சமூக உத்தமம் பற்றிய விதிமுறை வழுவாத (stringent) முற்றிலும் நேர்காட்சியான பொருள் விளக்கம் கொடுப்பதை, அது கொள்கை பற்றிய நடைமுறைக்கு மிகக் குறைந்த அளவே பொருத்தமுடைய தாக இருந்த போதிலும், பாரிட்டோவின் நலப் பொருளியல் சாதித்துள்ளது. 'தொழில்களில் ஈடுபடுவதற்கு இயன்ற அளவு சுதந்திரம் வழங்க வேண்டும்' என்னும் பிகோவின் விதி உறுதி யற்ற ஒன்ருக இருந்த போதிலும், அரசுக் கொள்கைக்கு (Public policy) அது அதிகப் பொருத்தமுடையதாக இருக்கிறது.

பிகோவின் பொருளியலானது தரஞ்சூழ் தன்மையுடையது (Normative); நடைமுறைப் பயன்களை நோக்கமாகக் கொண்டது. அது பலனுக்கான வாக்குறுதியே யன்றி, நமது நன்மதிப்பை ஈர்க்கும் ஒளி யன்று. பாரிட்டோவின் நிறைவுப் போட்டியின் மாதிரியில் காணப்படுவது போலன்றி, இடம் பெயராமை (Immobility), பகுபடாமை (Indivisibility), நிறைவுரு அறிவு (Imperfect knowledge) இவற்றோடுகூடிய போட்டியில்லா ஓர் உலகைத் தமது ஆராய்ச்சிக்கு பிகோ எடுத்துக்கொண்டார். பிகோவின் குறை பாடுகள், தரஞ்சூழ் ஊகத்தைப் பொறுத்தனவாக இல்லை; சந்தை யின் செயல் முறையில் (Market Machanism) ஏற்படும் தோல்வி களை, விலைக்கும் சமூக உற்பத்திக்கு மிடையிலான இறுதிநிலை வேறு பாடுகளாக மட்டும் சித்தரிப்பதற்கு மேற்கொள்ளும் முயற்சிகளைப் பொறுத்தனவாகவே அக்குறைபாடுகள் அமைந்துள்ளன.

**லெர்னர் - ஹோட்டலிங் முதலியோரின் கருத்துகள்**

1930 முதல் 1940 வரையிலான ஆண்டுகளில் நலப்பொருளிய லுக்குக் குறிப்பிடத்தக்க தொண்டாற்றியவர்கள் லெர்னர் (Lerner), கான் (Khan), ஹோட்டலிங் (Hotteling) ஆகிய மூவரு மாவர். பிகோவின் சில கோட்பாடுகளில் முக்கியமான சில திருத் தங்களைச் செய்தவர் அறிஞர் கான் ஆவார். அவருடைய பணி குறித்து, மரபு நலப் பொருளியல் பற்றிய முந்திய அத்தியாயங் களில் ஆராய்ந்தோம். பாரிட்டோவின் கொள்கைகளின் அடிப் படையி லமைந்த புதிய நலப் பொருளியல் பற்றிய இந்தப் பகுதி யில் லெர்னர் ஹோட்டலிங் ஆகியோரின் பணி குறித்துச் சற்று ஆராயலாம்.

லெர்னரின் 'கட்டுப்பாட்டுப் பொருளியல்' (Economics of control 1946) என்னும் நூல், எழுச்சியூட்டும் கருத்துகள் நிறைந்த ஓர் அருமையான நூல். 'நலப் பொருளியல்பற்றி நன்கறிந்த தத்துவங்

களை இந்நூலின் பகுப்பாய்வு செய்யப்பட்டுள்ள போதிலும்,[7] நலப் பொருளியலின் அடிப்படைத் தத்துவங்களைப் புதுமையான நேர்த்தி யான முறையில் அவர் இந்நூலில் அறிமுகப்படுத்துகிறார்.

லெர்னரின் முந்திய கருத்துகள் யாவும் இந்நூலில் சிறப்பாக ஒருங்கிணைக்கப்பட்டுள்ளன. 'பொருளியல் நுண்கணிப்புத் (Economic calculus) தத்துவம் விலைசெயல்முறைப்பயன் (use of price mechanism), எதேச்சாதிகார மையத்துத் திட்ட முறையைத் (Arbitrary centralized planning) தவிர்த்தல், பொருள் நலத்தில் சமதர்மத்திற்கான (Socialism) தேர்வுச் சுதந்திரம் (Freedom of Choice) ஆகியவற்றில் அவர் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருக்கிறார். நுகர்வோருக்கும் தொழிலாளருக்கும் இடையே இணக்கத்தை ஏற்படுத்த அவர் தீவிரமாக முயன்றுள்ளார். ஆனால், நிபந்தனை யற்ற தலையிடாமையை (Laissez - faire) அவர் ஆதரிக்கவில்லை. கட்டுப்பாட்டுப் பொருளியலை (Control economy) அவர் ஆதரிக்கின்றார். 'இறுதிநிலை உற்பத்திப் பொருள்கள் மீது நுகர்வோர் நிருணயித்துள்ள விலை மதிப்பீடுகள் (Valuations) மிக உயர்வாக இருக்கும் வகையிலான பயன்களுக்கு உற்பத்திக் காரணிகளை ஈர்க்கின்ற வகையில் தனிப்பட்ட நுகர்வோரின் சுதந்திரமான தேர்வு நடைபெறுகின்ற முறையில் விலைச் செயல்முறையே கட்டுப்பாட்டுப் பொருளியல் என்பதாகும்' என்று லெர்னர் விளக்கம் தருகிறார். ஆகவே, 'கூட்டு உடைமை உரிமை (Collective ownership), நிருவாகம் அல்லது ஏதாவது ஒருவகையான தனியுடைமை இவற்றுக்கிடையிலான சிக்கலைப் பாதிக்காத வகையில், சமூக நலனுக்கு மிகவும் சிறந்ததெனக் கருதப்படும் கொள்கையைக் கவனத்துடன் பயன்படுத்த வேண்டும்'[9] என்னும்உண்மையை அவருடைய 'கட்டுப்பாட்டுப் பொருளியற்' கோட்பாடு உணர்த்துகின்றது.

கட்டுப்பாட்டுப் பொருளியலுச்கு ஆதரவாக லெர்னர் கூறும் வாதம் இதுதான்; விலையும், இறுதிநிலை அடக்கவிலையும் சம அளவாக இருப்பதே நலத்தை உச்ச நிலைக்கு உயர்த்துவதற்கான மிக முக்கியமான வழியாகும். இதை முழுமையான கூட்டாண்மைப் பொருளியல் (Collectivist Emonomy) எளிதாகச் சாதிக்கமுடியும்.

7 Meade, J. E: 'Mr. Lerner on the Economics of Control' Economic Journal April 1945

Lerner, A P: 'The Concept of Monopoly and The Measurement of Monopoly Power' Review of Economic Studies 1932,

'Economic Theory and Socialist Economy' Review of Economic Studies, 19:4

Economics of Control, New York, 1946.

9 Radomysler, A: 'Welfare Economics and Economic Policy' Economica August, 1946. p. 191.

கட்டுப்பாட்டுப் பொருளியலைத் தீர்மானிப்பதற்குரிய திட்டமான சோதனையும் இந்தச் சமநிலையேயாகும். இது நிறைவுப் போட்டியில் தானாகவே ஏற்பட்டுவிடும். ஆனால், நிறைகுறை (Imperfect) அல்லது ஏகபோக (Monopolistic) முறைகளில் நிறைவுப் போட்டியைத் தனியார் தொழிலின்கீழ் நாம் தோற்றுவிக்க வேண்டும்; அல்லது அவ்வாறு செய்ய இயலாவிடில், பொதுமூலதன அமைப்பை உண்டாக்க (Collectivice) வேண்டும். சராசரி அடக்க விலைக்குக் (Average cost) குறைவாக இறுதிநிலை அடக்கவிலை இருக்குமிடங்களில், நிறைவுப் போட்டி நிச்சயமாக நிலவ இயலாது. ஆகவே இச்சமயத்தில், தொழில்களை அரசுடைமையாக்கி விடல் (Nationalize) வேண்டும்.

உத்தமம் (Opptimum) பற்றிய லெர்னரின் கொள்கை பாரிட்டோவின் கொள்கை போன்றதேயாகும். ஓர் உத்தம நிலையில், மற்றொருவரின் நலத்திற்கு ஊறு நேராமல் எந்தத் தனிப் பட்டவரும் தன்னுடைய நலத்தை மேம்படுத்திக்கொள்ள இயலாது என்பதே லெர்னரின் கருத்தாகும். நிறைவுப்போட்டியினால் உண்டான இறுதிநிலைச் சரிசமத் தொகைகள் (Marginal equivalences) உத்தம உற்பத்திக்கு வழிவகுக்கிறது என்பதைக் காட்டுவதற்குரிய பாரிட்டோவின் நிபந்தனைகளை லெர்னர் 'தாமே தம் சொந்த முயற்சியால்' வகுத்துள்ளார். இருவகைப் பொருள்களுக்கான பதிலீட்டுக்கட்டணங்கள் (Rates ot substitution), எல்லாத் தனிப் பட்டவர்களுக்கும் தொழில் நுட்பப் பதிலீட்டு விகிதத்திற்குச் (Technical rafe of substitution) சமமாக இருக்குமானால், அப்பொழுது உற்பத்தி உத்தம நிலையில் இருப்பதாகக் கருதலாம். இந்நிலையை, இறுதிநிலை இடப்பெயர்ச்சி அடக்கச் செலவுகளின் (Marginal displacement costs) விகிதாசாரத்தில் உற்பத்தி விலை விகிதங்கள் இருக்கின்ற ஒரு நிலை என்று லெர்னர் கூறுகின்றார். இறுதிநிலை அடக்கவிலைக்குச் சமமாக விலை இருக்கும்போது இந்நிபந்தனை நிறைவுபெறுகிறது. விலைக்கும், இறுதிநிலை அடக்க விலைக்குமிடையே ஏதேனும் மாறுபாடு இருக்குமானால், அம்மாறுபாடு ஏகபோக முறையினால் ஏற்பட்ட நட்டத்தின் அளவாகும்.

உத்தமம் பற்றி அதிகம் ஏதும் சொல்லாமல், எல்லாக் காரணிகளும், இறுதிநிலை இயற்பொருள் உற்பத்திகளின் (Marginal Physical Products) ஒரே விகிதத்தை உடையவை என்னும் நிபந்தனையை வகுத்து, அவ்வாறு இல்லையெனில் உற்பத்தியில் நிகர உயர்வை ஏற்படுத்த இயலும் என்று அவர் தமது இரண்டாவது ஆராய்ச்சிக் கட்டுரையில் கூறுகின்றார். இதை அவர் தமது 'குறிக்கோள் சோதனை' (Objective test) என்று சொல்கிறார். இந்த முறையை

ஏற்க கான் மறுக்கிறார். பொருள்கள் 'தவறான' அளவுகளில் உற்பத்தியானாலும்கூட, இந்த நிபந்தனை பூர்த்தியாகிவிடக் கூடும் என்று கான் தமது மறுப்புக்குக் காரணம் கூறுகின்றார். எனினும், சில எதேச்சையான மதிப்பு விகிதங்களுடன் உற்பத்தியை இயக்கு கின்ற அரசாங்க அதிகாரி ஒருவரால் அறிந்து கொள்ளப்படுவ திலேயே லெர்னரின் குறிக்கோள் (Objectivity) உண்மையில் அடங்கியிருக்கிறது. 'தவறான' பொருள்களை உற்பத்தி செய்வதை விலைநிருணய முறை (Pricing System) தடுக்கிறது என்றும் அவர் கூறுகின்றார்.

லெர்னரைப் போலவே, அறிஞர் ஹோட்டலிங்கும் பிகோவின் ஆய்வு முறையிலிருந்து மாறுபடுகின்றார். பொதுநலப் பகுப்பாய் வின் அடிப்படையில், நுகர்வோரின் ஒருபகுதி நலமுறையினையும், உற்பத்தியாளர்கள் உபரியையும் நிலை நாட்ட முயன்றவர்களில் அவரும் ஒருவர். ஒரு உள்நாட்டுச் சுங்கவரி (Exsice tax) அதே அளவு வருமானத்தைக் கொடுக்கக் கூடிய வருமான வரிக்குப் பதிலாகப் புகுத்தப்படுமானால், அதனால் தனிப்பட்டவர்கள் குறைந்த மதிப்புள்ள நிலைக்குத் தள்ளப்பட்டு விடுவார்கள் என்பதை நிரூபிப் பதற்கு அவருடைய முதலாவது அடிப்படைத் தோற்றம் (Theorem) முயல்கிறது.

பின்னர், நுகர்வோர் உபரிக்கொள்கை பற்றிய மற்றொரு வாதத் தின் மூலம், கால்டார் விதியை (Kaldor formula) நிலைநாட்டு கின்றார். ஒரு முதலீட்டைச் செய்யும்பொழுது, அதில் சம்பந்தப் பட்ட ஒவ்வொருவரும் மேம்பாடு அடையும் வகையில் ஒருவகைப் பளுப்பகிர்வு (Distribution of burden) ஏற்பட இயலுமானால், அப்போது அந்த முதலீட்டைச் செய்வதற்குத் தக்க காரணம் இருக் கிறது. இது தேவையான பகிர்வு நடைபெறக் கூடியதா என்னும் வினாவை ஒதுக்கித்தள்ளி விடுகிறது. எனினும் ஏற்படும் நன்மைகள் அதிகமாகவும் பரவலாகவும் இருக்குமானால், ஒரு சிலருக்கு ஊறு நேர்ந்தாலும், அம்முதலீட்டைச் செய்தேயாக வேண்டும். அவ்வாறு ஒரு சிலருக்கு ஏற்படும் இடையூறு கடுமையானதாக இருக்குமெனில், அதற்கான நட்ட ஈட்டுக்கு வழிசெய்து விடலாம். ஹோட்ட லிங்கின் இக்கருத்தைப் பிற்கால நலப் பொருளியல் வாதிகள், குறிப்பாக ஹிக்ஸ், கால்டார் ஆகியோர் ஏற்றுக்கொண்டதுடன், நலப் பொருளியலில் நட்ட ஈட்டுத் தத்துவக் கோட்பாடு (Theory of compensation principle) ஒன்றைத் தனியாக உருவாக்கினார்கள்.

இந்தக் கோட்பாடு மூன்று வெவ்வேறு எழுத்தாளர் குழுவின ரின், மூன்று வெவ்வேறு கொள்கைகளின் அடிப்படையில் வளர்ச்சி

யடைந்துள்ளது. முதல் குழுவினர், நலத்தை வெறும் அறவியல் கோட்பாடாகக் கருதுகிறவர்கள்: இரண்டாம் குழுவினர் அறவியல் தன்மையை ஏற்றுக் கொள்ளாமல், மன நிறைவின் காரணங்களைத்தான் நலப் பொருளியல் ஆராய்கிறது என்னும் கருத்துடையவர்கள். எனினும் இவ்விருவருடைய கொள்கைகளி லும் ஒருவிதப் பொதுத் தன்மை (Commonality) காணப்படு கிறது. உற்பத்தி (Production), பரிமாற்றம் (Exchange) இரண்டுக்கு மான உத்தம நிலைகள், உத்தமத்திற்கும் அவசியமான நிலைகளாகும் என்று அவர்கள் இரு சாராரும் கருதுகிறார்கள். மூன்றாவது குழுவி னரின் கொள்கை, சிறிது சிறிதான திட்டமுறையை (Piecemeal Planning) ஒத்ததாக இருக்கிறது. பாரிட்டோவின் உத்தமத்திற்கு மாறான எந்த நிலையையும் விட, பாரிட்டோவின் உத்தமம் நிச்சய மாகச் சிறந்ததாக இருக்கும் என்பது அவர்கள் கருத்து.

## ஹிக்ஸ் கால்டார் சிந்தனைக் குழு

ஹிக்ஸ், கால்டார், சைட்டோவஸ்கி ஆகிய மூவரும் தனியான தொரு சிந்தனைக் குழுவினராகத் திகழ்கிறார்கள். இவர்களுடைய கருத்து சிறிது சிறிதான திட்டமுறையை (Piecemeal Planning) ஒத்ததாக இருக்கிறது. பாரிட்டோவின் கோட்பாடுகளையும், முறைமையியலையும் இவர்கள் உன்னிப்பாகப் பின்பற்றுபவர்கள் என்பது இவர்களின் நூல்களிலிருந்து தெரிகிறது. குறைவாக விரும்பப்படுகின்ற (less preferred) ஒரு நிலைக்கு இன்னொருவரை இடமாறச் செய்யாமல், ஒருவரை அவர் விரும்புகின்ற நிலைக்கு உயர்த்த இயலாது என்னும் ஒரு நிலைதான் சமூக உத்தமம் (Social optimnm) என்று விளக்கப்பட்டுள்ளது. எதிரிடையாகச் (Negative) சொல்ல வேண்டுமானால், குறைந்தது ஒரு நபரை மேம்படுத்தக் கூடிய வகையில் பரிமாற்றம் அல்லது உற்பத்தி மூலமாகப் பொருள் களைச் சீரமைக்க இயலுமானால் அத்தகைய முறையானது சமூக உத்தமமாக (Social optimum) இருக்கிறது என்று சொல்லலாம். இன்னொரு வகையில் சொன்னால், பாரிட்டடா வகுத்துள்ள உத்தம நிலையாக இல்லாத எந் நிலையையும் விட, எந்த ஒ பாரிட்டோ உத்தமமும் சிறப்பானதாகவும் இருக்குமோ; இதற்கு வருமானப் பகிர்வு பொருத்தமற்றது. வருமானப் பகிர்வு, ஆரக்கால் பயன்பாட்டு ஒப்பீட்டுத் தன்மை (Inter personal comparability of utility) ஆகிய இரண்டையுமே மதிப்புத் தீர்ப்புகள் (value judg- ments) எனக் கூறி இவர்கள் விலக்கிவிட்டார்கள். எடுத்துக் காட் டாக, கால்டார் 'விரும்பிய வருமானப் பகிர்வு இருக்குமானால் அதை ஏற்படுத்துவதற்குரிய மிகவும் வசதியான வழியைக் காட்டு

வதுதான் பொருளியல்வாதி செய்யக்கூடிய ஒரே பணி' என்று கூறுகிறார்.[10] இதன்படி பொருள்நலத்தில் ஏற்படும் ஓர் உயர்வை உண்மையான வருமானப் பகிர்வுடன் தொடர்பு படுத்தாமலே விளக்கிக் காட்டுகின்றார். ஆனால், 'பொருள் நலத்தில் உயர்வு என்னும் சொற்றொடரே அவிறயல் (Ethical) தன்மையுடையது என்பதையும், அதில் உள்ளடங்கியுள்ள மதிப்புத் தீர்ப்பினை அவர்கள் புறக்கணித்து விட்டார்கள் என்பதையும் இங்கு சுட்டிக் காட்டியாக வேண்டியதிருக்கிறது. வருமானப் பகிர்வு குறித்து கால்டாரிடம் தெளிவு காணப்படவில்லை. 'இந்தச் சிக்கலுக்கு எளிய தீர்வு காணக்கூடிய ஒரு தனிச் சூழ்நிலையில், வருமானப் பகிர்வும், செல்வப் பகிர்வும் சரிசமமாக இருக்கின்ற இரண்டு நிலைமைகளில் ஏதாவது ஒன்றைத் தேர்வு செய்ய வேண்டியிருந்தால், திறமை பற்றிய தெளிவிலக்கணங்களை மட்டும் கருத்திற் கொண்டே ஒரு பொருளியல்வாதி தனது முடிவைத் தெரிவிக்க முடியும்' என்கிறார் கால்டார். ஒரு குறிப்பிட்ட செல்வ, வருமானப் பகிர்வுக்குக் குறைந்த பயனுடையதை விடத், திறமை வாய்ந்தஒரு பொருளியல் அமைப்பைக் கைக்கொள்வதே சிறந்தது என்று அவர் இதற்குக் காரணம் கூறுகின்றார்.[11]

ஹிக்ஸ், கால்டார், சைடோவஸ்கி ஆகிய மூவரும் அடங்கிய இந்தத் தனிச் சிந்தனைக் குழாம், கற்பித இலட்சிய (utopi·) நிபந்தனைகளை வகுப்பதில் கவனம் செலுத்தவில்லை: மாறாகப் பொருளியல் முன்னேற்றத்திற்குத் தேவையான திறமையான தெளிவிலக்கணம் ஒன்றை வகுக்க முயன்றார்கள். இந்த வகையில் அவர்கள் 'புரட்சியை விரும்பவில்லை; சீர்திருத்தத்தை விரும்பினார்கள்: கிழித்தெறிவதற்கும், புதியதை உருவாக்குவதற்கும் பதிலாக ஒட்டுப் போடுவதற்கு (Patching up) முயன்றார்கள்' எனலாம்.[12]

உத்தமத்திற்கான பல்வேறு நிபந்தனைகள் வகுக்கப்படுகின்றன. இரு நபர்கள் இரு நுகர்பொருள்களை எந்த அளவினும், மற்றவருக்கு இழப்பு ஏற்படாமல் ஒருவருடைய மன நிறைவை உயர்த்தும் வகையில் தங்களுக்குள் பரிமாறிக் கொள்ளக்கூடிய நிலை ஏற்படும் வரையில் உற்பத்திப் பொருள்களின் ஒத்த ஒதுக்கீடு நடைபெற இயலாது என்பது முதலாவது நிபந்தனை.

[10] Kaldor, N: 'Welfare Propositions of Economics and Interpersonal Comparison of Utility.' Economic Journal. September 1939. pp. 551-552.

[11] Scitovsky, T: Welfare and Competition. (London, 1952) p. 61

[12] Little, I.M.D: A Critique of Welfare Economics. (Oxford, 1957) p. 87.

படம் 2-இல், A என்னும் நபர் வாங்கிய x y என்னும் இரு பொருள்களின் அளவுகள் முறையே x y அச்சுகளில் அளவிடப்படு கின்றன. அதேபோல் B என்னும் நபர் வாங்கிய அதே பொருள் களின் அளவுகள், தலைகீழாகவுள்ள x y அச்சுகளில் அளவிடப்படு கின்றன. x y என்ற பொருள்களின் கிடைக்கக் கூடிய அளவுகள் முறை O A, O B ஆகும். அப்படியானால், A B இருவருக்கு மிடையே x y என்னும் இரு பொருள்களின் பகிர்வானது, இரு நபர் களும் CC' என்ற 'ஒப்பந்தக் கோட்டில்' (Contract) பொருந்தும் வகையில் அமைந்திருக்கும்; அப்போது நலமானது உச்ச நிலையில் இருக்கும்.




இப்பொழுது, CC' என்னும் கோட்டிற்கு வெளியில் Q என்ற ஏதாவது ஒரு புள்ளியை எடுத்துக் கொள்வோம். அப்பொழுது, Aக்கு Yஇல் ORம், Xஇல் OSம், Bக்கு Yஇல் RBம், Xஇல் ASம் இருக்கும். Q என்ற புள்ளி, Bஇன் சம நோக்குக் கோடாகிய (Indifference curve) IV'க்கு மேலேயும், Aஇன் சம நோக்குக் கோடான IIக்குக் கீழேயும் அமைந்திருக்கும். ஆனால், Yஇல் RR'ஐ Bக்கு Aயும், Xஇல் SS'ஐ Aக்கு Bயும் கொடுப்பார்களானல், IIஇல் Aயும் IV' இல் Bயும் இருக்கும்பொழுது, இருவரும் CC மீது Q'ஐ

அடைவார்கள். இத்தகைய மாற்றம் இருவருக்கும் நன்மை விளை வித்து, நலத்தை உயர்த்தும். ஒப்பந்தக் கோடாகிய CC' என்பது, நலக் கண்ணேட்டத்துடன் ஒப்பிடக்கூடிய புள்ளிகளின் நியமப் பாதை(Locus) ஆகும். கொடுக்கப்பட்டுள்ள Q' என்னும் புள்ளியிலி ருந்து CC' வழியாக இரு திசையில் நகர்ந்தாலும் ஒரு நபர் அதிக மன நிறைவைப் பெறவும், ஆனால் மற்றவர் குறைவான மன நிறைவை அடையவும் செய்கிறோம். ஆனல், CC'க்கு வெளியி லுள்ள எந்த ஒரு புள்ளிக்கும், நலத்தைப் பொருத்தவரையில் உயர் வான ஒரு புள்ளியை CC' மீது காண முடியும். மேலும், CC'மீதான எந்த ஒரு புள்ளியும், உச்சநலத்துடன் ஒத்ததாக இருக்கும்.

இந்த இறுதிநிலை நிபந்தனையைப் (Marginal condition) பின் வருமாறு சுருக்கமாகக் கூறலாம்: இரு உற்பத்திப் பொருள் களுக்கு இடையிலான இறுதிநிலைப் பதிலீட்டு விகிதமானது (Marginal rate of substitution), இரண்டு பொருள்களையும் நுகர்கின்ற ஒவ்வொரு தனி நபருக்கும் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும்.

இரண்டாவதாக, சிறப்புத் தேர்ச்சியின் (specialisation) உத்தம அளவு (optimum degree) என்பதாகவே இறுதிநிலை நிபந்தனை குறிப்பிடப்படுகின்றது. இரு உற்பத்திப் பொருள்களுக் கிடையிலான மாற்றத்தின் (Transformation) இறுதிநிலைவிலை அவற்றை உற்பத்தி செய்யும் எந்த இரு நிறுவனங்களுக்கும் சம அளவாக இருத்தல் வேண்டும்.

மூன்றாவதாக, காரணிக்கும், பொருளுக்கும் இடையிலான மாற்றத்தின் இறுதிநிலை விலையானது, அதே காரணியைப் பயன் படுத்துகின்ற, அதே பொருளை உற்பத்தி செய்கின்ற எந்த இரு நிறுவனங்களுக்கும் ஒரே அளவினதாக இருத்தல் வேண்டும்.

நான்காவதாக, இரு காரணிகளுக்கு இடையிலான பதி லீட்டு இறுதிநிலைத் தொழில் நுட்பப் பதிலீட்டு விகிதம் (Marginal technical rate of substitution), அதே பொருளை உற்பத்தி செய்வ தற்கு அதே இரு காரணிகளைப் பயன்படுத்துகின்ற இரு நிறுவ னங்களுக்குள் ஒரே அளவாக இருக்க வேண்டும்.

ஐந்தாவதாக, இரு பொருள்களுக்கு இடையிலான பதிலீட்டு இறுதிநிலைவிலை அவ் விரு பொருள்களையும் நுகர்கின்ற எந்த

நபருக்கும், அவற்றுக் கிடையிலான மாற்றத்தின் இறுதிநிலை விலைக்குச் சரிசமமானதாக இருக்க வேண்டும்.

ஆறுவதாக, உற்பத்தியில் உதவி புரிவதற்கு (ஒரு குறிப்பிட்ட நிறுவனத்திற்குக்) கிடைத்த X என்ற பொருளின் அளவுக்கும், இந்த உதவியை அளிப்பதற்குச் செலவாகிய நேரத்திற்குமிடையி லான பதிலீட்டு இறுதிநிலைக் கட்டணமானது, ஒவ்வொரு காரணி அலகு உரிமையாளருக்கும் (factor unit owner), உற்பத்திற்கு உதவுவதில் அவருடைய காரணி அலகு செலவிட்ட நேரத்திற்கும், X என்ற பொருளுக்கும் இடையிலான மாற்றத்தின் இறுதிநிலை விலைக்குச் சமமானதாக இருக்க வேண்டும்.

இறுதியாக, எந்த இரு நேரங்களிலும் (ti, tj) கட்டுப்பாட்டுக் குட்படும் செல்வாதாரங்களுக்கிடையிலான பதிலீட்டு இறுதிநிலைக் கட்டணம், நபர்கள் அல்லது நிறுவனங்களுக்குள் ஒரே அளவாக இருக்க வேண்டும்.

உச்ச அளவு நலத்தை அடைவதற்கு, இந்த ஏழு நிபந்தனை களையும் ஒரே சமயத்தில் கண்டிப்பாகச் செயல்படுத்த இயலாது. மொத்தத்தில் இவை அவசியமான சில நிபந்தனைகளேயன்றி, முற்றிலும் போதுமான நிபந்தனைகள் அல்ல.

இந்த இறுதிநிலை நிபந்தனைகள் அனைத்தையும் மொத்த நிபந் தனைகளில் தெரிவிக்க முடியும். நலமானது உச்ச நிலையை அடைய வேண்டுமெனில், எந்தப் பொருளையும் எந்த நிறுவனமும் மாற்றியோ, எந்த நுகர்வோரினாலும் நுகரப்படும் எந்தப் பொருளின் அளவையும் மாற்றியோ, அல்லது எந்த ஒரு தனிப் பட்டவருக்கும் நேரடிப் பயன் கிட்டுவதற்காகப் பயன் படுத்தப் படும். காரணியின் அளவை மாற்றியோ அதை அதிகப் படுத்த இயலாததாக இருக்க வேண்டும். இறுதிநிலை, இரண் டாந்தர, மொத்த நிபந்தனைகள் எல்லாம் நிறைவு பெறுமானால், நலம் உச்ச நிலையில் இருக்கும்; ஆனால் அது ஒரு குறிப்பிட்ட வருமானப் பகிர்வை முற்கோளாகக் கொண்டதாகும் (Presupposes).

ஒரு நிலையிலிருந்து இன்னொரு நிலைக்கு, உதாரணமாக (படம் 3இல் கண்டபடி) Aஇலிருந்து Eக்கு நகர்வது குறித்துத் தீர்ப்புக்கூறப் பொருளியல்வாதியை அனுமதிக்க வேண்டுமானால், அதற்குப் பின் கண்ட தெளிவிலக்கணத்தை அறிஞர் கால்டார் வகுக்கின்றார்.




Aஇலிருந்து Eக்கு நகர்வதைக் கைவிடுவதற்குப் பதிலாக Y கொடுக்கும் தொகை ky என்று கொள்வோம். இம் மாறுதலைத் தடுக்க, X கொடுக்கத் தயாராக இருக்கும் தொகை kx. கால்டாரின் வாதப்படி kxஐக் காட்டிலும் ky அதிகம் என்றால், Xஇன் நலத்தில் ஏற்படும் இழப்பை Y ஈடு செய்யலாம்; அதே சமயத்தில் தான் பெற்ற ஆதாயத்தில் ஒருபகுதியைத் தானே வைத்துகொள்ளலாம்; அதாவது, இருப்பு மீதான நிகர ஆதாயமே மாறுதல்; ஆனால் Xஇன் இழப்பை உண்மையில் ஈடு செய்யவேண்டிய தேவையில்லை; ஆதாயம் பெற்றவர் தமது ஆதாயத்திலிருந்து இந்த நட்ட ஈட்டைக் கொடுப்பதற்குச் சக்தியுடையவராக இருந்தாலேபோதும். 'ஒரு குறிப்பிட்ட அளவையைக் கையாள்வதன் விளைவாகச், சமுதாயத்தில் எவரும் நட்டமடையப் போவதில்லை என்று பொருளியல் வாதி நிரூபிக்கவேண்டிய அவசியமில்லை.' 'அவ்வாறு நட்டமடைந்தவர்கள் அனைவருக்கும், அவர்கள் அடைந்த நட்டம் ஈடுசெய்யப்பட்டாலும் சமுதாயத்தின் எஞ்சியோர் முன்னைவிட மேம்பாடு அடைவார்கள்' என்று நிரூபித்துவிட்டாலே போதுமானது. இந்த உண்மையைக் கோட்பாட்டு வடிவில் சொல்ல வேண்டுமானால், 'நட்ட ஈட்டுவரிகள், ஊக்கத் தொகைகள் (Bounties) இவை அனைத்தின் குறிக்கணக்குக் கூட்டுத்தொகை (Algebraic sum), நேர் எண்ணாகவோ (Positive) எதிர் எண்ணாகவோ (Negative) அல்லது பூஜ்யமாகவோ (Zero) இருப்பதைப்பொறுத்து, ஒரு குறிப்பிட்ட பொருளியல் அமைப்பினால் நலமானது உயராமலோ, குறையாமலோ அல்லது மாறாமலோ இருக்கும்' என்று கூறலாம்.

நட்டஈடு கொடாமையின் (Non-Compensation) கோட்பாட்டுச் சிக்கல்கள் இங்கு அடியோடு புறக்கணிக்கப்பட்டதாகவே தோன்றுகிறது. பொருளியல்வாதி கொள்கைகளை ஆதரிக்கின்ற பொழுது, 'போதிய நட்ட ஈடு' கொடுக்க வேண்டுமென வலியுறுத்தும் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ள வேண்டும். இல்லையென்றால் கொள்கைக்கு ஆதரவாக அவர் கூறும் வாதங்கள் யாவும் சட்டப்படி தவறானவைக ளாகிவிடும்.[13]

இந்தத் தெளிவிலக்கணத்தைப் பின்வருமாறு வரைபட முறைப்படி கூறலாம். PP என்பது பயன்பாட்டுச் சாத்திய வளைகோடு (Utility Possibility Curve). இக் கோடானது, X-இன், Y-இன் எல்லாப் பொருள்களினுடைய பயன்பாட்டு அளவுகளின் நியமப்பாதை (Locus) ஆகும். பயன்பாட்டு அளவுகள், X, Y ஆகிய தனிப்பட்டவர்களிடையே செல்வ மறுபகிர்வின் மூலமாக (அம்மறு பகிர்வினால் வேறெந்த மாறுதலும் ஏற்படாமல்) உண்டாக்கப் படுபவை. E என்னும் புள்ளி வழியாக வரையப்படும் பயன்பாட்டுச் சாத்திய வளை கோட்டிற்குக் கீழே A அமைந்திருந்தால் மட்டுமே, புள்ளி A-இலிருந்து E-ஐ நோக்கி எந்த ஒரு நகர்வும் (Movement) மேம்பாடாக (Improvement) இருக்க முடியும்.

ஹிக்ஸ், கால்டார் ஆகியோரின் தெளிவிலக்கணம் 'சமச் சீரற்றது' (Asymmetrical) என்றும், மாறுதலுக்கு முன்னதாக நலத்தின் குறிப்பான பகிர்வுக்கு அது அவசியமின்றி முக்கியத்துவம் கொடுக்கிறது என்றும் கூறி, அதைச் சிலர் எதிர்க்கிறார்கள். மாறுதலுக்கு முன்னரும் பின்னரும் பகிர்வு ஒரே மாதிரியாக இருந்தால் கால்டாரின் சோதனை செல்லுபடியகும். வேறுபாட்டு வரிவிதிப்பின் (Differential Taxation) மூலமாக அரசு தலையிடாத வரை, இது அவ்வாறு அமைய இயலாது. ஒரே தெளிவிலக்கணத்தின் வாயிலாக இரண்டு நிலைகளையும் ஒன்றைவிட ஒன்று சிறந்தது எனக் காட்டி விடலாம். இது ஒரு விநோதமான நிலையாகும். இதைத் தவிர்ப்பதற்கு இரட்டைத் தெளிவிலக்கணம் ஒன்றை சைட்டோவஸ்கி கூறுகிறார். அது அடுத்த பகுதியில் ஆராயப்பட்டுள்ளது.

கால்டாரின் நட்ட ஈட்டுத் தத்துவத்தின் மூலமாக பாரிட்டோவின் தெளிவிலக்கணத்தின் 'குறுகிய எல்லைகள் முறிக்கப்பட்டுள்ளன'. இத்தத்துவத்தை உண்மையான வருமானத்தில் ஏற்படும் ஓர் உயர்வின் தெளிவிலக்கணமாகவும், அதன் மூலம் நலப் பொருளியலை

13 Win h, D. M: Consumer s Surplus and Compensation. Principle' American Economic Review, June 1965, p. 422

உற்பத்தி, பகிர்வு என இரு பகுதிகளாகப் பிரிப்பது சரியென நிரூபிப்பதற்காகவும் ஆரம்பத்தில் கால்டார் புகுத்தினார்.

எனினும், பாரிட்டோவின் தெளிவிலக்கணத்தைவிட விரிந்த அளவு பயனுடைய தனித் தெளிவிலக்கணமாக இது பெரும்பான்மையோரால் கருதப்படுகின்றது. ஆரக்கால் ஒப்பீடுகள் (Interpersonal Comparisons) தவிர்க்கப்படுகின்றன என்று அவர்கள் வெளிப்படையாகக் கூறியுள்ள போதிலும், இத்தெளிவிலக்கணத்தில் அத்தகைய ஒப்பீடுகள் மறைந்திருக்கின்றன. வெவ்வேறு தனிப்பட்டவர்களிடையே பண வருமானத்தின் சரிசமமான ஆதாயமும், நட்டமும், நலத்தின் சரிசமமான நட்டம் அல்லது ஆதாயத்தைக் குறைக்கிறது என்ற யூகமே இந்த ஒப்பீடுகளைப் புலப்படுத்தி விடுகிறது. சமுதாயத்தின் நோக்கில், பயனடைந்தாருக்கு விளைந்த ஆதாயங்கள், (பணத்தின் அளவில்) இழந்தோரின் நட்டத்தைக் காட்டிலும் கூடுதலாக இருக்குமெனில், அத்தகைய நடவடிக்கை (Course of action) விரும்பத் தக்கதுதான் என்பதை இது உணர்த்துகிறது. பேராசிரியர் பான்மால் (Prof Banmol) பொருத்தமாகக் கூறியிருப்பது போல, இத் தெளிவிலக்கணம் 'பகிர்வு நிலைக்குச் (Distributive Status) சாதகமானதாக இருக்கிறது; அதாவது சம்பந்தப்பட்ட தனி நபர்களின் நட்ட ஈட்டுச் சக்தி இதைத் தன் வயப்படுத்திக் கொண்டிருக்கிறது.[14]

நட்ட ஈட்டுத் தத்துவத்திற்கு நடைமுறை உதாரணம் ஒன்றை இங்கு குறிப்பிடலாம். வரி கொடுப்போரிடமிருந்து வசூலிக்கப்பட்ட வருமான வரியிலிருந்து தேவையானவர்களுக்கு நிவாரணம் அளிப்பதை எடுத்துக் கொள்வோம். இத்தகைய வருமான மறுபகிர்வானது, நுகரும் பொருள்கள் பகிர்ந்தளிக்கப்படுகின்ற திறனைப் பாதிக்காத முறையில், நலத்தை மறுபகிர்வு செய்கிறது. நுகர்வோரிடையே போட்டி நிறைவாக இருக்கும்பொழுது, ஒரு மனிதனுடைய வருமானத்தில் ஒருபகுதியை எடுத்து, மற்ற மனிதனின் செலவுக்குக் கொடுப்பதன் மூலமாக, நுகர்வோர் இருவரையும் அவர்களின் ஒப்பந்தக் கோட்டின் (Contract Curve) வழியாக நகரும்படி செய்யலாம். வருமான வரிவாயிலாகக் கிடைத்த பணத்திலிருந்து, வேறுசிலருக்கு உதவித் தொகை வழங்கும்பொழுது இவ்வாறுதான் நிகழ்கிறது.

இத்தகைய உதவியைப் பணமாக வழங்காமல், அமெரிக்காவில் செய்தது போன்று உணவு முத்திரைத் திட்டம் (Food stamp pro-

[14] Dobb, M: On Economic Theory and Socialism (London, 1956) p. 63)

gramme) போன்ற வேறு வழிகள் மூலம் உதவி அளிக்கப்படுமானுல் நிலைமை வேறு விதமாக இருக்கும். இது பகிர்வுத் திறனைக் குறைத்து, உணவுப் பொருள்களின் விலைகளை வெவ்வேறு மக்களுக்கு வெவ்வேறு வகையாக ஆக்கிவிடும். இதன் விளைவாக ஏற்படும் பொருள்நல இழப்பினை, வரி கொடுப்பவருக்கு வழங்கும் உதவிக்கான செலவு தொகைக்கும், அந்த உதவியைப் பெறுகின்றவர்களுக்குக் கிடைக்கும் உதவித் தொகைக்கும் இடையிலான வித்தியாசப் பணத்தின் அளவிற் கணக்கிடலாம்.

இந்த விளைவை விளக்கிக்கூற வேண்டுமானுல், ஒரு மனிதனுக்குப் பணமாக வழங்கி, அதை அவன் விரும்பிய விதத்தில் செலவிட அனுமதிப்பதன் மூலம் அவனுடைய மகிழ்ச்சியைப் பெருக்கலாம். அதாவது, உதவியைப் பணமில்லாத—உதவிப் பொருள்களாக அளிப்பதற்குப் பதிலாகப், பணமாக வழங்குவது விரும்பத் தக்கது; ஏனெனில், உதவி பெறுபவருக்கு அரசுக்கு ஆகும் அதே செலவில் அதே அளவு ஆதாயம் கிடைக்கும்படி செய்வது பொருளியல் முறைப்படி அதிகத் திறன் வாய்ந்ததாகும். மேலும், நிறுவனங்களின் ஒரு குறிப்பிட்ட விதியமைப்புக்கும் கொள்கைகளுக்கும் உட்பட்டு, நட்ட ஈட்டுத் தத்துவத்தைச் செயலாக்கும் பொழுது, கொள்கை வினக்களுக்கு அடிக்கடி ஐயந்திரிபற்ற விடைகள் கிடைக்கின்றன.[15]

## சைட்டோவஸ்கியின் இரட்டைத் தெளிவிலக்கணம்

ஹிக்ஸ்—கால்டார் தெளிவிலக்கணப்படி இருநிலைகளையும், ஒன்றைவிட மற்றென்று விரும்பத் தக்கது என்று நிரூபிக்க முடியும். கால்டாரின் தெளிவிலக்கணத்திற்கு சைட்டோவஸ்கி இரு காரணங்களைக் காட்டி எதிர்ப்புத் தெரிவிக்கிருர். முதலாவது, நுகர்வோர் உபரிக் கோட்பாட்டை நட்ட ஈட்டுத் தத்துவம் பயன் படுத்துகிறது என்பது. நுகர்வோர் உபரிக் கோட்பாட்டைப் பயன் படுத்துவதை சாமுவல்சன் சற்று வன்மையாகவே கண்டிக்கிருர். அக் கோட்பாடு 'வஞ்சகமான ஒரு கருவி என்றும், அதைப் பயன் படுத்தாமலிருப்பதே நல்லது என்றும் அவர் கருதுகிருர். இரண்டாவதாக, வழக்கத்திற்கு மாருன சில சமயங்களில் மாற்று நிலைமைகள் இரண்டில் எது திறமையானது என்பதைத் தீர்மானிக்க இயலாது. ஒவ்வொரு நிலையும் மற்றதைவிடச் சிறந்ததாகத் தோன்றக்கூடிய விஞேதமான நிலைமை ஏற்படக் கூடும்.'[16]

[15] Bailey, M. J: 'The Interpretation and Application of Compensation Principle' Economic Journal March, 1954 p. 52.

[16] Scitovsky, T: 'The State of Welfare Economics.' American Economic Review, 1951, p. 303.

ஹிக்ஸ்—கால்டார் தெளிவிலக்கணத்தின்படி, படம் 4இல்



படம் 4

காண்பதுபொல், A-யிலிருந்து H-க்கு நடைபெறும் ஒரு நகர்வை, ஒரு மேம்பாடு என்று கருதலாம் என்றும், அதே சமயம் H-லிருந்து A-க்குத் திரும்பி நகர்வதையும் ஒரு மேம்பாடாகவே கருத வேண்டும் எனவும் சைட்டோவஸ்கி சுட்டிக் காட்டுகிறார். H-வழியாகச் செல் லும் பயன்பாட்டுச் சாத்திய வளைகோடாகிய RR'-க்குக் கீழே A அமைந்துள்ளது; ஆனால், அதே சமயம் A-வழியாகச் செல்லும் பயன்பாட்டுச் சாத்தியக் கோடான SS,க்குக் கீழே அமைந்திருக் கிறது. RR' SS' இரண்டும் ஒன்றையொன்று வெட்டுவதே இதற்குக் காரணம். இந்தக் குழப்பமான நிலைமையைத் தவிர்ப்பதகாகக், கண்டிப்பான சோதனை ஒன்றை சைட்டோவஸ்கி குறிப்பிடுகிறார். அச்சோதனை இரண்டு பகுதிகளைக் கொண்டது; (a) தொடக்கப் புள்ளியிலிருந்து புதிய புள்ளிக்கு நகர்வது ஒரு மேம்பாடா என்ப தைக் காண கால்டார் தெளிவிலக்கணத்தைப் பயன்படுத்துதல்; (b) H-இலிருந்து A-க்குத் . திரும்பி நகர்வது ஒரு மேம்பாடல்ல என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள கால்டார் தெளிவிலக்கணத் தைப் பபன்படுத்துதல். இத்தெளிவிலக்கணப்படி, இச்சோதனையின் இரண்டு பகுதிகளிலும் ஒரு நகர்வு தேறினால் மட்டுமே, அதை ஒரு மேம்பாடு என்று கருத முடியும் என்று சைட்டோவஸ்கி கூறுகிறார்,

வருமானத்தின் வெவ்வேறு பகிர்வுகளையுடைய நிலைமைகளை, அவை தனியார் பயன்பாடுகள் சம்பந்தப்பட்டனவாக இருப்பதால்,

அவற்றை ஒன்றோடொன்று ஒப்பிடுவதை சைட்டோவஸ்கியின் இரட்டைத் தெளிவிலக்கணம் தடைசெய்கிறது. விலைகள் மாறுகின்றபொழுது, சமூக வருமானத்தின் மதிப்பீடு தொடர்பாக எழுகின்ற குறியீட்டு எண் (Index number) சிக்கலை, இத் தெளிவிலக்கணம் நினைவூட்டுகின்றது. (ஆனால், குறியீட்டெண் புள்ளி விவரங்களிலிருந்து கால்டார் தெளிவிலக்கணத்தைப் பகுத்தறிய இயலாது). அதாவது, பாஷ்ஷேர் லாஸ்பெயர்ஸ் (Paasher Laspeyers) விதியுடன் நெருங்கிய ஒப்புமையுடையதாக இருக்கிறது. இரண்டிலும் வெவ்வேறு முக்கியத்துவத்தையுடைய சராசரிகளை ஒப்பிடுவதிலேயே சங்கடங்கள் ஏற்படுகின்றன.

நட்ட ஈட்டுத் தெளிவிலக்கணமும், அதைத் திருத்தி சைட்டோவஸ்கி அமைத்த இரட்டைச் சோதனையும் 'உள்ளடக்கமான (Implicit) ஏற்றுக் கொள்ள முடியாத மதிப்புத் தீர்ப்பை (Value judgment)' அடிப்படையாகக் கொண்டு இயங்குகின்றன என்று கூறி அவற்றுக்கு முக்கியமாகக் கண்டனம் தெரிவிக்கப்படுகிறது. உள் நிலைப் பண நட்ட ஈடு (Potential money Compensation) சம்பந்தப் பட்ட ஒரு தெளிவிலக்கணத்தைப் பயன்படுத்துவதன் மூலம், பணத்தின் அடிப்படையி லமைந்த மறைமுகமான ஆரக்கால் ஒப்பீட்டை (Interpersonal Comparison) அவர்கள் புகுத்துகிறார்கள்.

ஹிக்ஸ்-கால்டார்-சைட்டோவஸ்கி தெளிவிலக்கணத்தைச் சீர் திருத்தியமைத்து மூன்று அம்சத் தெளிவிலக்கணம் ஒன்றை அறிஞர் லிட்டில் வகுக்கிறார். அதன் அம்சங்கள் வருமாறு : (a) கால்டார் ஹிக்ஸ் தெளிவிலக்கணம் நிறைவுறுகிறதா? (b) சைட்டோவஸ்கியின் தெளிவிலக்கணம் நிறைவுறுகிறதா? (c) எந்தப் பகிர்வும் நல்லதா கெட்டதா?

ஒரு மாறுதலினால் சிறப்பான நலப் பகிர்வு ஒன்று ஏற்படுமானாலும், மாறுதல் செய்யும்பொழுது பணத்தை மொத்தத் தொகையாக மாற்றுகின்ற பகிர்வுக் கொள்கையினால் ஒவ்வொருவரையும் எதிர் பார்த்த அளவு மேம்படுத்த முடியாமல் போனாலும், அந்த மாறுதல் பொருளியல் முறையில் விரும்பத் தக்கதாகும். இது போதுமானதொரு தெளிவிலக்கணமே; இதற்குப் பொருந்தாத மாறுதல்களும் விரும்பத் தக்கவை என்பதை இது குறிப்பிடவில்லை.

விரும்பத் தக்கதொரு மாறுதலுக்குப் போதுமான நிபந்தனையிலிருந்து மரபான உத்தம நிபந்தனைகளைப் பகுத்தறிவதற்குத் தம்முடைய தெளிவிலக்கணம் அனுமதிப்பதால், நலப்பொருளியலுக்குப் பொருத்தமான அடிப்படையாகத் தமது தெளிவிலக்கணம் அமைந்துள்ளது என்று லிட்டில் கூறுகிறார்.

லிட்டில் தாமே ஒப்புக்கொள்வது போல், பரவலாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ள இரண்டு மதிப்புத் தீர்ப்புகளை அவரது தெளி விலக்கணம் முற்கோளாகக் கொண்டிருக்கிறது. முதலாவது சமுதாய நலம் என்பது தனி நபர்களின் நலத்தின் வளரும் சார் பலன் (increasing function) என்பது. இரண்டாவது, தனி ஒருவர் ஒரு தெரிவு செய்த நிலையில் (Chosen position) இருந்தால் அவர் மேம்பட்ட நலமுடையவர் என்பது. 'நலமுடிவுகள் மதிப்புத் தீர்ப்புகளாக இருப்பதாலும், மதிப்பு முடிவுகளுக்கு மதிப்பு முற் கோள்கள் தேவை என்பதாலும், நலப்பொருளியலுக்கு இந்த மதிப்பு முற்கோள்கள் இன்றியமையாதவை' என்று அவர் நிரூபிக்கிறார்.

லிட்டிலின் நலத் தெளிவிலக்கணத்திற்குச் சிலர் எதிர்ப்புத் தெரிவிக்கிறார்கள். 'நலப்பகிர்வு பற்றிய தீர்ப்புகளிலிருந்து உண் மையான வருமானத்தின் அளவைத் தனியாகப் பிரிக்கமுடியாது; உண்மையான வருமானத்தின் ஐயமற்ற உயர்வோடு, உண்மை யான வருமானத்தின் விரும்பத்தகாத பகிர்வு நிகழ்வதும், இதற்கு எதிர்மாறாக நிகழ்வதும் உண்டு; ஒரு சமுதாயத்தில் சமத்துவத் திற்கும் ஊக்கங்களுக்கும் (incantives) இடையில் முரண்பாடுகள் ஏற்படுவது உண்டு'[17] என்று அவர்கள் தங்கள் எதிர்ப்புக்குக் காரணம் கூறுகிறார்கள், செப்ப மற்றதும் தவறானதுமான கருத்தின் அடிப்படையில், பகிர்வு உண்மை வருமான அளவு இவை பற்றிய முக்கியத்துவங்களைத் தனியாகப் பிரித்துவிட முடியாது; இவை இரண்டும் 'ஒரே பகுதியுடைய ஒரே தெளிவிலக்கணப்படி மதிப்பி டப்பட வேண்டும்.இந்தச் சர்ச்சை பற்றி அறிஞர் மிஷான் (Mishan) கருத்துத் தெரிவிக்கையில், 'உண்மை வருமான மதிப்பீடுகளும், பகிர்வும் நெருங்கிய தொடர்புடையவை என்பதை லிட்டில் ஒருவ ரன்றி வேறெவருமே மறுக்க இயலாது. அல்வாறு மதிப்பீடு செய்ய முடியுமா, மதிப்பீடு செய்ய வேண்டுமா என்பதே உண்மை யில் எழும் வினாவாகும்[18] என்று கூறுகின்றார்.

பிகோவின் மரபுமுறை நலப் பொளியலில் காணப்பட்ட குறை பாடுகளின் விளைவாகத் தோன்றியதே புதிய நலப் பொருளிய லாகும். மூன்று குறைபாடுகளை ஹிக்ஸ் குறிப்பிடுகிறார். அவை 1) பொருள் நலத்திற்கும் பொது நலத்திற்கு மிடையிலான தொடர்பு (Correlation); 2) ஆரக்கால் ஒப்பீடுகள்; 3) தேசிய வருமானத் தொகையின் உண்மை மதிப்பும் நுகர்வோர் உபரியின் மொத்தமும் ஒன்றெனக் கருதுதல். இக்குறைபாடுகளை நீக்குவதற்கு

[17] Robertson, D. H: Economic Commentari s (London, 1956) pp 55–56

[18] Mishan, E. J: 'Welfare Criteria' A comment. An Exchange of Notes Economic, Journal' March, 1962. p. 235.

பாரிட்டோ, முறைச் சிந்தனையின் அடிப்படையில் 'சீரமைப்பையும்' (Reorganisation) 'நட்ட ஈட்டையும்' (Compensation) ஹிக்ஸும் மற்றவர்களும் வலியுறுத்துகிறார்கள்.

முறைமை யியலைப் பொறுத்த வரையில், பிகோவின் முறையி லிருந்து புதிய நலப் பொருளியல் வாதிகள் மாறுபடுகிறார்கள். மொத்த நலம் பற்றிய (Total welfare) சிக்கலை, அதிகத் திறமையான உற்பத்தி பற்றிய அடிப்படைச் சிக்கலாக பிகோ கருதுகிறார். ஆனால் மொத்த நலத்திற்கான சிறப்பான பகிர்வு பற்றிய அடிப்படைச் சிக்கலே மொத்த நலம் என்று புதிய நலப் பொருளியல்வாதிகள் கருதுகிறார்கள்.

நிதர்சனமான உண்மைகளிலிருந்து தொடங்கி, நடப்பு நிலைமை களின் வடிவாக நலப்பொருளியலை பிகோ உருவாக்குகிறார்; மேலும் இன்றையச் 'சீரற்ற உலகை (un-ideal world) சீர்படுத்துவதிலேயே அவர் அதிக அக்கறை செலுத்துகிறார். இதற்கு நேர்மாறாக, இன்னும் அதிகத் திறமையான உற்பத்தி முறைகளினால் நிகரச் செல்வமும், அதன்மூலம் நலமும் பெருகுவதற்கு வழி வகுக்கும் ஒரு சீரிய பொருளியல் முறையை உருவாக்குவதில் ஹிக்ஸ் கவனம் செலுத்துகிறார். தனிப்பட்டவரின் நிலையும் மோசமடைந்து விடக்கூடாது; ஒவ்வொருவரும் தன்னால் இயன்ற அளவுக்கு மேம் பாடு அடைய வேண்டும்' என்பதும் அவர் கருத்தாகும். ஹிக்ஸின் இக்குறிக்கோள் ஈடேறுமா என்பது ஐயத்திற்கிடமாக இருந்த போதிலும், அவருடைய முறை, சட்டபூர்வமானதாகவும், நம்பத் தக்கதாகவும் அமைந்துள்ளது.

முறைகள் வேறுபட்ட போதிலும், அவை 'மொத்த நலத்தைப் பெருக்க வேண்டும்' என்ற ஒரே நோக்கத்தை உடையனவாகவே இருக்கின்றன.'பொருளியல் கோட்பாட்டின் சீர் இணைபிரியா அங்க மாகவும், ஆக்கப் பொருளியலின் 'இரட்டைச் சகோதரனாகவும்' நலத்தைக் கருதுவதற்கு உரிமை உண்டு' என்பதை ஹிக்ஸ் நிருபித் திருக்கிறார். பொருளியலின் பயனுக்கத் தன்மையை (Purposive Character ஹிக்ஸும் பிறரும் உணர்ந்திருக்கிறார்களேயன்றி, நலப் பொருளியலைப் போதிய அளவு ஆராய்ந்து தொடர்பான தரஞ்சூழ் தன்மையை (Normative Character) அவர்கள் இன்னும் உணர வில்லை என்பதையே இது காட்டுகிறது;

**பகுப்பாராய்ச்சிகளின் வரிசை :**

பெர்க்சன் (Bergson), சாமுவல்சன், ஆரோ (Arrow), லாங்கே (Lange) ராதன்பர்க் (Rottenberg), லங்காஸ்டர் (Lancaster),

கிராப் (Graff) ஆகியோரைப் பகுப்பாராய்ச்சியாளர்கள் (Synthetizers) வரிசையில் சேர்க்கலாம். பொதுமாதிரி (general model) ஒன்றை உருவாக்கும் பழையமுறை ஒன்றைப் பெர்க்சன் பயன்படுத்துகிறார். முந்தைய நூல்களையெல்லாம் இந்த வரிசையில் அடக்கலாம். பெர்க்சனின் கொள்கைகள் அடங்கிய ஆராய்ச்சிக் கட்டுரை (Seminal paper) ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்தெட்டில் வெளி வந்தது. எனினும் அதன் செல்வாக்கை மேற்குறிப்பிட்ட எழுத்தாளர்களிடம் மிகுதியாகக் காணலாம். பிகோவின் நலப் பொருளியலுக்கும் பாரிட்டோவின் நலப்பொருளியலுக்குமுள்ள முக்கிய வேறுபாடு, பயன்பாட்டின் ஒப்பீட்டுத் தன்மை பற்றிய தாகும். செயலுக்குரிய ஆக்க வழி எதையும் புதிய நலப்பொருளியல் காட்டவில்லை. கொள்கைகள் பற்றிய ஆணைகள் யாவும் பழைய நலப்பொருளியலிலிருந்தே பிறக்கின்றன. முந்தைய எழுத்தாளர்களின் நூல்களில் காணப்படும் பல்வேறு அம்சங்களை யெல்லாம் பகுத்துத் தொகுத்தமையே பெர்க்சன் செய்த முக்கிய பணியாகும். படிமுறைச் சமூக நலச் சார்பலன் (ordinal social welfare function) ஒன்றை முதலில் தெளிவாக வகுத்தவர் பெர்க்சனே யாவார். அச் சார்பலன் அடிப்படையில் பல்வேறு கொள்கைகளையும் விளக்கிக்கூற முடிந்தது. பொருள் நலச் சார்பலன் (Economic welfare function) ஒன்றையும் அவர் வகுத்தார். அது நலப் பொருளியலில் மதிப்புத் தீர்ப்புகளின் பங்கினைத் தெளிவாகத் தனிமைப் படுத்தவும், விளக்கிக் காட்டவும்' பெரிதும் உதவுகின்றது.

உத்தமக் கோட்பாட்டின் இன்றியமையாப் பண்புகளைத் தொகுத்துக் கூறும்பொழுது அவற்றை மூன்றுவகை நிலைமைகளில் பகுத்துக் காட்டுகிறார். முதல்வகை உச்ச நிலைமைகள் (Maximum Conditions) பற்றியது. இது சமுதாயத்தில் ஒவ்வொரு தனி நபரின் நுகர்வு, ஊழியங்களின் அளிப்பு (Supply of Services) பற்றிக் குறிப்பிடுவதாகும். பல்வேறு பொருள்களின் இறுதிநிலைப் பயன்பாடுகள் அல்லது அவற்றின் இறுதிநிலைப் பதிலீட்டு விலைகளின் (Marginal rates) விகிதங்கள் (Ratios), அவற்றின் விலைகளின் விகிதத்திற்குச் சமமாகவும் இருக்க வேண்டியது அவசியமாகும். இரண்டாவதாக, பல்வேறு காரணங்களின் இறுதிநிலை உற்பத்தித் திறன்களின் (Marginal prouductivities) விகிதங்கள் அல்லது உற்பத்திப் பொருள் வடிவிலான அவற்றின் பதிலீட்டு விகிதங்கள் (Ratios of Substitution) எல்லாத் தொழில்களிலும் சமமாக இருக்க வேண்டும். மூன்றாவதாக மதிப்பு அடிப்படையில் (நடப்பு உற்பத்தி விலைகளில்) கணக்கிடப்படும்

ஒவ்வொரு காரணியின் இறுதிநிலை உற்பத்தித் திறனும் எல்லாத் தொழில்களிலும் சமமாக இருக்க வேண்டும்.[19]

அவசியமான இந்த உத்தம நிலைமைகளிலிருந்து பெர்க்சன் தமது சமூக நலச் சார்பலனை வகுத்தார். பாரிட்டோவின் நலப் பொருளியலின் கீழ் உத்தம நிலைமைகள் பற்றி விவாதிக்கையில், ஒரு விரும்பத் தக்க பொருளியல் மாறுதலுக்குப் போதுமான நிலைமைகள் மட்டுமே அவை என்று சுட்டிக் காட்டப்பட்டது. இரு முறைகளுக்கு மிடையிற் காணப்படும் முக்கிய வேறுபாடுகளில் இதுவும் ஒன்று.

ஒரு குறிப்பிட்ட காலத்தில், வெவ்வேறு உற்பத்திப் பிரிவு களிலும் பயன்படுத்தப் படுகிற உற்பத்திக் காரணிகள் (தொழி லாளர் தவிர) ஒவ்வொன்றின் அளவுகள், நுகரப்படும் பல்வேறு பொருள்களின் அளவுகள், செய்து முடித்த பல்வகைப் பணிகளின் அளவுகள், அந்தக் குறிப்பிட்ட காலத்தில் உற்பத்திப் பிரிவுக்குச், சமுதாயத்தின் ஒவ்வொரு தனி நபரும் செய்த இந்தப் பணியின் அளவுகள் ஆகியவற்றுக்கும் நலத்திற்குமிடையிலான வரையறுக்கப் படாத ஒரு தொடர்புதான் அக் குறிப்பிட்ட காலத்தில் சமுதாயத் தின் நலம் என்று வரையறுக்கப்பட்டுள்ளது. Aயும் Bயும் இரு வகையான தொழிலாளர்களைக் (Labour) குறிப்பிடுகின்றன; Cயும் Dயும், தொழிலாளர் அல்லாத இரண்டு உற்பத்திக் காரணிகள்; Xம் Yம் இரண்டு நுகர்பொருள்கள்: இவற்றின் - தொடர்பைப் பின்வரும் முறையில் குறிப்பிடலாம்:

$$w = w(x_i, y_i, a_i^x, a_i^y, b_i^x, b_i^y, \ldots\ldots\ldots\ldots \\ x_n, y_n, a_n^x, b_n^x, a_n^y, b_n^y, c_j^x, D^x \\ C^y, D^y, r, s, t \ldots\ldots) \ldots\ldots\ldots\ldots \quad (1.1)$$

X என்ற நுகர்பொருளை உற்பத்திசெய்யும் உற்பத்திப் பிரிவில் பயன்படுத்தப்படும் தொழிலாளர் அல்லாத உற்பத்திக் காரணி களான C, D இவற்றின் அளவுகள் $C^x$-ம், $D^x$-ம் ஆகும்; Y என்னும் நுகர்பொருளை உற்பத்தி செய்யும் உற்பத்திப் பிரிவில் பயன்படுத்தப் படுகின்ற இக்காரணங்களின் அளவுகள் $C^y$, $D^y$ ஆகும். i-ஆவது தனிநபரினல் நுகரப்படும் X, Y என்ற பொருள்களின் அளவுகள் $x^i$, $y^i$ ஆகும்; $a_i^x$, $b_i^x$, $a_i^y$, $b_i^y$ ஆகியவை அந்தத் தனி நபர் குறிப் பிட்ட காலத்தில், உற்பத்திப் பிரிவு ஒவ்வொன்றுக்கும் செய்துள்ள

[19] Bergson, A: 'A Reformulation of Welfare Economics' Quarterly Journal of Economics. Vol. LII 1937—38, pp. 313–315.

ஒவ்வொருவகை வேலைகளின் அளவுகளாகும்; r, s, t என்பவை நலத்தைப் பாதிக்கின்ற, குறிப்பிடப் படாத மற்றக்காரணிகள். இந்த அம்சங்கள் யாவும், X, Y இவற்றின் உற்பத்தியில் தங்களின் விளைபலன்கள் (effect) மூலமாகவோ, நேரடியாகவோ அல்லது மறைமுகமாவோ நலத்தைப் பாதிக்கக் கூடியவை. $x_i$, $y_i$, $a_i$, $b_i$ முதலிய பொருளியல் காரணிகள் எடுத்துக்கொள்ளும் மதிப்பு வீச்சானது (Range of values), r, s, t போன்ற பொருள் சார்பற்ற காரணிகளைப் பாதிக்கும் அளவுக்குப் பெரிதாக இல்லை என்றும், இதனல் நிறுவன அமைப்புகளை (Institutional fabrics) பாதிக்கின்றன என்னும் ஒரு முக்கியமான யூகத்தை பெர்க்சன் கைக்கொண்டார். வேறு விதமாகச் சொல்ல வேண்டுமெனில், பொருளியலில் பெரும்பான்மையான கோட்பாட்டு ஆய்வுகளில் மற்ற மாறிகளை (Variables) மாறுதவை (Constant) எனக்கொள்வது போன்றதே இந்த யூகமும் ஆகும். இது அவ்வாருயின், பகுதிப் பகுப்பாய்வு (Partial analysis) எளிதாக இருக்கும். r, s, t ஆகிய வற்றைக் கொடுக்கப்பட்டவையாக எடுத்துக்கொண்டு, P பொருள் நலச் சார்பலனை (Economic welfare function) அவர் பின்வருமாறு வகுக்கிறுர்;

$$E=E\,(x_i,\ y_i,\ a_i^x,\ b_i^x,\ a_i^y,\ b_i^y,\ \ldots\ldots\ldots\ldots\ldots\ldots\ x_n,\ y_n,\ a_n^x,\ b_n^x,\ a_n^y,\ b_n^y,\ c^x,\ d^x,\ c^y,\ d^y)\ldots\ldots\ldots\ldots\ldots\ldots(1.2)$$

இந்தப் பொருள் நலச் சார்பலனைப் பயன்படுத்தி, நாம் தேர்ந்தெடுக்கும் எவ்வகை மதிப்பு யூகங்களையும் பிரயோகித்து உத்தம நிலைமைகள் மீது அவற்றின் விளை பலன்களை எளிதில் கண்டுபிடித்து விடலாம்.

தனி நபரின் நலம், மொத்தச் சூழ்நிலைகளை (Total environ ment) நம்பியிருக்கவில்லை என்பதையும், சூழ்நிலையில் எங்காவது ஏற்படும் மாறுதல்களினல் அவருடைய நலம் பாதிக்கப்படும் என்பதையும் பெர்க்சனின் பொருள் நலச் சார்பலன் குறிப்பிடுகிறது. சூழ்நிலையின் ஒரு பகுதியில் ஏற்படும் மாறுதல்களினல் மற்றப் பகுதிகளில் எவ்வித மாறுதலும் ஏற்படாதபோது, தனி நபரின் நலத்தில் ஏற்படும் விளைவை அது சுட்டிக் காட்டுகிறது. எனவே, மாறுகின்ற பொருளியல் நிகழ்ச்சிகளில் ஓர் இட எல்லைக்குட்பட்டதாகி விடுகின்ற (Localized) நலத்தின் பகுதியை மட்டுமே பொருள்நலம் குறிக்கிறது என்பது பெர்க்சனின் கருத்து. இக்கருத்தில், பிகோவின் பொருள் விளக்கத்தை பெர்க்சன் முக்கியமாகப் பிரதிபலிக்கிறுர்.

அவர்களின் முறைமையியலில்தான் அடிப்படையில் வேற்றுமை காணப்படுகிறது. நலப் பொருளியலின் ஒரு கருவியாகப் பயன் பாட்டு நுண்கணிப்பை (utility calculus) கேம்பிரிட்ஜ் பொருளியல் அறிஞர்கள் கையாண்டதை பெர்க்சன் கண்டிக்கிறார். "அவர்கள் கையாண்ட இம்முறை மதிப்புத் தீர்ப்புகளைக் கையாள் வதற்கு ஒரு மாற்றாக அமையவில்லை' என்று அவர் கருதுகிறார். நிலைமை யைக் கணிப்பதற்குப் பகுப்பாய்வாளருக்கு உதவக்கூடிய வெளிப் படையான மதிப்புத் தீர்ப்புகளின் தொகுதி ஒன்றை வகுப்பதுதான் இச்சிக்கலிலிருந்து விடுபடுவதற்குரிய வழி என்றும் அவர் கூறுகிறார். சமுதாய உறுப்பினர்களின் வெவ்வேறு பயன்பாட்டு இணைப்புகளை (Coordinations of utility) வரிசைப் படுத்திச் சமநோக்குப் படம் (Indifference Map) ஒன்றை வரைவதற்கு இது வழி செய்கிறது. அவருடைய சமூக நலச் சார்பலன், இத்தகையதொரு சமநோக்குப் படமேயாகும்; ஓர் உத்தேசக் கொள்கை மாற்றம் ஒரு மேம் பாடுதானா (Improvement) இல்லையா என்பதை பகுப்பாய்வாளர் தீர்மானிப்பதற்கு இச் சார்பலன் அனுமதிக்கவில்லை.

பெர்க்சனின் தெளிவிலக்கணம் 'மிகவும் பயனுள்ள ஆதார வரை யறையாக அமைந்துள்ள போதிலும், நலத் தீர்ப்புகளைச் (welfare judgments) சேகரிப்பதற்குத் தேவையான நெறி முறைகளை (Ins-tructions) அது முறையாகப் பெற்றிருக்கவில்லை. இதனால், 'நமது பணியின் கடினமான பகுதிக்குத் தீர்வு காண இத்தெளிவிலக்கணம் நமக்கு உதவாமல் போய்விடுகிறது.'

சமூக நலச் சார்பலன் ஒன்றை ஆக்குவதில் இரண்டு பெரிய சிக்கல்கள் எழுகின்றன. சமூக நலச் சார்பலனின் வடிவையும், ஒவ்வொரு தனி நபரின் நலத்தையும் அது எந்த அளவுக்கு நம்பி யிருக்கிறது என்பதையும் திட்டமாகக் கூறுவதைப் பற்றியது முதலாவது சிக்கல். சமூக நலச் சார்பலனின் வடிவை எப்படியாவது நிருணயித்தாக வேண்டும். இதற்கு ஒவ்வொரு தனி நபரின் விருப் பங்களும் சமூக விருப்பச் சார்பலனாக ஒருங்கிணைக்கப் படும்பொழுது அவ்விருப்பங்களின் ஒப்பு முக்கியத்துவங்களை நிருணயிக்க வேண்டி யுள்ளது. மேலும், சமூக நலச் சார்பலனை நிருணயிப்பதில் மதிப்புத் தீர்ப்புகளும் அடங்கியிருக்கின்றன. ஆகவே, சமூக நலச் சார்பலனைப் புகுத்தியதனால், பொருளியல்வாதிகளின் சிக்கல் உண்மையில் தீர்ந்துவிடவில்லை. எனினும் வெவ்வேறு மக்களின் கருத்துகளுக்கும், விருப்பங்களுக்கும் முக்கியத்துவம் அளிக்க வேண்டிய பொறுப்பை அவர்களிடமிருந்து அது அகற்றி விட்டது.[20]

[20] Scitovsky, T: Papers on Welfare and Growth (London, 1964) p. 185.

இரண்டாவது சிக்கலை அறிஞர் ஆரோ (Arrow) குறிப்பிடுகிருர். பற்பல மாற்றுகளிலிருந்து (alternatives) தேர்வு செய்ய வேண்டியிருந்தால் சமூக நலச் சார்பலன் ஒன்றை நாம் ஆக்க இயலும்; அப்படி நாம் ஆக்க முடிந்தாலும், அது தனி நபர் விருப்பங்களைக் குறிப்பிடுவதாகவோ கிடைக்கக்கூடிய எல்லா மாற்றுகளின் சமூக முறை வைப்புக்கு முரண்படாமலோ இருக்காது.[21]

சமூக நலச் சார்பலனைப் பயன்படுத்துவதை ஆரோ எதிர்க்கவில்லை. மாருக அணுகும் முறையை வரையறுப்பதுடன், ஜனநாயக முறை எப்பொழுதும் பயன்படுவதில்லை என்பதையும் நிருபிக்கிருர்.

நலச் சார்பலன் ஒரு பகுப்பாய்வுக் கருவி (analytic tool) என்பதைக் கண்டோம். அது பகுப்பாய்வுகள் சம்பந்தப்பட்ட மதிப்புத் தீர்ப்புகளின் சிறப்புத் தொகுதிகளைத் தெளிவுபடுத்த வசதியானது; அந்த மதிப்புத் தீர்ப்புகளின் உட்பொருள்களை ஆராயவும் உதவுகிறது. இதன் தொடர்பாகப், 'பயனுள்ள சமூக முறை வைப்புக்கு வழி வகுக்கும் மதிப்புகளின் தொகுதி எது? அந்தக் குறிப்பிட்ட மதிப்புத் தொகுதியை நாம் எவ்வாறு தேர்ந்தெடுக்க இயலும்? என்ற இரண்டு கேள்விகள் எழுப்பப்படுகின்றன.

இவ்வினுக்களுக்குத் தகுந்த விடைகளைக் கூறி ஆரோ பெருந்தொண்டுபுரிதிருக்கிருர். தமது பொது சாத்தியக் கோட்பாட்டின் (General Possibility Theorem) மூலமாகக் 'குறியீட்டுத் தர்க்கம்' (symbolic logic) மிக உயரிய கருத்தாய்வு' (Very high level of abstraction) ஆகிய முறைகளைக் கையாண்டு அவர் இவ் விடைகளைக் கண்டுள்ளார். அவருடைய கோட்பாடு மூன்று முக்கிய அம்சங்களைக் கொண்டது: (i) கருதத் தக்க சமூக மாற்றுகளின் (social alternatives) தொகுதியின் செயல்மாரு முறை வைப்பிற்கு (transitive ordering) வழி செய்யக்கூடிய ஒரு சமூகத் தேர்வுமுறை (social choice procedure) இருக்கவில்லை:(ii) விலக்கப்பட்ட மாற்றுகளிலிருந்து தனித்து இயங்கக்கூடிய எந்த மாற்றுகளின் துணைத் தொகுதியையும் செயல் மாருமல் வரிசைப்படுத்துவதற்கு (transitive ranking) வழி செய்கின்ற ஒரு சமூகத் தேர்வு முறை இருக்கவில்லை; (iii) கருதத்தக்க எல்லாச் சமூக மாற்றுகளின் தொகுதியின் (ஒன்றுக்கு மேற்பட்டதென யூகிக்கப்படுகின்ற) தனிப்பட்ட முறை வைப்புகளிலிருந்து, (வருவிப்பு முறையும் தனிப்பட்ட முறை வைப்பும் சில நிபந்தனைகளுக்குட்பட்டு) வருவிக்கப்படக்கூடிய ஒரு சமூகத் தேர்வு முறை இருக்கவில்லை. அத்தகைய வருவிப்பு (Deri-

[21] Arrow, K. J: Social Choice and Individual Values, (London. 1951) pp. 22 -23.

vation) பின்வரும் மூன்று நிபந்தனைகளையும் நிறைவு செய்தல் வேண்டும்: (a) ஒரு மாற்று ஒரு தனிப்பட்டவரின் முறைவைப்பில் இருக்குமானால், அது சமூக முறைவைப்பில் இடம் பெறக்கூடாது; (b) தனிப்பட்ட முறைவைப்புகளிலிருந்து தனிமையானதாகச் சமூக முறை வைப்பை அளிக்கக்கூடாது; (c) ஒன்றே ஒன்றைத் தவிர மற்றெல்லாத் தனிப்பட்ட முறை வைப்புகளிலிருந்தும் தனித்தியங்குவதாகச் சமூக முறை வைப்புகள் பின் கண்ட நிபந்தனைகளைப் பூர்த்தி செய்தல் வேண்டும்; (a') அவை செயல் மாறுதவைகளாக இருக்க வேண்டும்; (b') கையாளும் செயல் முறையிலிருந்து தனித்தியங்குவதாக அவை இருத்தல் வேண்டும்; (c') அவை தூய்மையானவையாகவும், மூகத் தேர்வு எதிர்ப்புகளினாலோ (auticipations) அல்லது அச் செயல் முறையைக் கையாள்வதற்கு முன்னதாக, நலன்களின் முரண்பாடுகளை நீக்குவதற்கு மேற்கொள்ளும் முயற்சிகளினாலோ பாதிக்கப் படாமலும் இருக்க வேண்டும். ஆரோவின் நிபந்தனைகள் பல காரணங்களுக்காகக் கண்டிக்கப்படுகின்றன. அவற்றுள் மிக முக்கியமானவை உண்மை சார்ந்ததும், அறநெறி சார்ர்ந்ததுமான காரணங்களாகும். அது உண்மையில், ஆரோவின் நிபந்தனைகளின்படி தவறானதாகும்.[22]

புதிய நலத் தத்துவங்களை அவற்றின் பொதுவான வடிவத்தில் ஆரோவின் நூல் விளக்குகிறது; அத் தத்துவங்களின் அடிப்படை அமைப்பினைத் தெளிவாகக் கூறுவதுடன், நலப் பொருளியல் சிந்தனை முழுவதையும் பற்றிய மிகவும் வருந்தத் தக்க, ஏமாற்றத் திற்குரிய உண்மையைச்[23] சுட்டிக் காட்டவும் அந்நூல் துணை செய்கிறது. 'நலப் பொருளியல் சிந்தனைவாதிகளால் இப்போதைய வடிவில் உருவாக்கப்பட்டுள்ள பொருளியல் தத்துவங்கள் யாவும், மதிநலம் வாய்ந்த பொருளியல் சமூகக் கொள்கையை வகுப்பதற்கு வழி காட்டுவதில் முற்றிலும் பயனற்றதாக இருக்கின்றன. மேலும், நலத்தை உயர்த்துகின்ற-அல்லது குறைக்கின்ற கொள்கைகளைப் பாகுபடுத்தி அறிந்து கொள்ள உதவுவதற்குத் திறனற்றவையாகவும் அத் தத்துவங்கள் இருக்கின்றன' என்ற உண்மையினையே ஆரோ சுட்டிக் காட்டியிருக்கின்றார். எனவே, இக் குறைபாடுகளைப் பொருளியல் வாதிகள் உணர்ந்து கொள்வதற்கு ஆரோவின் கருத்துகள் பெரிதும் காரணமாக இருந்திருக்கின்றன எனலாம்.

ஆரோவின் முறையும் எதிர்ப்புக் குள்ளாகியிருக்கிறது. தரமான நலக் கோட்பாடுகளினால் மறுக்கப்பட்ட அல்லது உறுதி செய்யப்

22 BLAU, Julian: 'The Fxistence of Social Welfare Functions' Econometrica. Vol. 2. April, 1957) pp. 302—313.

படாத யூகங்களை அடிப்படையாக வைத்துக் கொண்டு சமூக நலச் சார்பலனை வகுப்பதன் மூலம் அவர் முரண்பாடுகளில் சிக்கிக் கொண்டார் என்று குறை கூறுகிறார்கள். ஒரு தனிப்பட்ட முறைவைப்புத் தொகுதியிலிருந்து ஒரு சமூக முறை வைப்புக்கு முற்றிலும் மன நிறைவளிக்கும் வகையில் மாறுவது இயலக் கூடியதுதான் என ஆரோ நிரூபித்திருந்தாலும், மிகத்திறமை வாய்ந்த முறைப் பொருளியல் வாதியால் (econometrician) கூட உச்சநிலைச் சமூக நிலையை அடைவதற்குரிய வழியைக் கண்டு பிடிப்பதோ அல்லது அப் பயணத்தை மேற்கொள்வதற்கு மனித குலத்தைத் தூண்டுவதற்கு எதையும் சொல்லாமலிருப்பதோ, மிகவும் கடினமான காரியமாகும்.

ஆரோவின் நூலைத் திறனாய்வு செய்த அறிஞர் லிட்டில், அவருடைய முடிவுகள் பொருந்தக் கூடியவைதாமா என்ற ஐயத்தை எழுப்புகிறார். அவருடைய மறுப்புக் கருத்துகளுக்கும் (Negative findings), நலப் பொருளியலுக்கும் எவ்விதச் சம்பந்தமுமில்லை. 'கொடுக்கப்பட்டுள்ள தனியார் சுவைகளுடன், மாறுகின்ற ஒரு சூழ்நிலையின் (changing environment) சார்பலனாக (function) மிகச் சிறந்த பொருளியல் நிலையைச் சுட்டிக் காட்டக்கூடிய ஒரு 'முறை அல்லது விதியாகவே' (process or rule) பெர்க்சனின் நலச் சார்பலன் பொருள் படும்' என்று அவர் கூறுகிறார். ஆரோவின் சமூக நலச் சார்பானது மாறுகின்ற தனியார் சுவைகளைக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளது; வெவ்வேறு தனிப்பட்ட வரிசையமைப்புகளின் கீழ் சமூகத் தீர்ப்புகளிடையிலான ஒரு தொடர்பை அது நிறுவுகின்றது. சுவைகள் கொடுக்கப்பட்டிருப்பின், ஆரோவினால் கோரப்படும் நிலைமைகள், அதாவது ஒப்புமை நிலைமைகள் (conditions of correspondance) பொருளற்றதாகி விடுகின்றன. ஒவ்வொரு தனிநபரின் முறை வைப்பிலும் ஒரு சாத்தியம் (possibility) எழுந்தாலும் அல்லது நீடித்தாலும், பிறகு மற்ற நிலைமைகள் மாறாதிருக்கும்பொழுது, கூட்டு முறைவைப்பில் (collective order) அது இடம் பெறாதிருக்க வேண்டும்' என்பது ஆரோ குறிப்பிடும் நிபந்தனையாகும். இவ்வாறாக பெர்க்சன் - சாமுவல்சன் விதியமைப்பாக (formulation) வளர்ச்சியடைந்துள்ள நலப்பொருளியல் கோட்பாட்டுடன் ஆரோவின் நூல் எவ்விதத்திலும் பொருந்தவில்லை என்று லிட்டில் கூறுகிறார். நடப்புச் சமூக மதிப்புகளைப் பற்றிப் பொருட் செறிவோடு நாம் எதையும் பேச முடியாது. அவ்வாறே சமூகத் தேர்வுகள் குறித்தும் நாம் பேச இயலாது. சமூகத் தேர்வு என்று எதுவுமே இல்லை. சமூக நலச் சார்பலனைச் சில தனி நபர்களின் அல்லது தனி நபர்கள் குழாத்தின் மதிப்பு முறையாகப் System of Values) பொருள் விளக்கம் கூறுவது

ஒன்றே நம்மால் இயலக்கூடிய காரியம்; அதைச், சமுதாயத்தின் மதிப்புகளாக இனங்கண்டு கொள்வது என்பது நம்மால் இய லாத ஒன்று.

மேற்கண்ட விளக்கத்தை அறிஞர் ராதன்பர்க் ஏற்க மறுக்கிறார். சமுதாயத்தின் மதிப்புக் கோட்பாட்டிற்கு அனுபவ உட்பொருள் (Empirical Content) ஒன்றைக் கொடுப்பதற்கு அவர் முயல்கிறார். 'வளரும் சமுதாயத்தில் நிலவுகின்ற தனிச்சிறப்புடைய' முக்கிய மான மதிப்புக் கருத்து ஒருமைப்பாடு சம்பந்தப்பட்ட சமூக விஞ்ஞா னத்தில் உருவாகிய' 'மறுக்கத்தக்க கொள்கையின் அடிப்படையில் அவருடைய முறை அமைந்துள்ளது. சமுதாயத்தில் தனி நபர்கள் பெற்றுள்ள மதிப்புகளின் பாணியில், அனுபவ வாயிலாக மெய்ப்பிக் கத்தக்கதொரு ஒழுங்கு (Regularity) காணப்படுகின்றது. இந்த ஒழுங்கு, சமுதாயத்தில் முக்கியமான முடிவெடுக்கும் முறைகள் தொடர்பான போக்குகளை ஒருமுகப் படுத்துகிறது. முடிவெடுக்கும் முறைகள் பற்றிய இந்தக் கருத்தொருமைப்பாடு சமுதாயம் தனக்கேயுரிய தனிப்பாணியில் தொடர்ந்து நீடிப்பதற்கு, ஆழ்ந்த செயல் முக்கியத்துவம் உடையதாக விளங்குகிறது. எனவே, சமுதா யத்தை முழுமையாகக் கருத்தில் கொள்ளும்பொழுது அதன் அடிப் படைப் பண்புக் கூறுகளோடு (Characteristics) நெருங்கிய தொடர்புடைய மதிப்புகளின் தொகுதி ஒன்றைக் கண்டுபிடிக்க முடிகிறது. சமுதாயத்தின் பொருளியல் தேர்வு பற்றி ஆராய்வ தற்கு; இந்த மதிப்புகளைக் கருத்தில் கொள்ளலாமென்றும், இம் மதிப்புகளின் அடிப்படையில் பல்வேறு பொருளியல் வாதிகள் நிரு ணயித்துள்ள நலத் தரங்களை மதிப்பிடலாம் என்றும் ராதன்பர்க் யோசனை கூறுகிறார்.

வேறு சில புதிய கருத்துகளையும் இங்கு சுருக்கமாகக் குறிப் பிடுதல் அவசியம். புதிய நலப் பொருளியல் என்பது ஒரு 'வேடிக் கைத் தத்துவமே' (Caricature) என்று சாமுவல்சன் கருதுகிறார். புதிய நலப் பொருளியலுக்கும், பழைய நலப் பொருளியலுக்கு மிடையே உள்ள வேறுபாடு, ஏறத்தாழ பாரிட்டோவுக்கும், பிகோ வுக்கும் இடையிலான வேறுபாடேயாகும் என்றும் அவர் கூறுகிறார். மதிப்புத் தீர்ப்புகளின் ஏற்றுக் கொள்ள இயலாத் தன்மை (inad-missibility) பற்றிய ராபின்ஸின் கருத்தை அவர் ஆதரிக்கிறார். சமூக உற்பத்திப் பொருளுக்கு (Social Product) பிகோ கூறியுள்ள பொருள் விளக்கத்தைக் கண்டிக்கின்ற சாமுவல்சன், பாரிட்டோவின் உத்தம நிலையை (optimum position) ஏற்றுக் கொள்கிறார். அவ்வாறு பாரிட்டோவின் விளக்கத்தை அவர் பின்பற்றிய போதி லும், நலப் பகுப்பாய்வில் நுகர்வோர் உபரிக் கோட்பாட்டின் முக்கியத்துவம் பற்றிய ஹிக்ஸின் கருத்தை மறுக்கின்றார்.

பெர்க்சன், லாங் இருவரையும் தொடர்ந்து, தமது சமூக நலப் பலனில் பல்வேறு யூகங்களை அவர் கொள்கின்றார். இதில், சாமுவல்சனின் சமன்பாடுகள் (Equation), பிகோ கையாண்ட சமன்பாடுகளின் அமைப்பிலேயே அமைந்துள்ளன. பிகோவைப் போலவே சாமுவல்சனின் சமன்பாடுகளும் குறைவை (less) விட அதிகத்திற்கு (More) எப்பொழுதும் முதலிடம் அளிக்கின்றன. உற்பத்தி வகையில், உள்ளீடுகளுக்கும் (Inputs), உற்பத்திக்கும் (Outputs) இடையில் ஒரு நிலைமாற்ற உறவு (உற்பத்திச் சார்பலன்) ஒன்றை அது ஏற்படுத்துகிறது. தனியார் அளிப்பு, தேவை இவற்றின் வகையில், ஒவ்வொரு இறுதிநிலைப் பதிலீட்டுவிலை அல்லது இறுதிநிலைப் பயன்பாடுகளின் விகிதத்தை, உற்பத்திச் சார்பலனில் அதற்கு இணையான நிலைமாற்று விலைக்குச் சம்மானதாக ஆக்குகிறது. இதன் விளைவாக, ஒரு தொகுதிச் சமன்பாடுகள் கிடைக்கின்றன. K என்றதைத் தனி நபர்களின் எண்ணிக்கையாகக் கொண்டு, மாறிகளின் எண்ணிக்கையில் (K-1) குறைவாக அச் சமன்பாடுகள் இருக்கும். இந்தச் சமன்பாடுகளிலிருந்து, K தனி நபர்களின் பயன்பாட்டுச் சார்பலன்களின் காரணியின் சமூகநலச் சார்பலன் ஒன்றை சாமுவல்சன் வகுக்கிறார். $W = W(u_1, u_2 \ldots\ldots uK)$. இதில் W என்பது படிமுறை வரிசைத் தனியார் பயன்பாட்டுச் சார்பலன்கள் $ui(i = 1, 2, \ldots\ldots K)$; அது எல்லாச் சாத்திய நிலைமைகளின் நிலைமாறுச் சமூக முறைவைப்பு ஒன்றை உருவாக்குகிறது. இந்த W-ஐத்தான் ஒரு கருணையுள்ள சர்வாதிகாரி (Benevolent despot) அல்லது ஒரு முழுமையான இறுமாப்புக்காரர் (Complete egoist) அல்லது நல்லெண்ணம் கொண்ட எல்லா மனிதரும்...'[24] என்று சில அறநெறியாளர்கள் வருணிக்கிறார்கள்.

லங்காஸ்டரின் (Lancastor) நலப் பொருளியல் பகுப்பாய்வும் ஓரளவு முக்கியத்துவம் வாய்ந்ததாகும். அவர் சமநோக்கு (Indifference), பயன்பாட்டுக்கருவிகள் இரண்டையுமே ஒதுக்கி விடுகிறார். நலத்தை அவர் அணுகும் முறை எந்த ஒரு சூழ்நிலையிலும் ஒரு குறிப்பிட்ட நுகர்வோரின் உண்மை நடத்தைக்குரிய கண்டறியத்தக்க அடி விவரங்களை (observable data) முற்றிலும் சார்ந்ததாக இருக்கிறது; சிறிது மாறுதல்களினால் அவருடைய தேர்வு விரிவடைந்திருக்கிறதா, அல்லது சுருங்கியுள்ளதா என்பதை அவருடைய உண்மையான தனிக் கொள்முதல்கள் (Purchases), இருவகை விலைகள், வருமானங்கள் இவற்றிலிருந்து மிக எளிதாகக் கணித்துவிட இயலும்.

[24] Samuelson, P. A: Foundations of Economic Analysis (Harward 1947) p. 221

அவருடைய இந்த விளக்கத்திற்கான அடிப்படை இதுதான்: நிலைமை II-இல் ஒரு தனி நபருக்கு (a) நிலைமை I-இல் அவர் தேர்ந்தெடுப்பதெல்லாம் கிடைக்குமானால் (b) நிலைமை I-இல் குறைந்தது ஒரு தேர்வாவது அவருக்குக் கிடைக்காமல் போகுமானால், அப்பொழுது அவருடைய நலம் நிலைமை I-இலிருந்து நிலைமை II-இல் ஐயமின்றி உயர்ந்திருக்கிறது. எனினும் இந்த இரண்டு நிலைமைகளிலும், ஒன்றில் கிடைக்காத தேர்வுகளுக்கு மற்றொன்று அனுமதிக்குமானால், அப்பொழுது லங்காஸ்டரின் கொள்கை தோல்வியடைந்துவிடுகிறது. நிலைமை I-இலிருந்து நிலைமை IIக்கு நகர்வதால் ஒரு தனி நபரின் நலம் உயர்வது போலவே, நிலைமை II-இலிருந்து நிலைமை I-க்கு நகர்வதாலும் உயரும் என்பதும் இதிலிருந்து தெரியவருகிறது. இதிலிருந்து பல விந்தையான விளைவுகள் ஏற்படுகின்றன. எடுத்துக் காட்டாக, அதிர்ஷ்டமுள்ள இந்தத் தனி நபர் தன்னுடைய நுகர்வை ஒருபோதும் மாற்றிக் கொள்ளாமலிருந்தாலும், அவருடைய நலம் தொடர்ந்து அதிகரித்துக் கொண்டேயிருக்கும்!

லங்காஸ்டரின் விரிவடைந்த தேர்வுமுறை பற்றிக் கருத்துத் தெரிவித்த அறிஞர் நியூமன் (Newman)[26] பல நபர், பலபொருள் நிகழ்வில் சுதந்திரப் பரிமாற்றத்தின் விருப்பத் தேர்வுக்கு ஒரு நிரூபணம் தரும்படி அவரைக் கேட்டுக்கொண்டார். இவ்வேண்டுகோளுக்கு இணங்கித் தமது நலத்தைத் தெளிவிலக்கணம் குறித்துச் சற்று அதிகப் பொதுவானதும், விதிமுறை அழுத்த முடையதுமான விளக்கம் ஒன்றை லங்காஸ்டர் அளித்தார். 'தேர்வின் விரிவு அல்லது சுருக்கம்' என்பது தனி நபரின் நலத்தில் ஏற்படும் ஓர் உயர்வுக்கான தெளிவிலக்கணமாகக் கொள்ளப்படுகிறது; தொகுதி நலத்தில் ஏற்படும் ஐயமற்ற உயர்வுக்கு வழக்கமான பாரிட்டோவின் தனிநபர் தெளிவிலக்கணத்தை எடுத்துக்கொள்ள வேண்டும்.

[25] Lancaster, K: "Welfare ropositions in terms of Consistency and Expanded Choice" Economic Journal September, 1958 p. 470

[26] Newman, Peter: "Mr. Laucartes on Welfare and Choice" Economic Journal 1954

# 5. நலப் பொருளியலின் அணுகு நெறிகள்

## உட்பொருள் விளக்கம்

நலப்பொருளியலின் உட்பொருள் (Content) ஆரம்பக்காலப் பொருளிய லறிஞர்களுக்கு எந்த அளவுக்குப் புரியாத சிக்கலாக இருந்து வந்ததோ அந்த அளவுக்கு நவீனப் பொருளிய லறிஞர்களை யும் குழப்பத்தில் ஆழ்த்தி வருகின்றது. நலப் பொருளியலின் அடிப் படைத் தத்துவங்கள் குறித்துப் பலதரப்பட்ட கருத்துகள் தெரி விக்கப்படுவதன் காரணமாக, நலப் பொருளியல் என்றால், என்ன என்பதற்கு ஒருமுகமான கருத்தை (Concensus opinion) உருவாக்கு வது கடினமாக இருக்கின்றது. நலப் பொருளியலுக்கு எல்லோருக் கும் மனநிறைவையளிக்கக்கூடிய பொருள் விளக்கத்தை (Defini-tion) வகுக்க வேண்டுவது கோட்பாட்டுப் பொருளியல் வாதிகளின் (Theoretical economists) பணிக்கு மிகவும் இன்றியமையாத ஒன்று கும். ஒரு முகமான கருத்து உருவாவதற்கு அனைவருக்கும் ஏற்புடைய பொருள் விளக்கம் ஒன்றை வகுத்து விட்டால் மட்டும் போதாது: அந்தப் பொருள்விளக்கம் நடைமுறை சாத்தியமானதாகவும் (Practicable) அமைய வேண்டும். நடைமுறையில் சாதிக்க இயலாத வகையில் அமைந்த எந்தப் பொருள் விளக்கமும் பொருளற்ற தாகவே முடியும். எனவே நலப் பொருளியலின் பொருள் விளக் கத்தில் என்னென்ன குறிப்பிட்ட திருத்தங்களைச் செய்யலாம் என் பது குறித்துக் கோட்பாட்டுப் பொருளிய லறிஞர்கள் இதுகாறும் இடையறாது ஆலோசனைகள் கூறி வந்துள்ளார்கள். அந்த அளவுக்குக் கடந்த ஐந்து நூற்றாண்டுகளில் நலப்பொருளியலின் உட்பொரு ளும், நோக்கெல்லையும் (Scope) உருவாவதற்கு அவர்கள் பெருந் தொண்டாற்றியிருக்கிறார்கள்.

நலத்தின் உட்பொருள் குறித்து விருப்பு வெறுப்பற்ற நிலையில் ஒருவகை உடன்பாட்டிற்கு வருவது இன்றியமையாத தாகும். எவ்வகை ஆய்வின் இறுதியிலும் அறவியலின் (Ethics) ஒரு பிரிவே பொருளியல் என்ற முடிவுதான் ஏற்படும். எனினும், அறவியல்

நோக்கில் மதிப்பு (Value) அல்லது நலத்திற்கு (Welfare) உண்மையான உட்பொருள் (Objective content) ஒன்றைக் காணமுடியாத நிலையில், அறவியல் மதிப்போடு பொருளியல் மதிப்பைத் தொடர்பு படுத்துவது எளிதாக இல்லை. இறுதியாகப் பார்க்கும்பொழுது அறவியல் மதிப்புகள் அனைத்தும் அழகியல் சார்ந்ததாகவும் (Aesthetic) தனியொருவரை நோக்கியதாகவும் (Personal) அமைந்து விடுகின்றன. இத்தகைய உண்மைத் தரம் (objective standard) ஒன்றைக் காண ஹாப்சன் (Hobson) ஒரு முயற்சி மேற்கொண்டார். ஆனால் 'சமூக மதிப்புகளின் பழைய மறைபொருளைத் (Mysticism)' தவிர்த்துவிட வேண்டும் என்ற ஆர்வத்தில், ஏதாவது தரமுறையை (Standardisation) வகுக்க வேண்டிய அவசியத்திற்கும், சுதந்திரம் ஆளுமை இவற்றை விட்டுக் கொடுக்காமலிருப்பதற்காக அவ்வாறு செய்வதைத் தவிர்க்கும் முயற்சிக்கும் இடையில் அவர் வசமாகிக் கொண்டதால், அவர் தம் முயற்சியில் பெருந்தோல்வி கண்டார்.

ஆயினும், நலக்கோட்பாட்டுக்கு ஓரளவு உண்மையான உட்பொருளை வகுப்பது முற்றிலும் இயலாத காரியமன்று. நலத்தின் பொருள், உட்பொருள் குறித்து நியாயமான அளவு உடன்பாடான கருத்து உருவாவதைப் பொருத்தே பொருளியல், நலப்பொருளியல் இவற்றின் நோக்கங்கள் மனித நலத்திற்கு நடைமுறை வழிகாட்டியாக அமையும்.

### பிகோவின் பொருள் விளக்கம்:

'நலம் என்பது மிக விரிந்த எல்லையையுடையது' என்கிறார் பிகோ. நலத்தின் கூறுகள் (elements) என்பவை உணர்வின் (Consciousness) நிலைகளும் அவற்றின் உறவுகளும் (Relations) ஆகும். அதைப் பெருமை (Greater) அல்லது சிறுமை (less) என்னும் தெளிவிலக்கணத்தின் (Category) கீழ்க் கொணரலாம் என்பதும் அவருருடைய கருத்து. ஆனால், இத்தகைய கோட்பாடு அவருக்கு மனநிறைவைத் தரவில்லை. ஏனெனில் 'இதன் கரரணங்களைப் பகுப்பாய்வு செய்வது கட்டுக் கடங்காததாகவும், நடைமுறை சாத்தியமற்றதாகவும் அமையும்'. ஆகவே, அறவியல் முறைகளைத் தமக்குப் பாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் அவர் நலத்தின் நுதல் பொருளை (Subject matter) மறு வரையறை செய்துகொண்டார். இவ்வாறு விஞ்ஞான முறைப்படி வரையறை செய்து கொள்வதற்குரிய கருவியாக அவர் சமூக வாழ்வில் கிடைக்கக் கூடியதாகிய பணத்தை அவர் தேர்ந்தெடுத்துக் கொண்டார். இதன் மூலம் பணத்தின் மூலமான நேரடியான அல்லது மறைமுகமான

அளவீட்டின்அடிப்படையில் மாறுத லடையக்கூடிய சமூக நலத்தின் ஒரு பகுதியாகச் 'சமமதிப்பு' (Equity) வரையறுக்கப்பட்டது. இவ்வாறு வரையறுத்த பகுதியையே பிகோ பொருள் நலம் (Economic-Welfare) என அழைத்தார்.

பிகோவின் 'பொருள் நலம்' (The Economic Welfare) என்ற நூல் வெளிவந்து பல்லாண்டுகள் கழிந்த பின்னரும் பொதுமைக் கொள்கையாக்கம் (Conceptualization) அவர் மனத்தை அலைக் கழித்துக் கொண்டேயிருந்தது. அவர் தமது இறுதிக் கட்டுரையில், 'ஒரு தனி நபரின் பொருள் நலம் என்பது அவருடைய மனநிலை அல்லது உணர்வு நிலையில் எவ்வாருே குடிகொண்டிருக்கிறது. ஒரு மனிதனின் வருமானம் அல்லது உடைமையாகக் (Possession) கருதப்படும் பொருள் நல (Material Welfare) வளமானது நலத்திற்குரிய ஒரு வழிவகையாக இருக்கலாமேயன்றி, அதுவே நலமாகி விடாது. பொருள்நல வளமும் நலமும் ஒன்று என நிச்சயமாகக் கூற முடியாது; ஏன், பொருள்நல வளத்தை நலத்தின் ஒருபகுதி என்று கூடச் சொல்ல இயலாது' என்கிருர். மேலும் ஒரு மனிதனுடைய மனத்தின் நன்னிலையையோ அல்லது அம்மனத்தின் நிறைவினையோ (Satisfaction) நலம் குறிப்பதாக எடுத்துக்கொள்ள வேண்டுமென எனக்குத் தோன்றுகிறது. நலம் குறிப்பிடுவது மனத்தின் நிறைவு களேயன்றி மனத்தின் நன்னிலையை அன்று'[1] என்று அவர் கூறியுள்ளார். நலத்தின் காரணங்களைக் (Welfare grounds) கருதி அரசினர் தலையிட வேண்டுமென வன்மையாக வலியுறுத்திய பிகோ, சில சூழ்நிலைகளில் நலக்குறைவான சூழ்நிலைகளை உருவாக்க வேண்டியதும் நியாயமே' என்றும் வற்புறுத்துகிருர். இவ்வாறு தமது நலக் கோட்பாட்டை அவர் மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். ஒரு மனிதனுடைய நலம் அவனுடைய மன நிறைவிலேயே அடங்கியிருக்கிறது; இந்த மன நிறைவு வெறும் மன மகிழ்ச்சியோ உடலின்பமோ அன்று: மனநிறைவைக் குறிப்பிடுவதற்குப் பயன்பாடு (utility) என்னும் சொல்லைப் பிகோ கையாள்கிருர். எனவே, ஒரு மனிதனின் பொருள் நலம் என்பது அவனுடைய பயன்பாடுகளா லானது என்பது தெளிவாகிறது.

நலத்தின் உட்பொருள் பற்றிய பிகோவின்கருத்து, அவருடைய ஆரம்பகால நூல்களில் காணும் கருத்திலிருந்து மாறுதலடைந்திருக்கிறது என்பதை அவருடைய பிற்கால நூல்கள் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. நலத்தை மேம்படுத்துவதற் குரிய எளிய நடை

[1] Pigou A. C: "Some Aspects of Welfare Economics" American Economic Review 1951 p. 288

முறை சாத்தியமான செயல் முறைகளை வகுப்பதே பிகோவின் நோக்கமாக விளங்கியது. 'நலம் என்றால் நன்மையே (good)' என்று அவர் தமது செல்வமும் நலமும்' (Wealth and Welfare) என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். ஆனால் இக்கருத்தை அவர் தமது 'நலப் பொருளியல், என்னும் நூலில் கைவிட்டு விட்டு 'நலம் என்பது விரிந்த எல்லையை உடைய ஒன்று... நலத்தின் கூறுகள் என்பவை உணர்வு நிலைகளும் அவற்றின் உறவுகளும் ஆகும். அந்த நலத்தைப் பெருமை அல்லது சிறுமை என்னும் தெளிவிலக்கணத்தின் கீழ்க் கொண்டு வரலாம்' என்று கூறுகிறார். இதில் மார்ஷலியக் கோட்பாட்டின் செல்வாக்கை உணர முடிகிறது. ஆனால், பிகோ தமது பிற்கால எழுத்துகளில் 'நலம் என்பதும் நன்மை என்பதும் ஒன்றல்ல' என்று எழுதி, நலத்தை நன்மையின் பிடிக்குள் சிக்க விடாமல் செய்திருக்கிறார்.

### கேம்பிரிட்ஜ் கோட்பாடு

பொருள்நலம் பற்றிய பிகோவின் கோட்பாடே சிறிதுகாலம் வரைக் கேம்பிரிட்ஜ் சிந்தனையாளர்களிடையே செல்வாக்குப்பெற்றிருந்தது. இதைப் பொருள் நலம் குறித்து அறிஞர் ராபர்ட்சன் (Robertson) கூறியுள்ள விளக்கத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம். பயன்பாடு பற்றிய திறனாய்வுத் தொடர் சொற்பொழிவு ஒன்றில் அவர் கூறிய கருத்துகள், பிகோவின் கருத்துகளுக்கு மாறானவையாகத் தோன்றவில்லை. பொருளியலின் நுதல்பொருளானது பொருள் நலமே என்று ராபர்ட்சன் திட்டவட்டமாகக் கூறுகிறார். பொருள் நலத்தில் உற்பத்தியும் (Production), பகிர்வும் (Distribution) ஏற்படுத்தும் விளைவுகளைக் கண்டுபிடிக்கும் வகையில், அவ்விரண்டினையும் ஆராயவேண்டுமென அவர் கருதுகிறார். பிகோவைப் போலவே அவரும் பொருள் நலத்தை முழுமையான நலத்தின் ஒரு பகுதி என்றே ஒப்புக்கொள்கிறார். இவ்விரண்டுக்கு மிடையில் ஒத்திசைவுகள் (Harmonies) உண்டென்பதை ஏற்றுக்கொள்கிறார். ஆனால், ஒன்றை மேம்படுத்தும் காரணி, மற்றொன்றையும் மேம்படுத்துகிறது என்னும் கருத்தை அவர் விடாமல் கைக்கொள்கிறார். அறவியல் (Ethics), உணர்ச்சியூக்கம் (Emotiveness) இவற்றினால் பொருள் நலம் என்ற சொற்றொடர் பருமனடைகிறது என்ற கருத்தை அகற்றுவதற்காக, ராபர்ட்சன் 'Ecfare'[2] என்ற புதிய சொல்லைக் கையாள்கிறார்.

### பாரிட்டோ வழிக் கருத்து

மதிப்புடைய எல்லாவற்றோடும் பொருள் நலத்தைப் பிணைத்து அதை வரையறை செய்வது, பொருள் நலத்தை அனுவசியமாகக்

[2] Robertson, D. H: Utility and All That (London, 1952) p 30)

கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவருவதாகும் என்று அறிஞர் ஹிக்ஸ் கருதுகிறார். பொதுநலத்தின் ஒருபகுதியே பொருள் நலம் என்றும், அதுவே பொருளியல் வாதியின் கவனத்தில் இருக்க வேண்டு மெனவும் பிகோ கருதுகிறார். ஆனால், சமூக நன்மையைப் (Social good) பல பகுதிகளாகப் பகுக்க இயலாது எனத் தத்துவவாதி கூறும்பொழுது தொல்லை ஆரம்பமாகி விடுகிறது. எனினும் இந்தப் பகுப்பு ஆழமாக - மிக ஆழமாகப் புதைந்து விட்டது'[3] என்று ஹிக்ஸ் கூறுகிறார்.

பிகோவைக் காட்டிலும் விரிவான பரப்பில் பொருள் நலத்தைச் சித்தரித்து காட்டுவதற்கு ஹிக்ஸ் விரும்புகிறார். 'இதைவிடக் விரிவான ஒன்றாகப் பொருள் நலத்தை எண்ணிப் பார்க்க முடியும்' என்று அவர் கருதுகிறார். ஆகவே, பொருள்கள் ஊழியங்கள் (Services) இவற்றின் பணமதிப்பில் முழுமையாக அடங்காத உபரிகள் (Surpluses), முயற்சிகள் (Efforts) சேமிப்புகள் (Savings) ஆகிய அகவிலைக் கூறுகளையும், (Subjeciive elements) உள்ளடக்கும் வகையில் அவர் பொருள்நலத்திற்குப் பொருள்விளக்கம் கூறினார். இதன் மூலம், 'பணமாகிய அளவுகோலுடன் மறைமுகமாகத் தொடர்பு படுத்தக் கூடிய அம்சங்களையும் அவர் இப்பொருள் விளக்கத்தில் சேர்த்தார். இவ்வாறு விரிவு படுத்திய பின்னரும், பொருளியல் வாழ்வின் குறிக்கோள்கள் (Ends) பொருளியலுள்ளேயே இருக்கின்றது' என்ற பொருள்நலத் தத்துவத்தின் (Economic Welfarism) சிறப்பான அம்சம் உருக்குலையாமல் அப்படியே இருக்கிறது. பொது நலத்திற்கும் பொருள் நலத்திற்கும் இடையிலான முரண்பாடு (Dis-harmony) பற்றிய சிக்கலையும் ஹிக்ஸ் தீர்த்து வைக்கிறார். 'பொருளியல் காரணங்களுக்காக ஒரு குறிப்பிட்ட செயல்முறையைத் தாம் பரிந்துரைத்ததாகப் பொருளியல்வாதி நிரூபித்து விட்டாரானால், அத்துடன் அவர்தம் பணியே முடித்து விட்டதாகக் கருதலாம்' என்கிறார் ஹிக்ஸ்.

ஹிக்ஸ் வகுத்த கோட்பாட்டு அமைப்பைப் பின்பற்றிப் பொருளியல்வாதிகள் சிலர் தங்கள் செயல்முறைகளை வகுத்துக் கொண்டார்கள். இவர்கள் தங்களைப் புதிய நலப்பொருளியல் வாதிகள் (New Welfare Ecconomists) எனக் கூறிக் கொண்டார்கள். இவர்களில் ஒருவராகிய அறிஞர் ரெடர் (Reder) என்பார்" பொருளியல் கொள்கைகளுக்கென ஒழுங்குமுறை தெளிவிலக்கணங்களை (Cretiria of Propriety) வகுத்து அதைச் செயல் முறையில் பயன்

[3] Hicks, J. R: Essays in World Economics (Oxford. 1959) p ix

படுத்தும் முயற்சியே நலப் பொருளியல்'[4] எனக் கருதினர். இக் கருத்து பெரும்பான்மையோர் கூறிய பொருள் விளக்கத்தை யொட்டிய 'தயாகும். சிக்கலைக் கையாள்வதற்கு, நேரடியாகவே நலத்திற்கு உட்பொருளை வழங்குவது பாரீட்டோ வழிச் சிந்தனை யாளர்கள் கையாண்ட முறையாகும். ஆனால், இந்தப் புதிய குழாத்தைச் சேர்ந்தவர்கள் அவ்வாறு நேரடியாக நலத்திற்கு உட்பொருள் கொள்ள முயலவில்லை. நலத்தை உயர்த்தும் அல்லது குறைக்கும் ஒரு நலக் குறியீட்டை (Welfare Indicater) விளக்குவதற்கே அவர்கள் முயல்கிறார்கள். அவர்கள் குறிப்பிடும் இந்தக் குறியீடு இதுதான்: வேறு எந்த ஒரு தனி நபரும் குறைவாக அல்லது, அதிகமாக மனநிறைவு கொள்ளாத வகையில் தனிப்பட்டவர் அல்லது பலரின் மனநிறைவு கூடுதலோ குறைவோ ஆகும்பொழுது நலம் உயர்கிறது அல்லது குறைகிறது என்று சொல்ல வேண்டும்.' இக்கருத்தே ஹிக்ஸ், ஹோட்டலிங், கால்டார், லாங்கே, லெர்னர், சைட்டோவஸ்கி ஆகிய அனைவ ருடைய எழுத்துகளிலும் இழையோடுகின்றது.

புதிய நலப் பொருளியல் வாதிகளின் இந்தப் பொதுவான பொருள் விளக்கம், நட்ட ஈட்டுத் தத்துவத்தின் (compensation principle) மூலம் நிரூபிக்கப்பட்டுள்ளது. நட்ட ஈட்டுத் தத்துவம், நலப் பொருளியலைத் தேக்க நிலையிலிருந்து தூக்கிவிடுகிறது. ஆனால் அதன் தெளிவிலக்கணம் எவருக்கும் தீங்கு செய்யாத ஒரு சில கொள்கைகளுக்கு மட்டுமே பொருந்துவதாக இருக்கும்.

இவ்வாறு இருவேறு கொள்கைகள் தெள்ளத் தெளிவாக உரு வாகின்றன. 'நலம் என்பது உணர்வின் நிலைகளே' எனக் கூறிய பிகோவின் காலம் வரையிலும், பொருளியல் வாதிகளின் வாதம் எல்லாம் அகநிலை (subjective) சார்ந்ததாகவே இருந்தது. புதிய நலப் பொருளியல் வாதிகள் தோன்றித், தனி நபர்களின் தேர்வு களோடு (individual choices) நலத்தைத் தொடர்பு படுத்தத் தொடங்கியதும், ஒருவகைத் தற்சார்பின்மை (element of objectivity) தோன்றலாயிற்று. ஒரு நபரின் நல வரைபடமும் (welfare map), விருப்பத்தேர்வு வரைபடமும் (Preference map) ஒன்றுதான் என்பது அவர்கள் கருத்து.[5] ஒரு குழாமின் நலம் மாறாமலிருக்க, அக்குழாத்தைச் சேர்ந்த ஒரு நபரின் நலம் உயரு மானாலும் சமுதாய நலத்தில் உயர்வு ஏற்படும்' என்பது பாரீட்டோ

[4] Reder M. W: Studiel in the Theory of Welfare (New York 1947) p 13

[5] Graaf J. de-V: Theoretical Welfare Economics (London 1957) p 5

வகுத்த நிபந்தனை. இந்த நிபந்தனைக்கு உட்பட்டதாக நலத்தை ஆராய்வதுடன் அறிஞர் கிராப் (Graaf) நிறுத்திக்கொள்கிறுர்.

ஒரு தனி நபர், ஒரு சம நோக்குக் கோட்டிற்கு (Indifference curve) உயர்வாராஞல், அதாவது, அவருடைய தேர்வு வாய்ப்பு களைப் பெருக்குவாராஞல், அப்பொழுது அவருடைய நலம் உயர் கிறது என்று புதிய நலப் பொருளியல் வாதிகள் கருதுகிறுர்கள். ஒரு தனி நபரின் சொந்த மேம்பாட்டை மதிப்பிடுவதற்கு அவரே சிறந்த நீதிபதி என்பது இதனுல் புலஞகிறது. அவருடைய நலத்தைக் காட்டும் குறியீடாக (Index) அவருடைய விருப்பத் தேர்வு எல்லையைக் (preference field) கருதுவது பொருத்தமற்றதாக அமையும். எல்லாத் தனிநபர் நலங்களின் கூட்டுத் தொகையாகக் கூறக்கூடிய பெர்க்சோனியன்) சமூக நலச் சார்பலன் (Bergsonian social welfare function) ஒன்றை அறிஞர் பெர்க்சன் வகுத்தார்.[6] இதன் மூலம் இவ்வாராய்ச்சி மேலும் முன்னேறியது. 'ஒரு சமுதா யத்தில் எவருடைய நிலையும் தாழ்வடையாத வகையில், யாரேனும் ஒருவருடைய நிலை உயர்வடையுமெனில், அப்பொழுது அந்தச் சமுதாயம் முழுவதுமே ஓரளவு மேம்பாடு அடைந்ததாகவே கொள்ள வேண்டும்' என்னும் அறவியல் கொள்கை திட்டவட்டமாக உருவாகியது இந்தச் சார்பலனின் பயனேயாகும்.

சமூக நலச் சார்பலனுக்கு மேலும் சில நிபந்தனைகளை கென்னத் ஆரோ (Kenneth Arrow)[7] என்னும் அறிஞர் வகுத்தார். அவ ருடைய கருத்துப்படி, நலப் பொருளியல் வாதிகளை எதிர்நோக்கும் முக்கிய சிக்கல்கள்: (1) சமுதாய நலத்தை உயர்த்துதல் அல்லது உச்சநிலைக்குக் கொண்டு செல்லுதல்; (2) உத்தமச் சூழ்நிலைகளைத் (optimun conditions) திட்டவட்டமாக வகுத்துக் கூறுதல்; (3) நிறைவுப் போட்டியின் (Perfect competition) செயல் முறைகளி லிருந்து எவ்வெப்போது இச் சூழ்நிலைகள் மாறுபடுகின்றன என்ப தைக் கூறுதல். (இந்த அம்சத்தில், அவர் பிகோவின் நிலையிலிருந்து அதிகமான முன்னேற்றம் எதையும் கண்டு விடவில்லை); (4) மேற் குறிப்பிட்ட முதலிரண்டிஞலும் நடைபெறும் பொருளியல் கொள்கையில் ஏற்படும் விளைவுகளைக் குறிப்பிடுதல்; இறுதியாக முதலாளித்துவம் (capitalism), சோசலிசம் என்ற இரண்டு கொள்கைகளில் எதைத் தேர்ந்தெடுப்பது என்று தீர்மானித்தல்.

6 Bergson, A. "A Reformulation of Welfare Economics" Quarterly Jonrnal of Economics Vol. LII 1937-38.

7 Arrow K.J: 'Little's critique of We fare Economics' American Economic Review 1951 p. 923

பெர்க்சனின் சமூக நலச் சார்பலன்களை ஆஸ்கார் லாங்கே³ நடைமுறையில் பயன்படுத்தியிருப்பதைக் காணலாம். அனுபவ நோக்கத்தின் வாயிலாகப் பற்றுக்குறையான செல்வாதாரங்களின் (scarce resources) நிருவாகத்தைச் சில சமூகக் குறிக்கோள்களின் அடிப்படையில் மதிப்பிட முடியும். இதிலிருந்து, பற்றுக்குறைச் செல்வாதாரங்களைப் பயன்படுத்துவதற்குரிய சில விதிமுறைகளையும் வகுக்கலாம். இவ்விதிமுறைகள் சமூகக் குறிக்கோள்களை அடைவ தற்கு மிகவும் துணையாக இருக்கக்கூடியவை. இத்தகைய பயனை 'உன்னதப் பயன்' (ideal use) என்பார்கள். செல்வாதாரங்களை நடைமுறையில் பயன்படுத்துவதை மதிப்பிடுவதற் குரிய ஒரு திட்ட அளவை (standard) இவை அளிக்கின்றன. உன்னதப் பயனுக்கு நெருக்கமாக நடைமுறைப் பயனைக் கொணரும் வகையில் இரு முறைகளை ஒப்பிட்டுப் பார்க்கலாம். இந்த ஒப்பீடு, நலப் பொரு ளியலுக்குரிய நுதல் பொருளைத் தருவதாக லாங்கே கருதுகிறார். இதை அவர் தரஞ்சூழ் பொருளியல் (Normative economics) அல்லது சமூகப் பொருளியல் (social economics) என்று சொல் கிறார். விரும்பிய சமூகக் குறிக்கோள்களை அடையும் வகையில் செல்வாதாரங்களை உன்னதமான முறையில் பயன்படுத்துவதற் குரிய விதி முறைகள், ஒரு தனிவகைப் பொருளியல் விதிகளாக ஆகின்றன. இவ்வாறாக, கோட்பாட்டுப் பொருளியலின் (Theorical economics) ஒரு துணைப் பிரிவாக நலப் பொருளியலை இணைத்துக் கொள்வதற்கு வசதி ஏற்பட்டது.

### பொருள் நலமும் வாழ்க்கைத் தரமும்:

பொருள் நலத்திற்கு மேற்குறிப்பிட்ட அறிஞர்கள் பலவகைப் பொருள் விளக்கங்கள் கூறியுள்ள போதிலும் அவர்கள் வாழ்க்கைத் தரத்துடன் பொருள் நலத்தை இணைத்துள்ளார்கள் என்றே பொது வாகக் கொள்ள வேண்டியிருக்கிறது. உண்மையான நுகர்வானது (actual consumption) வாழ்வின் நடைமுறை நிலையைக் குறிக்கிறது; அதே சமயம் வாழ்க்கைத்தரமோ நாம் எத்துணை அளவு நுகர விரும்புகிறோம் என்பதைக் குறிக்கிறது. நாம் எத்துணை அளவு நுகர விரும்புகிறோம் என்பதைக் குறிக்கக் கூடியதாக வாழ்க்கைத் தரத் தைக் கொண்டோமானால், அப்பொழுது அது முன்னேற்றக் கோட் பாட்டின்' (Theory of progress) ஒரு பகுதியாகிறது. தேவைகளை யும் (Wants) அதன் நிறைவினையும் (Satisfaction) பொருளியலின் முக்கிய அங்கமாக ஆக்கிய பெருமை அறிஞர் மார்ஷலைச் சேரும். 'அவருடைய தேவைகள் பற்றிய விஞ்ஞானம், அவருடைய

³ Lange, Oscar: 'The Scope and Method of Economics' Studies 1945 46 p 16

முயற்சிகள் பற்றிய விஞ்ஞானத்திற்குத் துணையாக அமைந்துள்ளது. மார்ஷலின் தேவைகள் குறித்த கொள்கையில் திறமையான வாழ்க்கை முறையும், முக்கியமாக நுகர்வோர் உபரியும் (consumer's surplus) அடங்கியுள்ளன. இவை செல்வத்தையும் மனிதனையும் பற்றி அவருடைய ஆராய்ச்சிகளில் தலையாயவைகள் எனலாம். மார்ஷலின் கருத்துப்படி, வாழ்க்கைத் தரமானது மனிதனிடமே காணப்படுகிறதேயன்றி, அவன் ஏற்படுத்தியுள்ள நிறுவனங்களில் அன்று. இக் கருத்து, ஆடம் ஸ்மித், ஜே. எஸ். மில் ஆகிய தொன்மைப் பொருளியல்வாதிகளின் கருத்தோடு ஒப்புமையுடையது. அவர்கள் வாழ்க்கைத் தரமானது மனிதனிடமே உள்ளது. அவனுடைய கூட்டுப் பிரதிநிதித்துவங்களில் அன்று' என்று கருதாதீர்கள். அவர்களுடைய தலையிடாமைக் கோட்பாட்டின் (laissez faire doctrine) அடிப்படையில் பார்க்கும்போது இக் கருத்து நியாயமானதேயாகும். இத் தொன்மைக் கருத்தையே மார்ஷலும் கொண்டிருந்த போதிலும், அவர் இக் கொள்கையை விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டிருக்கவில்லை.

பொருள் நலத்தை வருமானத்துடன் தொடர்பு படுத்தி ஆராய்ச்சி நடத்திய அறிஞர் ஸ்டர்மி (Sturmey) என்பாரும் அதே போன்ற, ஆனால் அதைவிட உறுதியானதொரு நிலையை மேற்கொள்கிறார். நாம் அனுபவிக்கும் எல்லாம் ஒன்று சேர்ந்ததுதான் மொத்த நலம் (Total Welfare) என்பதாகும். மொத்த நலத்தை அங்கம் அங்கமாகப் பகுக்க இயலாது என்றாலும், தனி நபர்கள் விரும்புகின்ற மனமகிழ்ச்சியில் (Happiness) பெரும்பகுதி பணத்தினால் வாங்கக்கூடிய பொருள்களின் வாயிலாகக் கிடைப்பதேயாகும்: ஆனால் வாழ்க்கைத்தரம் பற்றிய அவருடைய கோட்பாடு சற்று விரிவான போக்குடையதாகும். அவருடைய கொள்கைப்படி வாழ்க்கைத் தரம் என்பது ஒருவருடைய வருமானத்தின் மூலமாக வாங்கக்கூடிய பொருள்களின் எண்ணிக்கை மட்டுமல்ல; அதில் சமூக வாயிலாகக் கிடைக்கும் ஊழியங்களும் (Socially provided services)[9] அடங்கும். எனவே, ஒரு தனி நபர் பணத்தைக் கொண்டு வாங்கும் எல்லாப் பொருள்களும், அரசாங்கத்தின் மூலமாக அவருக்குக் கிடைக்கக்கூடிய வசதிகளும் ஒன்றுசேர்ந்ததுதான் பொருள் நலமாகிறது''. தனி நபர் அல்லது சமுதாயம் மொத்தமாகப் பெறும் பொருள் நலத்தின் குறியீடுதான் வருமானம் என்பதாகும்.

பிகோவின் கொள்கையிலிருந்து தொடங்கிப் பார்க்கும் பொழுது, நாம் வெகுகாலம் சென்று விட்டதாகத் தோன்றினாலும்,

[9] Sturmey: Income and Welfare (London, 1959) p. 2

இறுதியில் நாம் பிகோவின் கூடாரத்தினுள்ளேயே இன்னும் உலாவிக் கொண்டிருப்பதைத்தான் காண்கிறோம். பத்தொன்பதாம் நூற்றுண்டு தொடங்கியது முதல், நலம்பற்றிய பொருளியல்வாதிகளின் கருத்து ஒரு முழு வட்டத்தை அடைந்திருக்கிறது என்று அறிஞர் ஸ்டிக்லர்[10] (Stigler) கூறியுள்ள கருத்து மிகவும் பொருத்தமானதாகும்.

நலப் பொருளியலின் வளர்ச்சி பற்றி மதிப்பீடு செய்த அறிஞர் போல்டிங் (Boulding), நலத்தின் உட்பொருள் இன்னும் தன்னை அலைக்கழிப்பதாகவே கருதுகின்றுர். 'பொருளியலின் பொருளை வரையறை செய்வது எந்த அளவுக்குச் சங்கடமானதோ அதே அளவுக்கு எல்லைகளை வரையறை செய்வதும் கடினமாக இருக்கிறது'[11] என்று அவர் வருந்துகிறுர். நலப் பொருளியல் எது? எது நலப் பொருளியல் அல்லாதது? என்ற பாகுபாடு இன்னும் தெளிவாகத் தெரியவில்லை. தத்துவ விவகாரங்களை எழுப்புவதும் மதிப்பீட்டுத் திட்ட அளவுகளை (Standards of judgment) உண்டாக்கக் கூடியதுமான பொருளியல் கொள்கை பற்றி எல்லா விவாதங்களையும் நலப்பொருளியலில் உள்ளடக்கலாமா? அல்லது ஒரு சமூக உத்தமச் (Social optimum) சூழ்நிலைகளைப் பற்றிய மிக நுட்பமான விவாதம் என்ற அளவில் அதைச் சுருக்கிக் கொள்ளலாமா? என்பது விடை காண முடியாதவைகளாகவே நீடிக்கின்றன.

உணர்வைத் தூண்டும் முக்கியத்துவ நிலையிலிருந்து (Emotive Significance) பொருளியல் விஞ்ஞானம் இன்னும் தன்னை விடுவித்துக் கொள்ளவில்லை என்பது அறிஞர் ஐ. எம். டி. லிட்டில் என்பாரின் கருத்து. நலப் பொருளியலைக் கோட்பாட்டு முறையில் உருவாக்கப் படுத்துவதில் கண்டுள்ள முன்னேற்றம் அவருக்கு நம்பிக்கையூட்டவில்லை. 'நலத்தில் ஓர் உயர்வை அல்லது மாறுதலை உண்டாக்கும் கோட்பாடு விரும்பத் தக்கதுதான்; ஏனெனில் தனி நபர் மனமகிழ்ச்சிக்குச் சாதகமான, பொருளியல் மாறுதலை அது குறிக்கின்றது. ஆனல், 'சமுதாயம் நலம்' (Welfare of the Community) என்ற சொல்லும் தெளிவானதாகவோ திட்டமானதாகவோ இல்லை. நலப் பொருளியல் என்ற சொற்றொடர் மிகச் சாதாரணமாகவும் வரம்பின்றியும் பயன்படுத்தப்படுவதாக அவர் கூறுகிறுர். நலப் பொருளியலுக்குப் 'போதிய அளவு செயல் இல்லை' (Sufficiant coverage): இருந்த போதிலும் மக்கள் உணர்ச்சியைத் தூண்டிவிடுவதைத்தவிரப் பொருளியலில் அதற்குத் திட்டவட்டமான, பெரும்பாலோர் ஏற்றுக்கொள்ளக்கூடிய இடமோ அலுவலோ எப்போதும்

[10] Stigler G. J: "New Welfare Economics" American Economic Review 1943, p. 345

[11] Boulding K E. Welfare Economicl in Survey of Contemporary Economics Ed. by Haley, R. (New York 1952) p 1

ஏற்பட்டதில்லை[12]. அறவியலோடு (Ethics) நலப் பொருளியலுக்கு இருந்துவரும் நெருங்கிய உறவு (affinity) காரணமாக நாம் எதிர் பார்க்கும் விஞ்ஞானத் தராதரங்களின் நிலைக்கு உயர்வதற்கு முடியாத நிலையில் நலப் பொருளியல் உள்ளது. இந் நிலையிலிருந்து விடுபடுவதற் குரிய ஒரே வழி, இன்று நிலவி வரும் அறவியல் கருத்தின் அடிப்படையில் பெரும்பாலான மக்கள் ஏற்றுக்கொள் ளத் தக்கதொரு தெளிவிலக்கணத்தை வகுப்பதேயாகும் என்றே லிட்டில் கூறியுள்ளார்.

## பிகோவின் பொருள் விளக்கத்தில் காணும் குறை :

பொருளியல்மனிதனை (Economic man) மையமாகக் கொண்டு தான் பொருளியல்விஞ்ஞானம் இயங்குகிறது என்ற கருத்து உயர்ந்த குறிக்கோள்களைக் கொண்ட பிகோவுக்கு ஏற்புடைய தாக இல்லை. இந்தப் பொருளியல் மனிதன் இரு முக்கிய இயல்பு களை உடையவன்: முதலாவது-மற்றவர்களுக்கு நேர்கின்றவற்றினால் அவன் பாதிக்கப்படுவதில்லை. இரண்டாவதாக-பொருளியல் நட வடிக்கையின் முடிவானது சந்தைக்கு விற்பனைக்கு வரும் உற்பத்திப் பொருள்களின் அளவை மட்டுமே முழுவதும் நம்பியதாக இருக் கிறது. முதல் இயல்பின் மறுதலையாகப் புறச் சிக்கனங்கள் (External economics) விளங்குவதை பிகோ ஒப்புக் கொள்கிறார். ஆனாலும் விற்பனைக்குரிய உற்பத்திப் பொருள் மட்டுமே உள்ளதாக விடாப் பிடியாகக் கருதுகிறார். இந்த வகையில் 'பொருளியல் மனிதன் என் னும் கோட்பாட்டிலிருந்து தன்னை முழுமையாக விடுவித்துக் கொள் வதற்கு'[12] பிகோவினுடைய நலப் பொருளியல் தவறிவிடுகிறது.

பிகோவின் பொருள் விளக்கத்தைக் கண்டிக்கும் தபாஸ் மஜும்தார் (Tapes Majumdar) அடிப்படையான மூன்று மறுப்புரை களைத் (objections) தெரிவிக்கிறார். முதலாவதாக-நிறைவை (Satis faction) மிகுதி (Greater) அல்லது குறைவு (less) என்ற தெளி விலக்கணத்தின்கீழ் கொண்டு வரலாம்' என்பதை அவர் மறுக்கிறார். 'இதைத் தவறான எண்ணத்தைத் தோற்றுவிப்பதாகக்கூற முடியா விட்டாலும் அவசரப்பட்ட (premature) முடிவு என்றே சொல்ல வேண்டும்'[3] என்கிறார். இருவேறு பொருள்களினால் கிடைக்கும் மனமகிழ்ச்சிகள் (Enjoyments) இரண்டும் வெவ்வேறு வகை யானவை. அவை இரண்டையும் ஒப்பிட்டுப் பார்க்கக் கூடாது என்பது மஜும்தாரின் கருத்து. ஆனால், ஆராய்ச்சியாளர்கள் வகுத் துள்ள விரிவான உபாயங்கள் (Devices) காரணமாக இது போன்ற

[12] Majumdar, T: Measurement of Utility (London 1958) p. 4

தொரு வரையறுத்த எடுகோளை (Assumption) வகுக்காத வரையில் ஒருவகைக் கோட்பாட்டை வகுப்பதென்பது இயலாத காரியமாகும். எனவே, இப்போதுள்ள நிலையில், மார்ஷலின் நுகர்வோர் உபரித் தத்துத்வத்தின் துணையைப் பெற்றுள்ள பிகோவின் அனுமானத் தையே பாதுகாப்பானதொரு கருதுகோளாகக் (premise) கொண்டு மேற்செல்ல வேண்டியிருக்கிறது.

இரண்டாவதாக - பொருள் நலத்தைக் குறிக்கும் ஆக்க அம்சங் களாக உண்மையான நிகர வருமானத்தின் ஆதாரங்களைக் கருது வதை எதிர்க்கிறார். அந்த வருமானத்தின் பகிர்வு பற்றிய சிக்கலை பிகோ கவனிக்காமல் விட்டு விட்டார் என்று இதற்குக் காரணம் கூறுகிறார். ஆனால், மறுபகிர்வு (Redistribution) பற்றிய பின் அத்தியாயங்களைக் கவனமாக ஆராய்ந்தால், இந்தக் குறிப்பிட்ட சிக்கல் குறித்தும் அவர் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம்.

மூன்றாவதாக - தேசிய வருமானத்தின் நுகர்வு, உற்பத்தி ஆகிய இரண்டின் அடிப்படையில் மட்டுமே ஆராயக்கூடிய ஒரு குறுகிய துறையாக நலப் பொருளியலைக் கொள்வதற்கும் எதிர்ப்புத் தெரி விக்கிறார். உற்பத்திச் செயல்முறையும் (Productivity activity) பொருளியல்செயல் முறையும் ஒன்றே எனப் பிகோ கருதியதே இத் தகைய குறுகிய கருத்து உண்டாகக் காரணம் என அவர் கருதுகிறார். இந்த மறுப்பு ஒரு தனி மறுப்புரையன்று. அவருடைய இரண்டாவது மறுப்புரையிலேயே இது அடங்கியிருக்கிறது. உற்பத்தி, நுகர்வு, பகிர்வு என்ற மூன்று தனித்தனிச் செயல்களும் பொருளியல் நடவடிக்கையில் (Economic activity) அடங்கும். ஆனால் அவை மூன்று தனித்தனி அளவுகளைக் (Magnitudes) குறிப்பன அல்ல. அதாவது உற்பத்தி செய்தல், பகிர்தல், நுகர்தல் எல்லாம் மறு பகிர்விற்கே வழி வகுக்கின்றன. எனவே மஜூம்தாரின் மூன்றாவது மறுப்பை, பிகோவிற்கு எதிரான முக்கிய மறுப்பாகக் கொள்ள முடியாது.

## வெவ்வேறு பொருள் விளக்கத்திற்கேற்ப வெவ்வேறு அணுகு நெறிகள்

### மூவகைக் கோட்பாடுகள்

பொருள் நலத்தின் உட்பொருள் பற்றிய அடிப்படைக் கோட் பாடுகளுக்கு ஏற்ப மூன்று வகையான தனித்தனிச் சிந்தனைகள் உருவாகியுள்ளன. முதலாவது பிகோவின் கோட்பாடு. இக் கோட்பாடு தேசிய வருவாயின் (National dividend) மூலம் அள விடக்கூடிய அளபுடைத் தன்மை (cardinality) நலத்திற்கு அளிக்

கிறது. மேலும், போட்டி நிலைமையின் கீழ், உச்சநிலை நிறைவுக் கோட்பாட்டைப் பற்றி மார்ஷல் சுருக்கமாக விவாதித்து அது பற்றிய ஒரு சுருக்கமான பகுப்பாய்வை வெளியிட்டார். ஆனால், உச்ச அளவு மனமகிழ்ச்சிக் (Maximum happiness) கோட்பாட்டை வெளியிட்டவர் பெந்த்தாம் (Bentham) ஆவார். பத்தொன்பதாம் நூற்றாண்டில், ஆங்கில அரசியல் பொருளியலில் (English Political Economy) பெந்த்தாம் பெரும் சாதனை எதையும் புரிந்துவிடவில்லை. எல்லாக் காலத்திலும், எல்லாப் புலனறிவாலும் (Sentience) உண்டாகிய மன மகிழ்ச்சி முழுவதையும் இயன்ற அளவு ஒட்டு மொத்தமாகக் கணக்கிடுவதற்குரிய முறை ஒன்றை வகுக்கும்படி மட்டுமே அவர் பொருளியல் வாதிகளைக் கேட்டுக்கொண்டார். ஆனால், உச்சஅளவு மனநிறைவை ஆழமாக ஆராயும் முயற்சியில் அவர் ஈடுபடவில்லை.

மதிப்பு பற்றிய இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட்பாடு (Marginal utility theory) உருவாகிய பின்னர்தான், உச்ச அளவு நிறைவுக் கோட்பாடானது பகுத்தறிவுக்கு ஒத்த ஒழுங்கான உருவத்தைப் பெற்றது. இறங்குமுக இறுதிநிலைப் பயன்பாட்டுக் (Diminishing marginal utility) கொள்கையின் மூலமாக, வருமானச் சமப்பகிர்வு பற்றிய பெந்த்தாமின் கொள்கைக்கு நிருபணம் கிடைத்தது. தடையிலாப் போட்டியினால் (Free competition) உச்ச அளவுச் சமூக மன நிறைவு (Maximum social satisfaction) உண்டாக வழி ஏற்படுகிறது என்னும் கோட்பாடு, அறிஞர் வால்ராஸின் (Walras) பொதுக் கோட்பாட்டினால் மேலும் வலுப் பெற்றது. ஆனால், முதல் குழாமைச் சேர்ந்த ஜெவான்ஸ், சிட்ஜ்விக், மார்ஷல், பிகோ ஆகியோர் வால்ராஸின் பகுப்பாய்வை முழு அளவில் பயன்படுத்திக் கொள்ளவில்லை.

இரண்டாவதாக, மிகுதி அல்லது குறைவு (More or less) என்ற ஒப்பீடுகளுக்கு (Comparisons) வழிசெய்து விட்டு, முழு அளவீட்டிற்கு (Absolute measurability) வழி செய்யாத பொருள் நலப்படிமுறைத்தன்மை (Ordinality) அனுமதிக்கின்ற பாரீட்டோவின் கோட்பாட்டைக் கைக்கொண்டவர்கள் எல்லோரும் பொருளியல் கொள்கைகளைத் தனித்தனியே ஆராயும் அனுபவ ஆராய்ச்சியை மேற்கொண்டார்கள். புதிய நலப்பொருளியல் தொடர்புடைய பொருளியல்வாதிகள் அனைவருமே இந்தச் சிந்தனைக் குழாமைச் சேர்ந்தவர்கள்தாம்.

மூன்றாவதாக, சமூகநலச் சார்பலன் (Social welfare function) வடிவில் பொருள் நலத்தைச் சிந்தித்துப் பார்த்த பொருளியல்

அறிஞர்கள் எல்லோரும், தனியார் சுவாதீனப் பொருளியல் (Individualist economy), போட்டிப் பொருளியல் (Competitive economy) எவ்வாறு செயல்படுகிறது என்பதை ஆராய்ந்தார்கள், இக்குழுவினரின் முன்னோடியாக விளங்கியவர் பெர்க்சன் ஆவார். தொடர்ந்து லெர்னர், லாங்கே, லங்காஸ்டர், ஆரோ முதலியோரும் இக்குழுவில் சேர்ந்தனர். நலப் பொருளியல் பற்றி எழுதிய சில எழுத்தாளர்கள் மேற்குறிப்பிட்ட மூவகைக் கோட்பாடுகளைப் பற்றியும் எழுதினார்கள்; வேறு சிலர் ஏதாவது ஒரு கோட்பாட்டைப் பற்றியே எழுதினார்கள்.

## பொருளியல் கோட்பாட்டில் நலக் கருதுகோள்

நலப் பொருளியல் பற்றிய பொருள் விளக்கம் குறித்து நிலவும் பலதரப்பட்ட கருத்துகள் ஒருபுறமிருக்க, நல முற்கோள்களை (welfare proposals) பொருளியல் கோட்பாட்டின் ஓர் அங்கமாகக் கருதலாமா என்ற சிக்கலை அணுகுவதிலும் பொருளியல்வாதிகள் வெவ்வேறு திசைகளில் சென்று கொண்டிருப்பதைக் காண்கிறோம். இதைச் சிலர் ஆதரிக்கிறார்கள்; சிலர் எதிர்க்கிறார்கள்; வேறு சிலரோ இன்னும் சில கருதுகோள்கள் தேவை என்கிறார்கள். இவ்வாறு மூன்று குழுவினர் செயல்பட்டு வருகிறார்கள்!

மார்ஷல், பிகோ, ஹிக்ஸ், ஹோட்டலிங், சைட்டோவஸ்கி, பெர்க்சன், சாமுவல்சன் போன்ற பாரம்பரியவாதிகளும், புதிய நலப் பொருளியல்வாதிகளும் முதல் குழாமைச் சேர்ந்தவர்கள். பொருளியல் கோட்பாட்டின் ஓர் அங்கமே நலப் பொருளியல் என்பது இவர்களுடைய அசைக்கமுடியாத கருத்து. லயோனல் ராபின்ஸ் (Lionel Robbins) போன்றவர்கள் இரண்டாவது குழாமைச் சேர்ந்தவர்கள். இவர்கள் நலமுற்கோள்கள் யாவும் பொருளியல் துறைக்கு அப்பாற்பட்டவை என்ற எண்ணமுடையவர்கள். மூன்றாவது குழாமைச் சேர்ந்த ஐ. எம். டி. லிட்டில் போன்றோர் பொருளியல் துறையில் நலமுற்கோள்களை இணைத்துக் கொள்வதற்கு இன்னும் சில கருதுகோள்கள் தேவை என்ற கருத்துடையவர்கள்.

## தொகுதி நலக்கோட்பாடு மூவகைக் கருத்துகள்:

தனிநபர் நலத்திற்கும் Individual welfare) தொகுதி நலத்திற்கும் (Group welfare) இடையிலான தொடர்பு, நிலப்

[13] Rairikar B. R. 'Welfare Economics and Welfare criteria' Indian Journal of Economics 1951 p. 1

பொருளியலின் மிகவும் முக்கியமான ஓர் அம்சமாகும். தனிநபர் நலத்திலிருந்து தொகுதி நலத்திற்கான மாற்றம் மூன்று வழிகளில் நிகழலாம். ஒரு தொகுதியிலுள்ள தனிநபர்களின் நலத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டதாகத் தொகுதி நலம் அமைந்திருப்பது முதல் வழி. இதை 'அரசுக் கட்டுப்பாட்டு முறை' (Paternalistic) என்பார்கள். இதைப் பொறுத்தவரையில், பொருளியல்வாதிகள் செய்வதற்கு ஏதுமில்லை. ஏனெனில், நலத்தைப்பற்றி அரசினர் அல்லது ஆட்சியாளர்கள் தாங்களே ஒருவகைக் கருத்தை உருவாக்கிக்கொண்டு அதைச் செயல்படுத்த முனைவார்கள். பயன்பாட்டின் ஆரக்கால் ஒப்பீடுகள் இயலாத காரியம் (Impossibility of interpersonal Comparisons of utility) என்னும் கருத்தை அடித்தளமாகக் கொண்டது இரண்டாவது வழியாகும். இவ்வழியில், தொகுதி நலம் என்பது முரண்பட்ட தனிநபர் நலங்களின் கூட்டு மொத்தம் அல்ல. பாரீட்டோவும் அவருடைய ஆதரவாளராகிய பாரோனும் (Barone) இக்கருத்து உடையவர்கள். இக்கருத்து தொகுதி நலத்தின் உச்ச அளவு குறித்துப் புகழ்பெற்ற தெளிவிலக்கணம் உருவாவதற்கு வழிவகுத்தது. குறைந்து ஒருவருடைய நிலையை மோசமாக்காமல், வேறு எவருடைய நிலையையும் மேம்படுத்த இயலாது என்பதே அந்தத் தெளிவிலக்கணம். ஹிக்ஸ், ஹால்டர், சைட்டோவஸ்கி ஆகியோர் இக்கருத்துடையவர்கள்.

### நலப் பகுப்பாய்வு: மூன்று நிலைகள்

நலப்பகுப்பாய்வில் (Welfare analysis) மூன்று நிலைகள் (Levels) உள்ளனவாக அறிஞர் ஹீலா மியின்ட் (Hla Myint) கண்டறிந்துள்ளார். (1) பௌதிக நிலை (Physical l vel): பொருள் நலத்தின் இயல்புகள் யாவும் இயற் பொருள்களைப் (Physical products) பற்றிய உள்ளத்தின் மதிப்பீட்டு அளவுகளே (Propositional quantities) எனக்கருதுவது இந்நிலையைச் சேர்ந்தது.

நுகர்வோர் தேவைகளுக்கு ஏற்றவாறு உற்பத்திமுறை (output pattern) சீராக ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளதா என்ற அம்சத்தைக் கவனிக்காமல் ஸ்மித், ரிக்கார்டோ (Ricardo) மில் (Mill) முதலியோர் இதைப் புறக்கணித்துவிட்டார்கள். மாறாக, நிகர உற்பத்தியை உச்ச நிலைக்கு உயர்த்துவதில் ஏற்படும் வெற்றியைக் கொண்டு அவர்கள் பொருளியல் முறையை மதிப்பீடு செய்தார்கள். எனவே, அவர்களுடைய நூல்கள் 'பௌதிக நிலைப்' பகுப்பாய்வைச் சேர்ந்தனவாகக் கருதப்படுகின்றன. (2) அக நிலை (Subjective Level): தனிநபரின் குறிப்பிட்ட, இடையறாத தேவைகளை நிறைவு

செய்யும் அளவுகளின் விகிதாச்சாரப்படி பொருள் நலத்தின் அளவுகள் அமைந்திருக்கும் என்பது இந்நிலையாகும். இதில் இரு முக்கிய கூறுகள் தென்படுகின்றன. ஒன்று பாரீட்டோ, விக்செல் (Wicksell). பாரோன் ஆகியோரிடமிருந்து உருவாகிய பொதுவான மிக உயர்ந்த அளவுக்கோட்பாடு (Optimum Theory); மற்றொன்று மார்ஷலும் அவருடைய சீடர் பிகோவும் கையாண்ட உபரிப்பகுப்பாய்வு (Surplus analysis). இவ்விரு கூறுகளையும் தம் சமகால நலப்பொருளியல் ஒன்றாக இணைப்பதாக மியின்ட் கருதுகிறார். (3) அறவியல்நிலை (Ethical level) குறிப்பிட்ட குறிக்கோள்களை அடைவதில் பரும அளவீட்டைக் (Quantitative measurement) கருதாமல், அக் குறிக்கோள்களின் அறவியல் தன்மைபற்றியே ஆராய்வது இந்நிலையாகும்.

## இருவகை அணுகு நெறிகள் :

அறிஞர் மீஷான் (Mishan) சுருக்கமாகச் சொல்வதுபோல்,[14] நலப்பொருளியலின் கோட்பாட்டு அமைப்பானது இரு முக்கிய அணுகு நெறிகளில் (approaches) அடங்குகின்றது. ஒதுக்கீடு அணுகு நெறி (allocation approach) என்பது ஒன்று; சிறிது சிறிதான அணுகுநெறி (Piecemeal approach) என்பது மற்றொன்று. இந்த இரண்டாவது நெறியானது ஏற்கெனவே குறிப்பிடப்பட்ட உச்ச அளவு நிறைவு-தனித்தனி அணுகுநெறிக்கு ஏறத்தாழச் சமமானது எனலாம்.

பொதுவான ஒதுக்கீட்டு அணுகுநெறி என்பது சமுதாயத்திற்குரிய மிகச் சிறந்த நிலை (Best Position) பற்றி ஆராய்வதாகும். சிறிது சிறிதான அணுகுநெறி என்பது சமுதாயத்திற்குரிய ஓரளவு மேன்மையான நிலை (Better Position) எது என்பதை அறுதியிடுவதாகும். இவ்விரு அணுகு நெறிகளுமே ஒன்றுக்கொன்று துணையாக இருப்பவை. எவ்வாறெனில், 'ஒரு நிலையிலிருந்து ஒரு மேம்பட்ட நிலைக்குச் செல்கிறோமென்றால், மிகச் சிறந்த நிலைக்கு இன்னும் சற்று நெருக்கமாகச் செல்கிறோம் என்பதுதானே பொருள்'.

நலப்பொருளியலில் ஒதுக்கீட்டு அணுகுநெறியின் மூலமாக உத்தம நிலையைக் (optimum position) காண்பதற்குரிய பல சிறந்த ஒதுக்கீட்டு விதிகள் வகுக்கப்பட்டுள்ளன. பிகோ வகுத்த MSNP, MPNP, உத்தமத்தன்மை விதிகள் (Optimolity rules),

14 Mishan, E. J: 'Welfare criteria for External Efforts' American Economic Review 1961 p 594.

ஹெர்னக்ஸ் (Hernex) உச்ச நிலைக்கு மேம்படுத்தும் நிலைமைகள் ஆகியவை இவ்விதிகளுள் சில. தனிநபர் நலன் (Private Benefit), சமூக நலன் (Social Benefit) இவ்விரண்டுக்கும், அல்லது தனிநபர் அடக்கவிலை (Private cost), சமூக அடக்கவிலை (Social cost) இவ்விரண்டுக்குமிடையே வேறுபாடு காணும் மரபு நெடுங்காலமாகவே இருந்து வருகிறது, ஆனால் இதற்கு மாறான சிறிது சிறிதான அணுகு நெறியானது "கற்பித நட்ட ஈடு (Hypothetical compensation)" பற்றி எழுந்த பலதரப்பட்ட கருத்துகளின் உண்டாகிய சிக்கல்களில் அடங்கிப்போய்விட்டது"[3] இதனால் அவர்கள் சிறிது சிறிதான அணுகுநெறியைக் கவனிக்காமல் விட்டுவிட்டார்கள். எனினும், நலச்சிக்கலைத் தீர்ப்பதற்குப் பொதுவான ஒதுக்கீட்டுப் பகுப்பாய்வு உதவும் என்ற நம்பிக்கையும் இல்லை. இரு பொருளியல் நிலைகளில் அங்குமிங்கும் சிறிதளவு மாறுதல்களைச் செய்துகொண்டு எது சிறந்தது என்று கூறுவது இயலாத காரியமன்று. எனவே, ஒதுக்கீட்டுப் பகுப்பாய்வு முறையுடன் ஒப்பிடும்பொழுது சிறிது சிறிதான பகுப்பாய்வு முறை ஓரளவுக்கு நம்பிக்கை தருவதாகவே விளங்குகிறது.

**கலவை அணுகுநெறிகள் :**

பலவகைப்பட்ட அணுகுநெறிகளையும் கலந்து கையாண்டவர்கள் லிட்டில், எப். எம். பிஷர் (M. F. Fisher), ஹிக்ஸ் ஆகியோராவர். அவர்கள் தங்கள் தெளிவிலக்கணங்களை உற்பத்தி நிலைகளோடு மட்டும் வரையறுத்துக்கொள்ளவில்லை. ஆகவே வெளிப்படையாகப் பகிர்வையும் ஆய்வுக்கு எடுத்துக்கொண்டார்கள். பல்வேறு பகிர்வுகளின் சமூக வரிசைமுறைகளை (Social orderings) லிட்டில், பிஷர்[15] இருவரும் ஏற்றுக்கொள்கிறார்கள். தொடர்ச்சியான உற்பத்தி மாறுதல்களின் பகிர்வு விளைவுகளைப்பற்றி அனுபவப் பொதுமையைக் (Empirical generalization) கொண்டு ஹிக்ஸ்[16] ஆராய்கிறார்.

சுருக்கமாகக் கூறினால், லிட்டிலின் அணுகுநெறி இதுதான். உண்மை வருமானத்தின் ஒப்புப் பகிர்வைக் (Relative real income distribution) கணிக்கலாம் என்ற கருதுகோளுடன் சேர்த்து சைட்டொவஸ்கியின் தெளிவிலக்கணத்தை அவர் தொடர்ந்திருக்கிறார். அவர் ஒரு தொடக்க நிலையை, உற்பத்தி அளவும் பகிர்வு முறையும் வேறுபாடாக உள்ள ஒரு மாறிய நிலையுடன் ஒப்பிட்டுப் பார்க்கிறார்.

[15] Fisher, F. M: 'Income Distribution, Value Judgments and Welfare' The Quarterly Journal of Economics 1956 pp 380—424 1957 pp 322—324.

[16] Hicks, J. R: 'Valuation of Social Income' Economic 1940.

அதே மாதிரியில் எந்த மாற்றுனது நல்லது — மோசமானது — எந்த மாற்றத்தையும் உண்டாக்காமலிருக்கக் கூடியது என்ற சிக்கலில் பிஷர் தமது கவனத்தைச் செலுத்துகிறார். வருமானத்திற்கும் பகிர்வுக்குமிடையிலான வேறுபாட்டை உணர்த்துகையில், வருமானத்தைப் பொருள்களின் அளவில் குறிப்பிடுகிறார்; 'உண்மை வருமானம்' என்று குறிப்பிடவில்லை. இது அனுபவ ஈடேற்றுத் தன்மையை (Empirical Viability) மேலும் வலுப்படுத்துகிறது. அவர் பொருள்களின் சில தொடக்க மொத்தப் பகிர்வை ஒரு சமூக நிலை (Social State) என்று சொல்கிறார். சமூக நிலை என்னும் இந்த இடைவெளி (Space) சமூக நிலைமைகள் என்னும் தனித்தனிப் பகுதிகளாகப் பகுக்கப் பட்டிருக்கிறது. இந்தத் தனித்தனிப் பகுதிகள்தாம் விரும்பத்தக்க சமூக நிலை, மட்டமான சமூக நிலை, மாற்றமிலாச் சமூக நிலை எனக் குறிக்கப்படுகின்றன.

மூன்று கட்டங்களில் இதைச் சாதிக்க முடியும். முதலில், உற்பத்தி அளவில் ஒருமுகப் போக்கை (Unanimity) மதிப்புத் தீர்ப்பாக ஏற்றுக்கொள்ளும் வகையில் உறுதியற்ற பிரிவினை (ambigous partitioning) ஒன்றைச் செய்தல். இது பாரிட்டோவின் உத்தமப் பகுப்பாய்வைப் (Optimal analysis) போன்றது. இரண்டாவது, முதல் கட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள வருமான அளவின் பல்வேறு பகிர்வுகளுக்கு ஒப்பிடக்கூடிய மாற்றுகளையும் (Comparable alternatives) விரிவுபடுத்துதல். மூன்றுவதாக, மதிப்புத் தீர்ப்பைப் புகுத்தித் தொடக்க நிலையுடன் மேலும் அதிகமான மாற்றுகளை ஒப்பிடுதல். 'தொடக்க வருமான அளவில் செய்யப்படும் சில குறிப்பிட்ட மறு பகிர்வினுல் சமூகத்தில் எந்தவித மாறுதலும் ஏற்படாத வகையில் தொடக்க நிலை இருக்கும்படி செய்வதற்காக வருமானத்தில் மிகக் குறைந்த அளவு மாறுதல்களைச் செய்வதற்கு இது வழி செய்கிறது.'[17]

நட்டஈடு ஏதுமின்றி உண்மையான நல ஒப்பீடுகள் செய்வதற்குரிய தேர்வு எல்லைகளை பிஷரின் முறை விரிவுபடுத்துகிறபோதிலும், அவர் வகுத்துள்ள மாதிரியைப் (Model) புதிய நலப் பொருளியலின் ஒரு அரும்பெருஞ் சாதனையாகக் கொள்ள முடியாது. வருமானத்திலும் பகிர்விலும் மதிப்புத் தீர்ப்பைப் (Value judgment) புகுத்துவதைத் தவிர்க்க வேண்டுமென புதிய நலப் பொருளியல் வலியுறுத்துகிறது. ஆனுல் அதே மதிப்புத் தீர்ப்பைக் கையாண்டுதான் பிஷர் தம்முடைய ஒப்பீட்டு முறையை

[17] Rothenberg, J. F: The Measurement of social welfare, (Prentice Hal Ltd 1961) p 1961 p 107.

(Comparability) வகுத்துள்ளனர். பகிர்வு விருப்பத்தை (Distribution preference) நேரடியாகப் பண வருமானத்தில் குறிப்பிடாமல், மறைமுகமாகப் பொருள்களின் அளவில் பிஷர் குறிப்பிட்டுள்ளார். இது ஒன்றே பிஷர் வகுத்துள்ள முறையில் காணப்படும் முக்கியமான முன்னேற்றம் எனலாம். இதையும் பெர்க்சனின் பகிர்வுக் கருத்தொருமை அணுகு நெறியிலிருந்து (Distribution Concensus approach) உருவானதே என்றுதான் சொல்லவேண்டும். நலத்தில் ஏற்படும் உண்மையான மாறுதல்களைத் தொடர்ந்து உண்டாகக்கூடிய பகிர்வு மாறுதல்கள் சாதகமானவைகளாகவோ அல்லது போதுமான அளவு பாதகமானவைகளாகவோ இருந்தால்தான், உண்மையான நல மாறுதல்களைக் குறிக்கும் சாதனமாக வருமான மாறுதல்களைக் கருத இயலும்.

ஹிக்ஸின் அணுகுநெறி இதிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. பகிர்வு பற்றிய விவகாரங்கள் முக்கியமானவைகளாக இருந்த போதிலும், 'நடைமுறைக் கொள்கைகளைப் பொறுத்த வரையில் அவற்றை ஒதுக்கி வைத்துவிடவேண்டும்'' என்கிறார் ஹிக்ஸ். ஆனால் இது ஹிக்ஸின் இறுதியான கருத்து அன்று. மொத்த உற்பத்தி மதிப்பின் அளவுப்படி வருமானத்தை உயர்த்துகின்ற ஒவ்வொரு கொள்கையையும், அதாவது, ஒருவருக்கு ஏற்படக்கூடிய இழப்பினை இன்னொருவர் முழுமையாக ஈடு செய்து, அதன்பின்னும் மேம்பாட்டை உண்டாக்குகின்ற இயல்புடைய ஒவ்வொரு கொள்கையையும், நட்டஈடு கொடுக்காமலே ஏற்றுக் கொள்ளவேண்டும். நாளடைவில், வேறொரு கொள்கையைக் கடைப்பிடிப்பதால் உண்டாகக்கூடிய மேம்பாட்டைக் காட்டிலும் அதிக அளவு மேம்பாட்டை ஒவ்வொருவரும் அடையலாம்; அதாவது, உண்மையான நல மாறுதல்களுடன் வெளிப்படையாகத் தொடர்புடைய நல உயர்வை உண்டாக்கும் வகையில் ஒவ்வொரு கொள்கையும் இருக்கவேண்டுமென ஹிக்ஸ் பரிந்துரை செய்கிறார். மற்ற அணுகு நெறிகளிலிருந்து வேறுபட்டதொரு அளவில் இந்த அணுகு நெறியில் பகிர்வு அம்சங்கள் இடம் பெற்றுள்ளன. எனவே இதை ஒரு கலவை அணுகுநெறி (Mixed approach) எனக் கொள்ளலாம்.

[18] Hicks, J. R: 'Rehabititation of consumer' surplus' Review of Economic studies 1940-41.

——

# 6. சில முக்கிய கோட்பாட்டுச் சிக்கல்கள்

**பொருளியலில் ஆக்கக்கூறுகள்:**

அறிஞர் ஜே. எஸ். மில் காலம் முதல், விதியியல் கோட்பாடு (Pure theory) ஒன்றுக்கு ஆதரவான திருப்பம் ஏற்பட்டுள்ளது. நீண்டகால "எதிர்ஊட்டல்" (feedback) கொள்கையைக் கைவிட்டதனுல், தொன்மையான அடிப்படைகள் யாவும் சிதறலாயின. அக்கொள்கையை மில்லின் ஆய்விலிருந்தே அறிந்து கொள்ள முடிந்தது. "மூலாதாரமான சக்திகளை (Underlying forces) முன்னைவிட மிகுதியான செயல்முறைக் கருத்தோடு மதிப்பிடுவதற்கு (realistic appraisal) வழி ஏற்பட்டதும் தொன்மையான நீண்டகால 'எதிர்ஊட்டல்' கைவிடப்பட்டமையால், 'விதியியல்' பொருளியல் (Pure economics) ஒன்று உருவாவதற்கு, அதாவது, சூழ்நிலையின் சக்திகளினுல் பாதிக்கப்படாதவாறு தனியாகப் பொருளியல் முறையை ஆராய்வதற்கு உரிய ஒரு கோட்பாடு உருவாவதற்கு வழி ஏற்பட்டது."

ஆனுல், 19ஆம் நூற்றுண்டின் மத்தியில் பொருளியல் சிந்தனை பற்றிய விஞ்ஞானத் துறையில் ஒரு பிளவு உண்டாகியது. தரஞ்சூழ் கொள்கைகள் அனைத்தையும் தவிர்த்து விட்டு, ஆக்க விஞ்ஞானம் (Positive Science) ஒன்றை உருவாக்கும் முயற்சியில் தொடர்ந்து, ஈடுபடுவதற்குப் பதிலாகப், பகுப்பாய்வில் அக் கொள்கைகளுக்கு முதல் தத்துவங்கள் என்னும் உயர் முக்கியத்துவம் கொடுத்தும், நுண்ணிய பருவின முறைகள் பொருத்தமாக இருக்கக்கூடிய விஷயங்களை ஆராய அந்தத் தரஞ்சூழ் கொள்கைகளைப் பயன்படுத்தும் போக்கு நிலவியது. இப் போக்கினை சீனியர், மில் ஆகியோரும் அவர்களுக்குப்பின் வந்த புதிய சம்பிரதாயவாதிகளும் பாதியில் தடுத்து நிறுத்தினுர்கள். கருவிப்பகுப்பாய்வின் (Instrumental analaysis) கருத்தை ஆராய் வதற்குப் பதிலாகப் பொருளியலை 'அவர்கள் இரு தனிப்பிரிவுகளாகப் (Compartments) பகுத்தார்கள். சந்தை உறவுகளின் (Markt

relations) தனித்தியங்கும் போக்குகளை விவரிக்கின்ற ஒரு விஞ்ஞான மாகப் பணிபுரிவது ஒரு பிரிவு; பொதுக் கொள்கைகளுக்குக் குறிக் கோள்களை நிருணயித்தல், அக் குறிக்கோள்களை அடைவதற்குத் தேவையான அமைப்பு முறைகளை வரையறுத்தல், அதாவது 'முறைமையியல் பகுப்பு' ஆகிய பணிகளை ஒரு 'கலை' என்ற முறை யில் கவனிப்பது இரண்டாவது பிரிவாகும்.

பொருளியல்வாதி தன் கவனத்தில் கொள்ளவேண்டிய அம்சங் களில் அறவியல் சக்திகளும் அடங்கியிருப்பதை மார்ஷல் எச்சரிக் கையுடன் ஒப்புக்கொள்கிறார், 'ஆனல் பொருளியலைத் தரஞ்சூழ் விஞ்ஞானம் (Normative Science) எனச் சொல்லாமல் ஆக்க விஞ் ஞானம் (Positive Science) என்று சொல்லும் வரையில், இந்த உணர்வினுல் நடைமுறையில் எவ்வித மதிப்பும் இல்லை, 'பொரு ளியலை ஓர் ஆக்க விஞ்ஞானமாக ஏற்றுக்கொள்ளாவிடில், அது விஞ் ஞானம் என்று சொல்லப்படும் தகுதியையே இழந்துவிடும்'[1] என்று முற்போக்குப் பொருளியல்வாதிகள் உறுதியாக நம்புகிறார்கள்;

பொருளியலை விஞ்ஞான முறையிலான ஒரு ஆக்க ஆராய்ச்சி யாகச் சித்தரிப்பதற்கு ஆதரவான கருத்தை பிகோவின் நூலிலும் காணலாம். ஒரு கலையின் அடிப்படையாக அமைவதற்குத் தகுதியாக ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒருவகை விஞ்ஞானத்தை வளர்ப்பதற்கே பொருளியல்வாதி முயல்வார். அது உண்மையாக ஒரு கலையாக இராது; அல்லது அரசின் ஆணைகளை நேரடியாக விளக்குவதாகவும் இராது, "எது இருக்கின்றதோ, இருக்க முயல்கின்றதோ அத னுடைய ஆக்க விஞ்ஞானமே அதுவாகும்; அது எதுவாக இருக்க வேண்டும் என்பதைப்பற்றிய தரஞ்சூழ் விஞ்ஞானம் அல்ல". உட னடியான நடைமுறைச் சிக்கல்களுடன் தெளிவான தொடர்புடைய ஆக்க விஞ்ஞான ஆராய்ச்சித்துறைகளில் அது தன்னைச் சிறைப் படுத்திக்கொள்வதில்லை. எனினும், பொதுவான குறிக்கோளை அடைவதில், நடைமுறை நலன்கள் அதற்கு வழிகாட்டியாக அமையும்.

பிகோவுக்குச் சம காலத்தவராகிய அறிஞர் ஜான் நெவில் கெயின்ஸ், தீவிரமான நேர்காட்சிவாதியாவார் (Positivist). முன் னேற்றத்தை உண்டாக்குவதே விஞ்ஞானம்; சர்ச்சைக்குரிய உள் ளார்ந்த அல்லது அவசரப்பட்ட காரணங்களையெல்லாம் விட் டொழித்துவிடுதல் வேண்டும்; அறவியல், நடைமுறை எண்ணங் களுடன் சம்பந்தப்படுத்தாமல் அதன் தத்துவங்களை விவாதிக்க்

[1] Carty, P: Economics A Social Scince (Trichinopoly, 1940) P. 5

வேண்டும். இவ்வாறு செய்தால், இவ்விஞ்ஞானம் விரைவிலேயே சர்ச்சைக்குரிய நிலையிலிருந்து மீண்டுவிடும். இவற்றிலிருந்து விடு பட்ட ஆக்கப்பொருளியல் விஞ்ஞானம் ஒன்றை நாம் பெற முடியாமல் போவதற்குக் காரணமே இல்லை'[2] என்று கெயின்ஸ் கூறுகிறார்.

இக்காலப் பொருளியல் வாதிகளுள் நேர்காட்சி வாதக்கொள்கையைத் தீவிரமாக ஆதரிப்பவர் லயோனல் ராபின்ஸ் ஆவர். இவருடைய முறை, விதியியல் கோட்பாட்டுக்கு மட்டுமே வழிவகுக்கிறது. 'குறிக்கோள் உண்மையை நாடும் பொருளில்மட்டுமின்றி, உண்மையை உண்மைக்காக நாடும் குறுகிய பொருளிலும் விஞ்ஞான முறையி லமைந்ததாகப் பொருளியல் இருக்கவேண்டும் என்று ராபின்ஸும் அவருடைய நண்பர்களும் மற்றவர்களும் வலியுறுத்துகிறார்கள்.

காரண காரியத்துவத்திற் கிடையிலான (cause and effect) உறவை நிலைநாட்டுவதே இத்தகையதொரு ஆக்க விஞ்ஞானத்தின் அலுவலாக இருக்கவேண்டும். ஆக்கப் பொருளியல் விஞ்ஞானம் ஆற்றவேண்டிய விரிவுரைப்பணி (Descriptive funtion) ஒன்று உண்டு. பொருளியல் நிகழ்ச்சிகளையும் (Eeconomic phenomena) நிலைமைகளையும் (Conditions) விவரிப்பதுடன், பொருளியல் நிகழ்ச்சிகளின் செயல்வகைகளை (Modus operandi) ஆராய்ந்து, காரணத்திற்கும் விளைவிற்கும் இடையிலான உறவினை நிறுவும் பணியினையும் ஆக்கப் பொருளியல் விஞ்ஞானம் செய்கிறது. பிண்டப் பொருளியலின் (Body economic) அமைப்புக் கூறுகளையும் செயற்கூறுகளையும், அதன் பல்வேறு பிரிவுகளுக் கிடையிலான செயலெதிர்ச்செயலையும் (Interaction), பல்வேறு வகைத் தூண்டுதலுக்கு (Stimulation) ஏற்படக்கூடிய பலன்களையும் எடுத்துக் காட்டுகின்ற வகையில் இயங்குகிற பிண்டப்பொருளியலின் கோட்பாட்டு இயங்குநிலை மாதிரி Conceptual Working model) ஒன்றை ஆக்க விஞ்ஞானம் பெறுகின்றது.

**நலப் பொருளியலில் மிக்கோள்தரங்களின் தேவை :**

பொருளியல் கொள்கையின் தத்துவங்களை வகுப்பதும், சமூக மேம்பாட்டுக்கு உகந்த கொள்கைகள் எவை என்பதைக் கூறுவதும் பொருளியல்வாதிகளின் கடமை என்ற கருத்து 19ஆம் நூற்றாண்டில் நிலவி வந்தது. கொள்கையின் தத்துவங்களை

[2] Keynes. J. N. Sope and Method of Political Economy (Londen 1917) pp. 52 53

அவ்வாறு வகுக்கின்றபோது, பொருளியல்வாதி கைக்கொண்டிருக்கும் 'சமூக மதிப்புத் தராசைப்' பொருத்து அவர் எடுக்கும் முடிவுகள் அமைந்திருக்கும். ஆகவே, 'நலப் பொருளியல் ஆளுக்கு ஆள் மாறுபடுகிறது; அதே சமயம், ஆக்கப் பொருளியல் எல்லாருக்கும் ஒரே மாதிரியாகவே இருக்க முடியும்; இருக்க வேண்டும். பொருளியல் கோட்பாட்டுக்கும், பொருளியல் கொள்கை குறித்து பொருளியல்வாதிகள் மேற்கொள்ளும் நேரிய போக்கிற்கும் நலப் பொருளியலின் அடிப்படைகள், அடிப்படை முக்கியத்துவம் வாய்ந்தவைகளாகும்.

பன்னாட்டு வாணிபம் (International Trade) பற்றிக் கோட்பாட்டுச் சர்ச்சைகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இதற்கு முக்கிய காரணம், குடிமக்கள் என்ற முறையில் அரசுக் கொள்கை பற்றிய சிக்கல்களில் அக்கறை கொண்ட 'நடைமுறை' மக்களின் சிந்தனையில் அச்சர்ச்சைகள் தோன்றுவதும் கவருவதுமே தரஞ்சூழ் அம்சங்களும் நல அம்சங்களும் வெகுவாகக் கவனத்தைக் யாகும்.

நாம் ஏற்கனவே கண்டதுபோல், பொருளியல் கொள்கைத் தேர்வுக்கு இரு வெவ்வேறு வழிகளில், மதிப்புத் தீர்ப்பு தேவைப்படுகின்றது; (1) வேலையிலும் நுகர்விலும் வெவ்வேறு நடவடிக்கைகளினால், வெவ்வேறான வாழ்க்கை வழிகள் உண்டாகும்; அவ்வாறு தேர்ந்தெடுக்கும்பொழுது, வாழ்க்கை வழிகளையும் நாம் மதிப்பிட வேண்டும்; (2) அந்நடவடிக்கைகள் வெவ்வேறு மனிதர்களை வெவ்வேறு விதத்தில் பாதிக்கும்; எனவே, ஒரு மனிதருக்கும் இன்னொரு மனிதருக்குமிடையிலும் நாம் முடிவெடுக்கவேண்டும். எனவே, நலப் பொருளியல் இக் கேள்விகளுக்கான விடைகளை அடைப்படையாகக் கொண்டதாகும். வேறுவிதமாகச் சொல்ல வேண்டுமானால், செய்கைகளினுடைய வெவ்வேறு நிலைகளின் தரா தரங்களை (Merits) நிருணயிப்பதற்குத் தனி அளவுகோல் எதுவுமில்லை; கொள்கையின் ஒவ்வொரு தேர்வுக்கும் புத்தம் புதிய நேரடியான மதிப்புத் தீர்ப்பு இருத்தல் வேண்டும்.

சமுதாய நலத்திலேயே முக்கியமாக நலப் பொருளியல் கவனம் செலுத்துகிறது. இதில் அறவியல் தீர்ப்பு (Ethical Judgment), அதாவது, 'சமுதாய நலமானது அதில் அடங்கியுள்ள தனிநபர்களின் நலன்களையேயன்றி வேறெதையும் பொறுத்ததில்லை' என்னும் கருத்து அடங்கியிருக்கிறது. 'சமுதாயம் முழுவதன் நலமும் உச்ச நிலைக்கு உயர்த்தப்படவேண்டும்' என்னும் மீக்கோள் தரத்தை (Norm) நலப் பொருளியல்வாதிகள் கைக்கொள்வது

வழக்கம். நலத்திற்குப் போதிய அளவு பொருள்வரையறை செய்யப் பட்டிருந்தால் இது ஐயத்திற் கிடமில்லாததாக இருக்கும். ஆனல், பற்பல மாறுபட்ட விதங்களில் நலத்திற்குப் பொருள் கூறப் பட்டுள்ளது. அவ்வாறு கூறப்பட்டுள்ள பொருள் விளக்கங்களைப் பொறுத்தே, பொருளியல் கொள்கைகளின் பொருத்தம் அமை கின்றது. ஆனல் பொருள் நலம் என்பது ஏற்கெனவே பார்த்தது போல், முழுமையாகவும் தெளிவாகவும் பொருள் விளக்கம் செய்யப்பட்ட கோட்பாடு அன்று. அது ஒரு 'தெளிவற்ற கோட் பாடு' (Vague Notion) ஆகும்; அதைப்பற்றியவற்றுள் யாவும் மேற்போக்காக விஞ்ஞான முறையில் அமைந்திருப்பினும், உண்மை யில் 'வலிந்து கொள்ளும் கருதுகோளாகவே' (Supprseed Premise)[3] இருக்கின்றன. இதனுல், சொந்தக் கருத்துகளும் விருப்பு வெறுப் புகள் விஞ்ஞானம் என்னும் மூகமூடியுடன் உலவுவதற்கு இடம் ஏற் பட்டுள்ளது. இக்கருத்தைப் பேராசிரியர் ஹிக்ஸ் முற்றிலும் ஆதரிக் கிருர். சமகால நிகழ்ச்சிகள் குறித்து ஒருவர் ஒரு கருத்தை உரு வாக்கும்பொழுது, அவர் மதிப்புத் தீர்ப்புகளைச் (Value judgments) செய்து கொள்வதும், 'நல்லது அல்லது கெட்டது எனக் கருதக் கூடிய பொருள்கள் - நிலைமைகள் அல்லது ஏற்பாடுகள் குறித்துத் தம் உள்ளத்தின் ஆழத்தில் ஒருவிதக் கருத்தை உருவாக்கிக் கொள்ளவேண்டியதும்'[4] தவிர்க்க முடியாத ஒன்று என ஹிக்ஸ் கூறியுள்ளார்.

நலத்தின் உச்சநிலை பற்றிய பிகோவின் பொருள் விளக்கம் பயன்பாட்டின் ஆரக்கால் ஒப்பீட்டுத் தன்மையை (Inter-personal Comparability of utility) அடிப்படையாகக் கொண்ட தாகும். இந்த மீக்கோள் தரத்தை-அடித்தளமாகக் கொண்டு ஏழைக்குச் சாதகமான மாறுதல்கள் பற்றிய கொள்கையை பிகோ வகுக்கிருர். இதற்கு அவர் கூறும் காரணம், 'கணித முறைக் கூட்டல் பயன்பாட்டுச் சார்பலன்கள்' (arithmatically additive utility functions) என்ற பெந்தாமிய ஊக்கத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது. இவை மதிப்புத் தீர்ப்புகளாகும். நலப் பொருளியலினுடைய நுதல்பொருளின் தன்மை காரணமாக இம் மதிப்புத் தீர்ப்புகளைத் தவிர்ப்பது இயலாத காரியம். ஏனெனில், மீக்கோள் தரங்கள் இன்றித், தரஞ்சூழ் விளக்கங்களைக் கூறுவது இயலாது. சில இடங்களில், பொருளியலிலிருந்து 'அறவியல் நலச் சார்பலன்களை' (Ethical Welfare functions) நலப் பொருளியல்

[3] Benham F. C.: Economic Welfare Economic Journal Juu 1930. p. 174.

[4] Hi ks J. R Essays in World Economics (Londen 1959) p. VIII

கொள்ள வேண்டும். ஆயின், அவை வெளிப்படையானவை யாகவும், 'அறவியலின்படி மனத்தைக் கவரக் கூடியனவாகவும்' ஆக்கப்பட வேண்டும். இந்த வகையில் பார்த்தால், பிகோவின்[5] நூல் கண்டனத்திற்குரியதாகவே அமைந்துள்ளது.

நலப்பொருளிய லறிஞர்களால் அடிக்கடி பயன்படுத்தப்படும் வெளிப்படையான அறவியல் சொற்கள் (Ethical terminology) சிலவற்றைச் சற்று ஆராயலாம். 'பொருளியல்' (Economic) என்ற சொல்லை அவர்கள் அடிக்கடி தவிர்த்துவிடுகிறார்கள்; அதற்குப் பதிலாக, 'சமூக' (Social), அல்லது 'சமுதாய' அல்லது 'தேசிய' என்னும் சொற்களைக் கையாள்கிறார்கள். இச் சொற்கள் பல்வேறு வர்க்க மக்களுக்கு மனக்கிளர்ச்சியூட்டுவனவாக இருப்பதால், அவற்றைக் கையாள்வது, செயல்நோக்கவிளைவினை அதிகரிக்கின்றன. பொருள்நல உயர்வைப் 'பயன்' (Benefit) என்ற சொல்லால் குறிக்கின்றார்கள், 'பயன்' 'சமூகப்பயன்' (Social benefit), 'சமூக மேன்மைகள்' (Social advantages) ஆகிய சொற்களும் அடிக்கடி பயன்படுத்தப்படுகின்றன. இத்தகைய 'சொல் மாறுதல்களை'ச் (Terminalogical change() செய்கின்ற இப்பொருளியல் வாதிகள், அறவியல் முற்கோள்களில் (Etlical presuppositions) தங்களுக்கு நம்பிக்கை இருப்பதாகக் காட்டிக்கொள்ள மறுப்பது விந்தைக் குரியதாக இருக்கிறது. 'சமுதாய மகிழ்ச்சி' (happiness of the community) என்பதைப் போன்ற தெளிவற்ற ஒரு அம்சத்தைப் பற்றி யாராயினும் துல்லியமான கருத்துக்கொள்ள இயலுமா என்பதே புரிந்துகொள்ளக் கடினமாக இருக்கிறது.

பயன்பாட்டு ஆரக்கால் ஒப்பீடுகள், விளக்கமேயன்றி மதிப்புத் தீர்ப்புகள் அல்ல. மக்களின் மனப் போக்குகளில் மாறுதல் உண்டு பண்ணும் வகையிலும், அவர்களின் பண்பையும் நடத்தையினையும் மாற்றும் வகையிலும் நிகழ்ச்சிகளை இந்த ஒப்பீடுகள் விவரித்துக் கூறுகின்றன. இதே வாதத்தைக் கையாண்டு, மன நிறைவுகள், மகிழ்ச்சி, உண்மையான வருமானம் அல்லது நலம் இவற்றுக் கிடையில், சாதாரணச் சந்தர்ப்பங்களில் செய்யப்படும் ஆரக்கால் ஒப்பீடுகள் மதிப்புத்தீர்ப்புகள் ஆகா என்று அறிஞர் லிட்டில் முடிவு செய்கிறார். எடுத்துக் காட்டாக, 'A-இன் மகிழ்ச்சியை இந்தப் பொருளியல் மாறுதல் உயர்த்தும் என்பதுபோன்ற கூற்றுகள், மதிப்பு உள்ளடக்கத்தைக் குறிப்பிடுவனவல்ல; ஏனென்றால், விவரிக்கப்படும் நிகழ்ச்சிகளின் தன்மைகளினால் மட்டுமே மக்கள் பாதிக்கப் படுகிறார்களேயன்றி, அவை விவரிக்கப்படும் முறையினால் அல்ல.

[5] Samuvelson P A · Welfare Economics A Comment Survey of Contemporary Economics Ed. Haley (Illinoise 1952) p. 37

சமத்துவம் பற்றிய யூகங்களும், 'மகிழ்ச்சிக்கான சமமான திறன்' என்னும் அதன் கிளை முடிபும் நலப்பொருளியலின் முக்கிய கருதுகோள்களாகும் (Premises); அவை பொருளியல் விஞ்ஞானத்தின் ஓர் அங்கமும் ஆகும். ஆனால், ராபின்ஸ் அதை அவ்வாறு கொள்ளவில்லை. அது வெளியிலிருந்து வருவது என்பதும், விஞ்ஞான முறையிலான காரணங்களைவிட அறவியல் காரணங்களைக் கொண்டே அது நிரூபிக்கப்படுகிறது என்றும் அவர் கருதுகிறார்.

பொருளியலின் விஞ்ஞானத் தன்மை பற்றிய கருத்துவேறுபாடு நடைமுறையில், ஒரு தனிநபரைச் சமமாக நடத்தலாமா அல்லது வேறுவிதமாக நடத்தலாமா என்ற ஒரு வினாவாகவே சுருங்கிவிடுகின்றது.[6]

### மிக்கோஸ் தரங்களின் பங்கு :

நலக் கொள்கைகள் யாவும் உண்மை பற்றிய, அறவியல் பற்றிய யூகங்களை அடிப்படையாகக் கொண்டவை என்பதே முக்கிய பிரிவின் முடிவாகும். இந்த யூகங்களிலிருந்து வருவிக்கப்பட்ட நலக்கொள்கைகள் அவை முதலில் இயல்புத்தன்மையுடையனவாகவும்; இரண்டாவதாக 'பரவலாக' ஏற்றுக்கொள்ளப்பட்டனவாகவும் இருந்தாலன்றி நடைமுறை முக்கியத்துவம் வாய்ந்தனவாக இரா. பொருளியலின் வெறும் துக்க வடிவம் மட்டும் 'கவர்ச்சியற்றது; நடைமுறைக்குப் பயன்படாதது'. அது முற்றிலும் மனிதாபிமான விஞ்ஞானமாக இருக்கவேண்டுமெனில், தரஞ்சூழ், பயன்முறை அம்சங்களில் அது வளர்ச்சிபெறல் வேண்டும்.

பிகோவின் முறையை ராபின்ஸ் கண்டித்ததைத் தொடர்ந்து சர்ச்சைக்கு அப்பாற்பட்டதும், பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்டதுமான மதிப்புத் தீர்ப்புகளின் அடிப்படையிலான மாற்றுத் தெளிவிலக்கணங்கள் வகுக்கப்பட்டன[7]. 'ஒரு பொருளியல் மாறுதலினால், மற்றவர்களின் நிலை அதே அளவில் இருக்கையில், குறைந்தது ஒரு நபரின் நிலையாவது மேம்பாடடையுமெனில், அந்த மாறுதல் விரும்பத்தக்கது' என்பது மதிப்புத் தீர்ப்புகள் யாவற்றிலும் மிகவும் முக்கியமானதாகும் இதைத்தான் பாரிட்டோவின் மதிப்புத்தீர்ப்பு என்று சொல்வார்கள்.

[6] Robbins. L : 'Interpersonal Comparison of utility' Economic Journal, Debember 1938 p. 641

[7] Nath S. K. 'Are Formal Welfare Criteria Required? Economic Journal September 1964. p. 549

'சமுதாயத்தின் நலம், அச் சமுதாயத்தில் அடங்கியுள்ள தனி நபர்களின் நலத்தைப் பொருத்து அமையும்' என்பது பரவ லாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள மற்றொரு மதிப்புத் தீர்ப்பாகும். இது பிகோவின் நலப்பொருளியல் முறையில் குறிப்பாகச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. இதையே கணிதக் கோவையாக பெர்க்சனின் சமூக நலச்சார்பலனின் பொதுவடிவம் குறிப்பிடுகின்றது. இது போன்ற மற்ற அறவியல் தீர்ப்புகள் பின் வருமாறு: (1) சமூக நலச் சார்பலனை முழுமையாக வரையறுத்துக் கொள்ளும் வரையில், சமுதாயத்திற்குரிய மாற்றுநலப்பாணிகள்மீது இறுதித் தீர்ப்புக் கூறுவதைத் தள்ளிப்போடலாம்; (2) மாற்று நிலைமைகளை வரிசைப் படுத்த நேரிடும்போதெல்லாம், நலப்பகிர்வு ஏற்படும் வகையில் நமது தீர்ப்பை நாம் கையாளலாம்; (3) ஈடுசெய்த சரிக்கட்டுதலுக் குரிய (Compensated adjsutment) நிதானக்கொள்கை மூலமாக நலங்களின் பகிர்வு குறித்து இத்தகைய தீர்ப்புக் கூறுவதற்கு நாம் முயலலாம்.

பேராசிரியர் சாமுவல்சன், சமூக நலச் சார்பலன்பற்றி விவா திக்கும்பொழுது, பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள மதிப்புத் தீர்ப்புகளின் விரிவான பட்டியல் ஒன்றை வகுத்துக் காட்டுகிறார். மாறுபட்ட நோக்கங்களை ஈடேற்றும் வகையில் குறைவாக உள்ள செல்வாதாரங்களைச் சிறந்தமுறையில் ஒதுக்கீடு செய்வதே நலப் பொருளியலின் முக்கிய குறிக்கோளாகும்.

மற்ற மதிப்புத் தீர்ப்புகள் வருமாறு: ஒரு தனிப்பட்டவரின் பொருள் நலத்தை மதிப்பிடுவதற்கு அவரைவிடச் சிறந்தவர் யாரு மில்லை; ஆகவே, நுகர்வோருக்கும் உற்பத்தியாளருக்கும் எப் பொழுதும் முழுச் சுதந்திரம் இருக்கவேண்டும்.

ஒரு தனி நபரின் பொருள்நலம், அவர் நுகர்கின்ற பொருள் களை மட்டுமே பொருத்ததாகும்; அவருடைய நலம், மற்றவர்கள் நுகர்கின்ற பொருள்களால் பாதிக்கப்படுவதில்லை. இவ்வாறு மதிப்புத் தீர்ப்புகளையும் பிகோ கூறுமல் விட்டுவிட்டார்.

மதிப்புத் தீர்ப்புகளில் பலவகைகள் உண்டு. முதல்வகை-தர்க்க முறையில் எந்த விஞ்ஞானத்திலும் தவிர்க்க முடியாததாகும். இவை தெளிவிலக்கணங்களின் தேர்வு பற்றியனவாகும், இவை விஞ்ஞான முறைப்பகுப்பாய்வுக்கு முன்னர் தர்க்கமுறைப்படி வருவனவாகும்; எனவே இவற்றை விஞ்ஞான முறைக்கு முற்பட்டவை (Pre-Scientific) என்றும் அழைப்பதுண்டு. இரண்டாம் வகையைச் சேர்ந்தவை அப்படியொன்றும் தவிர்க்க முடியாதவை அல்ல; ஆனால், கொள்

கைப்பரிந்துரைகள் செய்யப்படவேண்டுமானல், அவை அடிக் கோள்களாக ஆக்கப்படவோ (Postulated) அல்லது உறுதி செய்யப் படவோ (affirmed) வேண்டும். மூன்ருவது வகை - விஞ்ஞான முறையிலேயே இயங்குவனவாகும். அவை ஆதாரங்கள், நுழை வாயில்கள் இவை பற்றிய சிக்கல்களாகும்.

பொருளியல் விஞ்ஞானத்தின் குறிக்கோள் சார்ந்ததும், ஆக்க முறையிலானதுமான முற்கோள்களுடன் (Propositions) ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, மதிப்புத் தீர்ப்புகள் உறவுடையவை (relative) ஆக எண்ணஞ்சார்ந்தவை (Subjective) எனலாம். மதிப்பின் இறுதி நிலைப் பயன்பாட்டுக் கோட்பாடும், அதன் வாரிசான நுகர்வோர் விருப்பு-தேர்வுப் பகுப்பாய்வும் இவ்வகைக்கு எடுத்துக்காட்டுகளா கும். மதிப்புத் தீர்ப்பு என்பது ஒரு குறிப்பிட்ட பொருளியல்வாதி யின் சொந்த மதிப்புத் தீர்ப்பு ஆகும்; ஒரு குறிப்பிட்ட மீக் கோள் தரத்தை மற்றவர்கள் மேற்கொள்ளவேண்டுமென அவர் விரும்பினல், அவர் தாம் கூறும் மீக்கோள் தரங்கள் அறநெறிப்படி ஊக்கமூட்டக் கூடியவை என அவர்கள் உணரும்படி செய்ய வேண்டும். இது மதிப்புத் தீர்ப்பின் மற்ருெரு முக்கிய பண்பாகும்.

பொருளியல் என்பது ஒரு பகுதி சமுதாய ஆய்வும், பொது வாகத் தத்துவ ஆய்வும் ஆகும். தத்துவம் போன்ற மிக விரிவான தும், பல துறைகளைத் தழுவியதுமான ஒரு பொருளில் உழைப் பினைப் (Labour) பகுக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டதால் பொரு ளியலை ஒரு தனி விஞ்ஞானமாக வளர்க்கவேண்டிய அவசியம் ஏற் பட்டது. பொருள் நலம் குறித்து விவாதிக்கும்பொழுது நன்மை (goodness) தீமை (badness) பற்றிய சிக்கல்கள் எழுவது இயல்பு. அவ்வாறு சிக்கல்கள் எழும்பொழுது, தங்களுடைய ஆராய்ச்சி அதன் மூலத்திலிருந்து தனிமைப்பட்டிருப்பதைப் பொருளியல் வாதிகள் உணர்வதில் வியப்பொன்றுமில்லை. இதனைச் சமாளிப் பதற்கு, அவர்கள் தங்கள் பகுப்பாய்வுக்குத், தத்துவத்தின் பிற பிரிவு களின் முடிவுகளை இறக்குமதி செய்துகொள்ளவேண்டும்; அதே சமயம் பொருளியலை ஒரு தனி ஆராய்ச்சியாகவே நிலைநிறுத்திக் கொள்ளவும்வேண்டும்; அல்லது இத்துறையில் உழைப்பினைப் பகுக்கும் (Division of Labour) முறையைத் தலைகீழாக (Reverse) அமைக்கவேண்டும்; அத்துடன், 'பொருளியல்வாதிகள் தாங்களும் தத்துவவாதிகளாக மாறிவிடவேண்டும்'

பெர்க்சனின் நலச் சார்பலன் இதற்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டு. ஒரு குறுகிய வரையறைக்குட்பட்ட ஆராய்ச்சித்

துறையில் செயல்படும் ஒரு பொருளியல்வாதி சமுதாயத்திலுள்ள பொறுப்பான மற்ற நிறுவனங்களினால் அளிக்கப்பட்டதாக அவர் யூகித்துக் கொண்டிருக்கின்ற மதிப்புத் தீர்ப்புகளைத் தன்னுடைய கோட்பாடு மாதிரிகளின் அடிப்படையில் வெளியிடுவதற்கான வழி முறைகளை மட்டுமே இந்த ஏற்பாடு (devicc) குறிக்கிறது. எனவே, பொருள் நலத்தில் ஏற்படும் மாறுதல்களை நிருணயிப்பதற்கு மதிப்புத் தீர்ப்புகளைச் செய்யவோ அல்லது அவற்றை ஏற்றுக் கொள்ளவோ வேண்டிய அவசியம் பொருளியல்வாதிகளுக்கு உண்டாவதில் வியப்பு ஏதுமில்லை.

அறவியல் நோக்கமின்றி உருவாக்கப்பெற்ற ஒரு பொருளியல் விஞ்ஞானம் உண்மையானதாக இருக்காது. பொருள் வய மனிதன் (Economic man) அடிப்படையில் பொதுமைப்படுத்து வதற்குப் பொருளியலைப் பயன்படுத்தும்போது, மதிப்புக் கருது கோள்கள் (Value Premises) இல்லையெனில், அதனால் பழைய நிலைமைக்குப் பொருளியல் ஈர்க்கப்படும். பொருளியலின் அற வியல்களை ஏற்க மறுப்பதால், நடைமுறைப் பொருளியலின் (Homed economicts) கந்தலாடைக் காரரை (tauterde malion) நோக்கிப் பொருளியல் உண்மையில் இழுத்துச் செல்லப்படவில்லையா?'

நலப் பொருளியலிலிருந்து மதிப்புத் தீர்ப்பை அறவே அகற்றிவிடுவதற்குப் பல பொருளியல்வாதிகள் தீவிரமாக முயன்று வருகிறார்கள். அது நல்ல முயற்சிதான். ஆனால், அம்முயற்சியின் விளைவால் உண்டாகும் பொருளியல், நலத்தை மட்டுமின்றி வேறெதைப் பற்றியும் அல்லாத-விளக்கிக் கூறப்படாத-தர்க்கப் பகுத்தறி முறை (System of logical deduction) ஒன்றினை உடையதாக இருக்கும்.' மதிப்புத் தீர்ப்புகளை விலக்கி ஒதுக்கு வது, 'குளித்த நீருடன் குழந்தையினையும் தூர எறிவது' போன்ற தாகும். நலத்திலும், மகிழ்ச்சியிலும் தார்மிக அக்கறை காட்டு கிறோம் என்ற ஒரே காரணத்திற்காக, மதிப்புத் தீர்ப்புகள் இன்றிச், சுவையான எதையும் கூற முடியாத ஒரு துறையாக நலப் பொருளியல் அமைந்துள்ளது.

புதிய நலப் பொருளியல் கோட்பாடுகளுக்கு மதிப்புத் தீர்ப்புகள் முன்னுரையாக அமையத் தேவையில்லை என்றும், மதிப்புத் தீர்ப்புகளை அடிப்படையாக வைத்துப் புதிய நலப் பொருளியலை உருவாக்கும் முயற்சிகளினால் தேவையற்ற இடையூறு களும் குழப்பங்களும்தான் உண்டாகும் என்றும் அறிஞர் ஆர்க்கி

[8] Shackle. G L S: A New Prospect of Economics. (Liver pool. 1961) p 420

பால்டு (Archibald) வாதிடுகிறார்.[9] இந்தப் பொதுவான, முரண்பாடான கருத்து' ஆக்கப் பொருளியலுக்கும் தரஞ்சூழ் பொருளியலுக்குமிடையே ராபின்சன் வகுத்துள்ள பாகுபாட்டுக்குப் பொருந்துவதாக இருக்கின்றது. இக்கருத்து புதிய நலப் பொருளியலைப் பற்றியதாகும். அறிஞர் ஹிலா மியண்ட் (Hla Myint) தமது 'நலப் பொருளியல் கோட்பாடுகள்' (Theories of Welfare Economics) என்னும் நூலில் இக்கருத்தை ஆதரிக்கிறார்.

நலப் பொருளியலுக்கு மதிப்புத் தீர்ப்புகள் தவிர்க்க முடியாதவை. இதைக் கருத்தில் கொண்டு, உண்மை, தர்க்கம் இவற்றைப்பற்றிய சர்ச்சைகளை, விளைவுகள் கடமைகள் இவற்றைப் பற்றிய சர்சைகளிலிருந்து தனியாகப் பிரிக்கும் வகையில் பொருளியல்வாதி அவற்றைத் தெளிவாக்க வேண்டும். இதை உணர்ந்த போதிலும்கூட, 'மதிப்பு முற்கோள்களுக்குத் தேவையான குறைந்த அளவுச் சாதனம்[10] தொடர்பாகவும், ஆக்கப் பொருளியலில் அவற்றின் இடம் குறித்தும் இன்னும் மாறுபட்ட கருத்துகள் கூறப்படுகின்றன.

சமூகக் கொள்கை பற்றிய விவாதத்திற்கு மதிப்புத் தீர்ப்பு அதிகமான உடனடி முக்கியத்துவம் உடையதாக இருக்கிறது. அவை தலையாய முக்கியத்துவம் வாய்ந்த உண்மைகளும் புள்ளி விவரங்களுமாகும். 'சமூக விவாதங்களில் ஈடுபடுவர்களின் மதிப்பில், ஒரு கொள்கை எவ்வாறு இருக்கவேண்டுமென்ற மான சீகக் கொள்கையுடன் தொடர்புடையதாகச் சமூக விவாதங்கள் அமையவேண்டும். அது மட்டுமின்றி, அந்தக் கொள்கையினால் பாதிக்கப்படக்கூடிய எந்த ஒரு சமுதாயத்தின் தனி உறுப்பினர்கள், அத்தருணத்தில், தங்கள் உரிமை அல்லது உரிமைகள் எனக் கருது கின்றவற்றுக்கும், தனிப்பட்ட முறையிலோ அல்லது குழுவினராகவோ விரும்புகின்றவற்றுக்குமிடையில் திட்டவட்டமான பாகுபாட்டையும் அந்த விவாதம் செய்தல் வேண்டும்.'[11]

அண்மைக்காலத் தொன்மைப் பொருளியல் கொள்கைகளிலும், புதிய சம்பிரதாயக் கொள்கைகளிலும் மதிப்புத் தீர்ப்பின் செல்லுபடித்தன்மை (Validity) குறித்து பெருமளவு சர்ச்சைகள் நிலவி வந்தன. இந்தச் சர்ச்சையில் இரண்டு காலங்கள் உண்டு. முதல் காலம் 1904 வரை நீடித்தது. அப்போது உண்மையான

9 Archibald. G. C: 'Welfare Economic:, Ethics and Essentialism Economic Journal Novemb:r. 1959. p: 316

10 Streeten Paul: 'Economics and Value Judgments' Quarterly Journal os Economics 1950, Vol. 64, p 595

11 Knight F. H: On the History and Method of Economics (Chicago 1958) p 171

விவாதம் யாதும் நடைபெறவில்லை; அங்குமிங்குமாக ஒன்றுக்கொன்று தொடர்பற்ற சில கருத்துகள் மட்டுமே தெரிவிக்கப்பட்டன. இரண்டாவது மாக்ஸ் வெபருடன் (Max Weber) தொடங்குகிறது. அவர் 1904-இல் 'சமூகவியல், சமூக அரசியல் அறிவின் நோக்கம்' (on the objctivity of Sociological and Socio political Knowledge) என்னும் ஆய்வுக் கட்டுரையை வெளியிட்டார். 'அறவியல், சமூகக் குறிக்கோள்கள் அறவே புறக்கணிக்கப்பட வேண்டும்' என்பதே இக்கட்டுரையின் சாரமாகும். சமூக முற்கோள்களும் (Postulates), பொருளியல் குறிக்கோள்களும் (Economics ideals) விஞ்ஞானத்திலிருந்து விலக்கப்பட வேண்டும்; சமூக மதிப்புத் தீர்ப்புகளின் மூலத்தத்துவம், விஞ்ஞான அறிவின் எல்லைக்கு அப்பாற்பட்டதாக இருப்பதால், சமூக மதிப்புத் தீர்ப்புகளும் தேவையற்றவை. எனினும், அறிவாதாரமுறை முடிவுகளைப் (Epistemological Conclusions) பயன்படுத்துவதில், சமூக விஞ்ஞானத்தின் ஒவ்வொரு அம்சத்திலிருந்தும் மதிப்புத் தீர்ப்பினை விலக்கிவிட வேண்டும் என்ற எண்ணம் வெபருக்கு இருக்கவில்லை. வெபருடைய இக் கருத்துக்கு முதன்முதலில் எதிர்ப்புத் தெரிவித்தவர் கஸ்டாவ் காஹன் (Gustav Cohn) ஆவார். நமது ஆராய்ச்சியில், சில மதிப்புத் தீர்ப்புகள் அகநிலைத் தோற்றமுடையனவாக இருப்பினும், அவற்றை விஞ்ஞான முறையைச் சார்ந்ததாகவும் (Scientific), குறிக்கோள் சார்ந்ததாகவும் (objective) கருதலாம் என்று அவர் கருதுகிறார். அறிஞர் கஸ்டாவ் செஹ்மோலரும் (Gustav Sehmoller) இதே கருத்தையே கொள்கின்றார். எனினும், பொருளியலின் எத்துறைகளில் இத்தகைய மதிப்புத் தீர்ப்புகளைக் கருத்தில் கொள்ள வேண்டும் என்பதை அவர் குறிப்பிடவில்லை.

இந்தச் சிந்தனைக் குழுவைச் சேர்ந்த மற்றொரு முக்கியமானவர் ஜான் நெவில் கெயின்ஸ் ஆவார். பொருளியல் நிகழ்ச்சிகளின் அறநெறித் தகுதி பற்றி மதிப்புத் தீர்ப்புக் கூறாமலும், பொருளியல் பற்றி மதிப்புத் தீர்ப்புக் கூறாமலும், பொருளியல் முன்னேற்றத்துக்கான நோக்கத்தை நிருணயிக்காமலும் பொருளியல் நிகழ்ச்சிகளை ஏன் விவரிக்கவோ விளக்கவோ கூடாது என்பதற்குக் காரணமே இல்லை என்று அவர் கருதுகிறார். உளவியல்அறநெறிக் குறிக்கோள்கள் இருப்பதையும் இயங்குவதையும் ஒப்புக்கொண்டு, அதேசமயம் அறவியல் தீர்ப்புகளைக் கூறாமல் விடுவது போலவே, உலகில் அறநெறிக் குறிக்கோள்கள் இருப்பதை அரசியல் பொருளியல் ஏற்றுக் கொண்டு, அதேசமயம் அறவியல் விஞ்ஞானமாக ஆகிவிடாமல் இருக்க முடியும்'.

உலகப் போருக்குப் பிறகு, மதிப்புத் தீர்ப்புகளைப் பற்றி நிலவி வந்த சர்ச்சைகளுக்கெல்லாம் ஒரு தீர்வு காணும் வகையில் ராபர்ட் வில் பிரான்ட் (Robert Wilbrandt) செய்துள்ள தொண்டு பாராட்டுதற்குரியது. துயரங்களைத் தடுப்பதற்கான ஒரு நடவடிக்கை என்ற வகையில் தொழிற் கோட்பாட்டில் பொருளியலுக்கு விரிவான, உள்ளார்ந்த செயல் நோக்கம் இருப்பதாக வலியுறுத்தும் அவர், அதனால் பொருளியல்கோட்பாட்டுக்கும் பொருளியல் கொள்கைக்கு மிடையிலான தொடர்பை ஆராய்கின்றார். இதைத் தொடர்ந்து எல்லா அரசியல், பண்பாட்டு அம்சங்களையும், இயற்கைச் சட்டம் தொடர்பான மீக்கோள் தரங்களையும், விதிமுறைகளையும் புறக்கணித்து விட்டு, ஒவ்வொரு குறிப்பிட்ட நிகழ்ச்சிக்கும் பொருத்தமான விதிமுறைகளை வகுத்துக் கொள்ளப் பொருளியல் வாதியினால் இயலவேண்டும்.[12] இக்கருத்து பெரிதும் ஆதரிக்கத்தக்கதாகும்.

இக்கால விவாதங்களில், மதிப்புத் தீர்ப்பு பற்றிய கருத்து வேறுபாடுகள் அளவிலும் தீவிரத்திலும் பெருகியுள்ளன. முற்றிலும் நேர்மாறான கருத்துகள் சான்று வலிமையோடு கூறப்படுகின்றன. பொருளியல் என்பது ஓர் ஆக்க விஞ்ஞானம் என்றும், எனவே அதில் தரஞ்சூழ் தீர்ப்புகளை அனுமதிக்க இயலாது என்றும் பிரீட்மன் (Priedman), ஸ்டிக்லார் (Stigler) இருவரும் கூறுகிறார்கள். 'பொருளியல் ஓர் ஆக்க விஞ்ஞானம். கொள்கையளவில் ஆக்க விஞ்ஞானமானது, எந்த ஒரு அறிவியல் நிலை அல்லது தரஞ்சூழ் தீர்ப்புகளைச் சார்ந்திராமல் தனித்து இயங்குவது'[13] என்று பிரீட்மன் கருதுகிறார். இதே கருத்தை ஸ்டிக்ளர், 'ஆக்க விஞ்ஞானம் என்ற முறையில் பொருளியல் அறவியலின்படியும் அதனால் அரசியலின்படியும், நடுநிலைமையானது' என்று கூறுகிறார்.

இதற்கு நேர் எதிரான கருத்துடைய பொருளியல் வாதிகள் அறவியல் வண்ணம் பூசுவதை ஆதரிக்கிறார்கள். அவர்களுள் முக்கியமானவர்கள் மிர்தால் (Mirdal), ஸ்மித்ஸ் இருவரும் ஆவார்கள். 'எதையும் சாராமல் நடுநிலையாக இயங்கும் ஒரு சமூக விஞ்ஞானம் ஒருபோதும் இருந்ததில்லை; தர்க்க முறைக் காரணங்களால் அத்தகைய விஞ்ஞானம் இருக்கவும் முடியாது' என்பது மிர்தால் கருத்து. நமது கோட்பாடுகள் யாவுமே மதிப்பு நிறைந்தவை. அவற்றை அரசியல் மதிப்புகளாகவன்றி, வேறு

12 Suranyi-Unger: The-Economics) in the Twentieth Century London 1932.

13 Friedman, M: Essays in Positive Economics (Chicago 1953)

வகையில் விளக்க இயலாது. மேலும், எந்தப் பொருளியல் கோட்பாட்டையும் தத்துவ முறைப்படி நடுநிலைமையானது (Ideologically neutral) என்று கருத முடியாது. ஆகவே, முற்றிலும் மதிக்கத்தக்க வலுவான வாதங்களுக்கு மதிப்பு முற்கோள்களைப் பயன்படுத்தலாம் என்றும், முக்கியமாக ஆரக்கால் ஒப்பீடுகள் வெறும் விரிவுரைத்தன்மை யுடையனவாகவே இருப்பதால் அவற்றுள் எவ்விதத் தொல்லையும் ஏற்படாது என்றும் வாதிக்கப் படுகின்றது. இதே கருத்தை மிஷானும் (Mishan) எதிரொலிக்கிறார். 'கூர் நோக்கு (Observation), உள்முக நோக்கு (Intropection) ஆகியவற்றின் அடிப்படையிலமைந்த உண்மை நிகழ்ச்சியின் மதிப்புகளே ஆரக்கால் ஒப்பீடுகளாகும்' என்று அவர் கருதுகிறார். உண்மையான வருமானத்தின் 'விரும்பத்தக்க' பகிர்வு என்பதும் ஒரு மதிப்புத் தீர்ப்பேயாகும்.

பொருளியலிலிருந்து மதிப்பை விலக்கும் முயற்சியை ஜே. எம். கிளார்க்கும் தீவிரமாக எதிர்க்கிறார். அம்முயற்சிகளைச் சமாளிக்கப் பல வழிகளையும் அவர் கூறுகின்றார்;

### நலப்பொருளியலில் மீக்கோள் தரங்களின் வரம்பு

நலப் பொருளியல் வாதிகள், மரபியல் வாதிகளாயினும் நவீன வாதிகளாயினும், நலப் பொருளியல் வளர்ச்சிக்குப் பல வகைகளிலும் தொண்டு செய்துள்ள போதிலும், அவர்கள் முறைமையியல் (Methodology) பற்றிய சிக்கலை ஆராய்வதில் மிக அரிதாகவே ஈடுபட்டுள்ளார்கள் என்று சொல்ல வேண்டும். பொருளியலில் முற்கோள்கள் (Positive Propositions) போன்ற நல முற்கோள்களைச் சோதனை செய்கின்ற அதே முறைப்படியே நலப் பொருளியலிலுள்ள முற்கோள்களையும் சோதனை செய்ய முடியும். ஆனால், ஆக்கப் பொருளியலின் ஓர் உட்பொருளைச் (Implication) சோதனை செய்வதைக் காட்டிலும், நலப் பொருளியலின் ஓர் உட்பொருளைச் சோதனை செய்வதில் அதிகக் கடினமான இடையூறுகள் நேர்கின்றன. 'நலத்தின் உட்பொருள்களைச் சோதனை செய்வது மிகவும் கடினமாக இருப்பதால், மரபான முறைமையியலைக் கைவிட்டுவிட்டுக் கருதுகோள்களின் (Premises) செல்லுபடித்தன்மையை உறுதிப் படுத்துவதற்குரிய சற்றுக் கீழ்த்தரமான முறையைக் கையாள்வது நலமாக இருக்கும்'.[14]

ஆயினும், ஓர் ஆராய்ச்சியாளர் தமது சொந்தக் கருதுகோளைக் கையாண்டு ஒருமுறையின் பொருளியல் திறனை மதிப்பிடுவது 'விஞ்

[14] Mishan E. J: 'A Survey of Welfare Economics 1939-59' Economic Journal June, 1960 p. 201.

ஞான முறைக்கு முரணானது' (unscientific) என்று ஹிக்ஸ் வாதிடு கிறார். ஆனால் இக்கருத்தை ஒப்புக் கொள்ள ரெடர் (Reder) மறுக்கிறார். 'குறிக்கோளின் தன்மை, விஞ்ஞானமுறை யானதாகவோ வேறுவிதமாகவோ இருக்க இயலாது; கையாளும் தெளி விலக்கணத்திற்குப் பொருந்துகிறதா இல்லையா என்பதை நிருண யிக்க நமக்கு உதவுகின்ற முறையை மட்டுமே விஞ்ஞானம் கருத்தில் கொள்கிறது' என்று அவர் கருதுகிறார்.

இந்த வாதங்களெல்லாம் ராபின்ஸுக்கு மனநிறைவளிக்க வில்லை. நலப் பொருளியலை விஞ்ஞான முறைப்படி ஆராயலாம் என்ற அடிப்படைக் கருத்தையே அவர் தாக்குகிறார். விதியியல் பொருளியல் விஞ்ஞானத்தில் (Pure economic science) ஆக்க நிரூபணம் (Positive proof) இயலாத காரியம்; எனவே அதில் விஞ்ஞான முறைக்கு இடமில்லை. நலத் தெளிவிலக்கணங்களில் மரபான மதிப்பீட்டு (Conventional valuation) அம்சங்கள் அடங்கி யிருப்பதால், அவை தரஞ்சூழ் இயல்பு (Normative) வாய்ந்தவை. எனவே, 'அதற்கு விதியியல் பொருளியலில் இடமில்லை.'

நலப்பொருளியல் அறவியலின் ஒரு பிரிவே என்றும்,[15] அதனால் அது தரஞ்சூழ் இயல்பு வாய்ந்தது என்றும், விஞ்ஞான முறைக்கு முரணானது என்றும் கூறப்படும் மேற்கண்ட கருத்துகளுக்கு வரவர முக்கியத்துவம் குறைந்து கொண்டுவருகிறது. இதற்குக் காரணம் 'இவ்விஞ்ஞானத்தின் தன்மை குறித்த மிகவும் குறுகிய கண்ணோட்டத்தின் அடிப்படையில் இக்கருத்து அமைந்திருப்பதே யாகும்.' மருத்துவம் (Medicine) எவ்வாறு தரஞ்சூழ் இயல்புடையதோ, அதே போன்று நலப்பொருளியலும் தரஞ்சூழ் இயல்புடையதேயாகும்; ஆனால், அதன் மீக்கோள்தரம் கொடுக்கப் பட்டிருப்பின், அப்பொழுது, அதன் அடிப்படையில் கொள்கைகளை நிருணயித்தல் முற்றிலும் விஞ்ஞான முறைக்குட்பட்ட ஒரு முயற்சியே யாகும்.'

ராபின்ஸின் பிற்போக்கான கருத்து, தரஞ்சூழ் பொருளியலின் ஆதரவாளர்களை இன்னும் தீவிரமாகச் செயல்படத் தூண்டியது. நலப் பொருளியலின் முற்றிலும் அறவியல் சார்ந்த அம்சங்களை அவர்கள் மிகுந்த தீவிரத்துடன் வலியுறுத்தலானார்கள். பிரிட்டிஷ் பொருளியல் சிந்தனையிலும், பின்கூறப்பட்ட கருத்துக்கு ஆதரவான மாற்றம் ஏற்பட்டுவருகின்றது. பிரிட்டிஷ் பொருளிய லறிஞர்

15 Marriot J. A. R: Economic and Ethics A Treatise on Wealth and Life (London, 1923) p. 10.

Clark J. M: 'Economic Means to What Ends? American Economic Reivew December 1950'

களின் கருத்து, பழைய மரபிலிருந்து வெகுவாக விலகித் தரஞ்சூழ் பொருளியலை நோக்கி நெருங்கிவருவதை ஹராட், ஹிக்ஸ் போன்ற பேராசிரியர்களின் நூல்கள் தெளிவாகக்காட்டுகின்றன.

பொருளியலில் இந்தத் தரஞ்சூழ் ஆதரவுக்கொள்கை, ஆரம்பக் காலந் தொட்டு இக்காலம்வரை எப்பொழுதும் இருந்துகொண்டே வந்திருக்கிறது. இதன் விளைவாகப் பகுப்பாய்வு பாதிக்கப்பட்டிருக்கிறது. தலையிடாமை என்னும் முற்போக்குக் கொள்கை (Laissez-faire liberalism) பலவகைக் கட்டுப்பாடுகளையும் பொருளியல் வரையறைகளையும் உடையதாக இருந்தமையே, இந்தத் தரஞ்சூழ் ஆதரவுக்கொள்கை உருவாகக் காரணம் எனலாம்: கண்டிப்பான முறையில் அமைந்த தரஞ்சூழ் உட்பொருள்களுக்குப் பொருந்தின்றவகையில் ஆக்க முடிவுகளை (Positive conclusions) உருவாக்குவதற்குச் சாதாரண மக்கள் (Laymen), நிபுணர்கள் (Experts) ஆகிய இரு சாராரும் பொதுவாக விரும்புவதிலிருந்து இதனைத் தெரிந்து கொள்ளலாம்'[16]

## ஆக்க—தரஞ்சூழ் சர்ச்சை

எல்லா விஞ்ஞானங்களிலும், அவை போதிய அளவு வளர்ச்சியடைந்தவுடன், ஆக்க அம்சங்களும், தரஞ்சூழ் அம்சங்களும் தோன்றுவது இயல்பு. வேறு விதமாகச் சொல்லவேண்டுமானல், கூற்றுகளை (Statements) ஆக்கக் கூற்றுகள் என்றும், தரஞ்சூழ் கூற்றுகள் என்றும் பகுப்பார்கள்; 'எப்படி இருக்கிறது' (what is) என்று கூறுவது ஆக்கக் கூற்று; 'எப்படி இருக்க வேண்டும்' (What ought to be) என்று கூறுவது தரஞ்சூழ்கூற்று. ஆக்கக் கூற்றுகள் தொடர்பாக எழும் கருத்து வேறுபாடுகளை, உண்மை நிலைகளைக் (Facts) கொண்டு தீர்த்துவிடலாம்; ஆனல், தரஞ்சூழ் கூற்றுகள் பற்றித் தோன்றும் கருத்து வேறுபாடுகளை இந்த வழியில் தீர்த்துக்கொள்ள இயலாது; ஏனெனில், ஆளுக்கு ஆள் மாறுதலடையக் கூடிய மதிப்புத் தீர்ப்புகளுடன் பின்னப் பிணைந்தனவாக அவை அமைந்துள்ளன.

இந்த ஆக்க—தரஞ்சூழ் பாகுபாடு பல விஞ்ஞானங்களில் தெள்ளத் தெளிவாக இருக்கின்றன. ஆனல், பொருளியலில் ஆக்கப் பொருளியலுக்கும், தரஞ்சூழ் பொருளியலுக்குமிடையே பெருங்குழப்பம் நிலவுகிறது; இக் குழப்பம் ஓரளவு தவிர்க்க இயலாததுமாகும். பொருளியலின் நுதல்பொருளானது (Subject matter) தனக்கு மிகவும் இன்றியமையாதது என்றும், தன்னுடைய

[16] Friedman M: Essays in Positive Economics The Methodology of Positive Economics (Chicago. 1953) p. 4.

சொந்த அனுபவத்திற்கும் தகுதிக்கும் உட்பட்டது என்றும் அநேகமாக ஒவ்வொருவரும் கருதுகிறார்கள். இதனால் இது இடையறாத விரிந்த சர்ச்சைக்குக் காரணமாக இருந்து வருகிறது.

பொருளியல்விஞ்ஞானம், ஆக்கஇயல்பும் அறவியல் இயல்பும் வாய்ந்ததென ஆடம்ஸ்மித்தும் மார்ஷலும் நம்புகிறார்கள். 'கண்டிப்பான விஞ்ஞான முறையிலமைந்த அல்லது குறுகலான பொருளியல் சிக்கல்களுக்குள் தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளக் கூடாது; ஏனெனில் அந்தக் குறுகிய வரம்புகளுக்குள் நடைமுறைக் கொள்கை முடிவுகளை எடுக்க அவர்களால் இயலாது' என்று மார்ஷல் கருதுகின்றார். மேலும், பொருளியல் விஞ்ஞானத்தின் எல்லைக்குள் அமைந்துள்ள சிக்கல்களுக்கும், அதற்குப் புறம்பாக அமைந்துள்ள வெவ்வேறு சமூகக் குறிக்கோள்களின் தேவைபற்றிய சிக்கல்களுக்கு மிடையே தெளிவானதொரு பாகுபாடு செய்யப்பட வேண்டுமெனவும் அவர் வலியுறுத்துகிறார்.[17] இறுதியாக, பொருளியல் விஞ்ஞானத்திற்குப் புறம்பாகவுள்ள வெவ்வேறு சமூகக் குறிக்கோள்களைப் பற்றிப் பொருளியல் வாதி கவலைப்படக் கூடாது என்று மார்ஷல் முடிவு செய்கிறார்.[18] 'அரசியல்பொருளியல்' ஒரு விஞ்ஞானம்; அது ஆக்க முறையில் அமைந்தது; அறவியல் அல்லது நடைமுறை விஞ்ஞானத்திலிருந்து அது வேறுபட்டது; அதன் முறை கருத்தாய்விலானது (abstract), பகுத்தறிவு முறையிலானது (Deductive) என்ற கருத்துக்கு முதன்முதல் உடன்பாடு தெரிவித்த ஆங்கிலப் பொருளியல் வாதிகள் சீனியர், மில், கெயிர்னஸ் (Cairness), பெகாட் ஆகியோர் ஆவர்.

இதே கருத்தை ஜான் நெவில் கெயின்ஸும் கூறுகிறார். பொருளியலின் ஆக்க அம்சங்களுக்கும், தரஞ்சூழ் அம்சங்களுக்கு மிடையிலான குழப்பத்தினால், 'தீய விளைவுகளுள் பலதவறுகள்' (mischievous errrors) நேர்ந்திருக்கின்றன என்று அவர் கூறுகிறார், அவர் ஆக்க விஞ்ஞானம், தரஞ்சூழ் விஞ்ஞானம் இரண்டையும் வரையறுத்துக் கூறுகிறார். 'ஆக்க விஞ்ஞானம் என்பது, எது இருக்கின்றதோ (what is) அதைப் பற்றிய முறையான அறிவின் ஒரு தொகுதி: தரஞ்சூழ் அல்லது விதிமுறைவிஞ்ஞானம் எது 'எப்படி இருக்க வேண்டும்' (what ought to be) என்னும் தெளிவிலக்கணம் பற்றிய முறையான அறிவின் தொகுதி; ஆகவே, அது உண்மை நிலை (actual) யிலிருந்து வேறுபட்ட கற்பித நிலையைப் (ideal) பற்றிக் கூறுவது.......ஆக்க விஞ்ஞானத்தின் குறிக்கோள், ஒருமைப்

[17] Pigou A. C: Memorial to Alferd Marshall (London 1925) p. 165

[18] Marshall A: Industry and Trade (London 1923) p. 676

பாடுகளை (uniformities) உருவாக்குவது; தரஞ்சூழ் விஞ்ஞானத்தின் நோக்கம், கற்பிதக் கொள்கைகளை (ideals) நிருணயித்தல்......

ஆக்க விஞ்ஞானத்திற்கும், தரஞ்சூழ் விஞ்ஞானத்திற்குமிடையே திட்டவட்டமான வரையறையை ஏற்படுத்த முயல்வது பயனற்ற ஒரு முயற்சி. எனினும், அவ்விரு விஞ்ஞானங்களுக்குமிடையிலான முக்கிய வேறுபாடுகள் குறித்துச் சிறிதளவாயினும் அறிந்திருக்க வேண்டியது அவசியமாகும்.

நிலைநாட்டப்பட்டுள்ள நிறைவுப் போட்டிக் கோட்பாட்டின் ஒரு பெரும் பகுதி, நலப் பொருளியலின் கீழ் வருகிறது. இப்பகுதியே அக்கோட்பாட்டின் 'மிக வலுவான பகுதியாகும்'. நுகர்வோரின் பகுத்தறிவுக்கு ஒத்த தன்மையும் (Rationality), கண்டறிய இயலாத சிலராதிக்க (oligopoly) அம்சங்கள் உள்ளமையும் கடுமையாக ஐயுறப் படுகின்றன. எனவே, ஆக்கப் பொருளியலின் ஒரு கிளையாக நிறைவுப் போட்டியைக் கருதுவது இப்பொழுது கூட அவ்வளவு பொருத்தமாகத் தோன்றவில்லை. ஆனல், நலப் பொருளியலின் கீழ் நிறைவுப் போட்டியை ஆராய்கின்ற பொழுது, அதற்குச் சற்றுத் தெளிவான தகுதி (status) உண்டாவதுடன், விலைக்கும், இறுதி நிலைச் செலவுக்கும் (Marginal Cost) இடையிலான ஏற்றத்தாழ்வுக்குக் காரணமாக இருப்பதால் சிலராதிக்கப் போட்டியும், ஏகபோகப் போட்டியும் மதிப்பிழந்து விடுகின்றன. இந்த ஏற்றத் தாழ்வுகளின் விளைவுகளே நலப் பொருளியலின் மிகவும் 'வளமான விளைநிலம்' ஆகும்.

பொருளியல் என்பது முழுக்க முழுக்க ஆக்க விஞ்ஞானமேயன்றி, வேறல்ல என்னும் ஒரு கருத்துக்குச் சிறிதும் ஊறு நேராமல் காக்கப் பேராசிரியர் ராபின்ஸ் தீவிர முயற்சி எடுத்துக் கொள்கிறார். எனவே, வருமான ஏற்றத் தாழ்வு போன்ற பல நடைமுறைச் சிக்கல்களை அவர் ஒதுக்கித் தள்ளி விடுகிறார். அச் சிக்கல்கள், மரபான மதிப்பீடு சம்பந்தப்பட்ட பொருளியல்வாதிகளுக்குப் புறம்பானவை என்று அவர் இதற்குக் காரணம் கற்பிக்கிறார். அவை தரஞ்சூழ்தன்மையுடையனவாக இருப்பதால், விதியியல் 'விஞ்ஞானத்தில்' (Pure Science) அவற்றுக்கு இடமில்லை என்று அவர் கூறுகிறார்.

விஞ்ஞானத்தின் 'பலன் விளையும்' (fruit bearing) தன்மையை விட்டு விட்டுப், பொருளியலின் ஆக்கத் தன்மையைக் கண்டிப்பாக நிலைநாட்டுவதால் ஏற்படும் நன்மைகள் பிகோவை அவ்வளவாகக் கவரவில்லை. குறைந்து செல் இறுதிநிலைப் பயன்பாட்டு விதிக்குச் (Law of diminishing marginal utility) சட்டப் பூர்வமான பொரு

ளியல் தொடர் விளைவு ஒன்று ஏற்படும் என்றும், அது வருமானத்தைச் செல்வர்களிடமிருந்து ஏழைகளுக்கு மாற்றுவதற்குப் பொருந்துவதாகும் என்றும் அவர் வலியுறுத்துகிறார். இந்த முடிவை ஏற்றுக் கொள்ளாவிடில், பொருளியல் மேம்பாடு என்பது' குறிக்கோள் சார்ந்த உண்மை இயல்பு (objectjve reality) ஏதுமில்லாத வெறும் மாயத் தோற்றமாகவே (Illusion) அமையும்.' ஒரு 'தனியான ஆக்க விஞ்ஞானத்திற்கு எதிராகவும், தரஞ்சூழ் தன்மை வாய்ந்த ஒரு பொருளியல் விஞ்ஞானத்திற்கு ஆதரவாகவும் கூறப்படும் ஒரு வலுவான வாதம் இதுவாகும்.

அண்மைக் காலத்திய நவீனப் பொருளியல் கோட்பாட்டைப் பொருத்த வரையில், பொருளியல் முறை இயங்கும் விதத்தை விளக்குகின்ற ஆக்கப் பொருளியலுக்கும், கொள்கைகளை வகுக்கின்ற நலப் பொருளியலுக்குமிடையே மிகுந்த வேறுபாடு உண்டாக்கப்பட்டுள்ளது. நலப்பொருளியலின் எல்லைக்குள் ஆரக்கால் ஒப்பீடு (Interpersonal comparison) அனுமதிக்கப்படாமையால், பொருளியல் வாதியின்மீது கட்டுப்பாடுகள் விதிக்கப்படுவதாகவும், இக்கட்டுப்பாடுகள் இவ்வாய்வுத் துறையினை மூலையில் தள்ளிவிடுவதாகவும் நம்பப்பட்டுவந்தது. ஆனால் இக்கட்டுப்பாடுகள் இதுவரைக் கருதப்பட்டு வந்ததுபோல் அவ்வளவாகக் கட்டுப்படுத்தக் கூடியன அல்ல என்னும் உண்மை வலியுறுத்தப்பட்டு உணர்த்தப்பட்டதைத் தொடர்ந்து, அண்மைக்காலமாக நலச் சிக்கல்களை ஆராய்வதில் புதிய ஆர்வம் பிறந்திருக்கிறது, சுருங்கச் சொன்னால், நலச் சிக்கல்கள் பற்றிய பொருளியல் வாதிகளின் கருத்தில், தொடக்கத்திலிருந்து ஒரு முழுவட்டச் சுழற்சி ஏற்பட்டிருக்கிறது எனலாம். இப்பொழுது, 'பொருளியல் பகுப்பாய்வின் ஓர் இணைபிரியா அங்கமே நலச் சிக்கல் பற்றிய ஆய்வு' என்ற கருத்து மீண்டும் தோன்றியுள்ளது.[19]

நலப் பொருளியல்வாதி வழக்கமாகத்தான் ஆராய்கின்ற நிகழ்ச்சிகளின் (Phenomena) தன்மையின் அளவுக்கு அவற்றை விஞ்ஞான முறைப்படுத்த விரும்புகிறார். ஆக்கப் பொருளியல் வாதி தன்னுடைய பணியின் நோக்கமும், செயல் தூண்டுதலும் ஏதோ ஒரு நலத்தை உருவாக்குவது என்பதை வழக்கம் போல் ஒப்புக் கொள்ளவில்லை. இந்தப் பொதுவான இறுதிக் குறிக்கோள் இருக்கும்வரையிலும், இது ஓரளவு வெளிப்படையாக உணரப்படும் வரையில் 'பொருளியல் வாதிகளுக்கும் அறிவியல் வாதிகளுக்குமிடையிலும் - விலைப்பொருளியல் வாதிகளுக்கும் நல பொருளியல் வாதிகளுக்குமிடையிலும் - உழைப்புப்

[19] Stigler G. J: 'The New Welfare Economics.' American Economic Review June 1943.

பிரிவினல் (Divison of labour) அளவுக்கு மீறிக் கவலே கொள்ளத் தேவையில்லே. மேலும், பொருள் நல உச்சம் என்ற பெயரில் அருமதிப்புள்ள ஆக்கப் பகுப்பாய்வைப் பெருமளவில் நடத்திக் கொண்டிருக்கலாம். மொத்தத்தில், 'தொன்மைப் பொருளியல் வாதிகளின் விதியமைப்புகளுக்கும், நிலப் பொருளியல்வாதிகளின் விதியமைப்புகளுக்குமிடையிலுள்ள இடைவெளி, பேராசிரியர் ராபின்ஸ் குறிப்பிடுகின்றதுபோல் அவ்வளவு அகலமாக இல்லே' என்ற ஹராடின் முடிவுக்கே நாமும் வரவேண்டியிருக்கிறது.[20]

## நலப்பொருளியலின் விதியமைப்புத் தன்மை

தரஞ்சூழ் பொருளியலுக்கு ஆதரவான மனமாறுதல் குறித்து, முன் உற்ற நான்காம் பகுதியில் (Section IV) குறிப் பிடப்பட்டது. பொருளியல்வாதிகளுள் பலர் இக்கருத்துக்கு உடன்பாடு தெரிவிக்கிறூர்கள். 'இதயமில்லாப் போட்டி'யின் (Soulless Competition) இடத்தை நீதி (justice) பிடித்துக் கொள்ளவேண்டுமென அவர்கள் கருதுகிறூர்கள். விஞ்ஞானத்தின் அறநெறி சேராத போக்கைக் (non-moral attiturde) கைவிடுதல் வேண்டும்; அறவியல் அற்ற பொருளியல் ஒரு 'நெறியற்ற விஞ்ஞானம்' (Immoral Science) என்றே கருதப்படுகிறது; வாணிக நடவடிக்கைகளில் அறவியல் நெறிகளுக்கு முக்கிய பங்கு கொடுக்கப்படாவிடில், பொருளியல் வளம் (Mellenium) தோன்ற இயலாது.

நலப் பொருளியல் பெரும்பாலும் தரஞ்சூழ் இயல்புடையது என்னும் கருத்தை எல்லோரும் ஒப்புக்கொள்வதில்லே. பிகோ தம்முடைய 'நலப் பொருளியலில்' விதிமுறை எதையும் வகுக்க வில்லே. அவர், பொருள் நலத்தை உயர்த்துவது எது என்பதை ஆராய்ந்துவிட்டு அத்துடன் நின்றுவிடுகிறூர். நலத்தின் காரணங் கள் குறித்து மிகுதியாக ஆராய்வதால், அவருடைய நூலே ஒரு ஆக்க ஆராய்ச்சி எனலாம். பிகோ ஆராயும் காரணங்களே முழு வதும் சரியானவை என்றே, 'போக்கிலும் முறையிலும்' (in approach and in method) மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை என்றே கருத முடியாவிட்டாலும், அவருடைய நூல் குறிக்கோள் சார்ந்தது (Objective) என்பதுமட்டும் உண்மை. அது காரணங்கள் பற்றிய ஓர் ஆக்க ஆராய்ச்சியே யன்றி, எது எப்படி இருக்கவேண்டு மெனக்கூறும் தரம்மிகு ஆராய்ச்சி அன்று.

எனினும், 'நலத்தின் காரணங்களே ஆராய்வதும், விதிகளே வகுப்பதும் அதிகமாக வேறுபட்டவை அல்ல; விதிகளே வகுப்பதற்

[20] Harrod R F: "Scope and Method of Economics" Economic Journal: September, 1938, p 396

குரிய ஒரு முன்னேற்பாடே நலத்தின் காரணங்களை ஆராய்வதா கும்'. ஆயினும், இரண்டு வேறுபட்ட அம்சங்கள் உள்ளன. அவை, (i) 'உட்பொருள்கள் (Implications) பற்றிய விதியியல் அறிவு (Pure knowledge); (ii) 'நடைமுறை இயல்புடைய அறிவு (Realistic knowledge).'[21] பிகோவின் கருத்தை தால் (Dahl), லிண்ட்பிளாம்) (Lindblom) இருவரும் ஆதரிக்கிறார்கள். அவர் களின் வாதப்படி, நலப்பகுப்பாய்வு விஞ்ஞான முறையில் அமைந்தது. 'ஏனெனில், எந்த நோக்கத்தினைக் கருத்தில் கொண்டு நாம் ஒரு சமூகச் செயலை மேற்கோள்கிறோமோ, அந்நோக்கத்தை அது ஈடேற்றுகிறதா என்பதைப் பொறுத்து அச் சமூகச் செயல் அறிவுக்குப் பொருத்தமாக (rational) அல்லது பொருத்த மற்ற தாக (irrational) இருக்குமாதலால், நாம் பலப்பல குறிக் கோள்களை வகுக்க வேண்டியதிருக்கும். ஆனால் அதற்கு அப்பால், முற்படு தேவைகளின் (Prerequisites) பகுப்பாய்வு, விஞ்ஞான முறை ஆய்வாக இருக்குமேயன்றி அறநெறி ஆய்வாக இருக்காது. நலப் பொருளியல் தொடர்ந்து, நடைமுறை சார்ந்த (functional) அல்லது கட்டுப்பாடு சார்ந்த (Conditional) உறவுகளை விவரிக் கிறது; அது விவரிக்கிறதேயன்றி விதிவகுக்கவில்லை.'[22] இக்கருத்து பிகோவின் நூலின் விளக்கப்பட்டுள்ள நலப் பொருளியல் பற்றிய கருத்தை ஒத்தாக இருக்கிறது.

இதற்கு மாறாகப், புதிய நலப் பொருளியல் நலத்தின் காரணங்களை நடுநிலையாக ஆராய்வதுடன் நில்லாமல், அதற்கு அப்பாலும் சென்று விதிகளை வகுக்கப் புகுகின்றது. புதிய நலப் பொருளியல் வாதிகளின் கருத்துப்படி, விதியமைப்புகள் (Prescriptions) குறிக்கோள் சார்ந்தவை. நேர்காட்சி வாதிகளின் (Positivist) கண்டனத்திற்கு உட்படாத வகையில் நலப் பொருளியலை மாற்றி யமைப்பதற்குத் தீவிர முயற்சி யொன்றை ஹிக்ஸ் மேற் கொள்கிறார். இதற்குத் தனியார் நிறுவனங்களின் (Private enterprise) உற்பத்தித் திறனைப் பரிசோதிப்பதற்குரிய ஒரு சாதனமாக உத்தமத்தின் (Optimum) பொது நிபந்தனைகளை அவர் தமது பகுப்பாய்வுக்குப் பயன் படுத்துகிறார். பொருளியல் கோட்பாட் டின் இணைபிரியா ஓர் அங்கமாகக் கருதுவதற்கு நலப்பொருளிய லுக்கு உள்ள உரிமையை—எட்ஜ் வொர்த்தின் பயன்பாட்டு நுண் கணிப்பை (Utilitarian calculus) அவர் நிரூபிப்பதுடன், அதன் 'இரட்டைச் சகோதரனாகிய' ஆக்கப் பொருளியலுக்கு, அதாவது

[21] Pigou A. C: "Empty Economic Boxes A Reply", Economic Journal. December, 1922 pp. 458-459.

[22] Dahl: R. A and Lindblom, C. E: Polities, Economics and Welfare (New York, 1953) p. 19

'பொருளியல் நுண்கணிப்பு' (Economic Calculus) உள்ள அதே அளவு தர்க்க முறைத் துல்லியமும் (Precision), அதே அளவு முக்கிய விரிவும் (Elaborsation) அதற்கு உண்டு என்பதையும் வலியுறுத்துகிறார். ஒரு நடவடிக்கையைச் சிலர் வரவேற்று, எவர் ஒருவரும் எதிர்க்காமலிருந்தால், இத்தகைய விதிமுறைகள் (Prescriptions) குறிக்கோள் சார்ந்தவை என்று கால்டார், பேராசிரியர் ஹிக்ஸ் இருவரும் நம்புகிறார்கள், இவ்வகையில் எங்கும் எதிர்ப்புரை (Obliction) பயன்படுத்தாமலிருப்பது விந்தையாக உள்ளது.

கொள்கைப் பரிந்துரைகளை (Policy recommendation) நலக் கோட்பாடு செய்யாமல் தடுப்பதற்காகவே, விதிமுறையிலமைந்த நலக்கோட்பாடு உருவாகாமல், தடுக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பரிந்துரைகள், நலப் பொருளியலின் ஆய்வுக்கு உகந்த பொருளாகும்; இந்தப் பரிந்துரைகளைப் பகுத்தறிவதற்குக் காரணமாக அடிப்படை விதிகளின் (axioms) தொகுதி ஒன்றை உருவாக்குவது, மேலும் பல பரிந்துரைகளைச் செய்வதற்கு வசதி செய்யும் ஒரு சாதனமே யாகும்.

நலப் பொருளியலின் விஞ்ஞானத் தகுதி குறித்து லயோனல் ராபின்ஸ் தெரிவித்துள்ள வன்மையான கண்டனங்களை நாம் ஏற்கெனவே ஆராய்ந்தோம். ஆனால் அவருடைய ஆய்வுக் கட்டுரையில் முறைமையியல் விதிகளுக்கே (Methodological prescriptions) முதல் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது. குறிப்பாகப் பொருளியல் விஞ்ஞானத்திற்கும் மற்ற விஞ்ஞானத்திற்குமிடையே திட்டவட்டமான பாகுபாடு ஒன்றை முதலில் செய்துகொள்ள வேண்டுமென அவர் கூறியுள்ள கருத்து குறிப்பிடத்தக்கது.

## நலப் பொருளியலில் நேர்காட்சிவாதம் :

மில்டன் பிரீட்மன் தமது 'ஆக்கப் பொருளியலின் முறைமையியல்' (Methodology of Positive Economics) என்னும் நூலில், தரஞ்சூழ் பொருளியலுக்கும், ஆக்கப் பொருளியலுக்கும் இடையிலான பாகுபாட்டை வலியுறுத்தவும், ஆக்கப் பொருளியலுக்கு ஆதரவான வாதங்களைத் திரட்டவும் முயல்கின்றார். தரஞ்சூழ் பொருளியலானது, ஆக்கப் பொருளியலிலிருந்து பிரிந்து தனித்து இயங்க இயலாது என்று அவர் கருதுகிறார். கொள்கை பற்றிய எந்த ஒரு முடிவும், ஒரு காரியத்தைச் செய்வதால் உண்டாகும் விளைவுகள் குறித்த யூகங்களைப் (Predictions) பொறுத்த

தேயன்றி, மறைமுகமாகவோ வெளிப்படையாகவோ ஆக்கப் பொருளியலை அடிப்படையாகக் கொண்ட ஊக்கத்தைப் பொறுத்த தன்று.[23]

அறிஞர் ஆர்க்கிபால்டு, பிரீட்மனைவிட ஒருபடி மேற் சென்று, நலப் பொருளியல் ஓர் ஆக்க விஞ்ஞானமே என்று திட்டமாகக் கூறுகிறார். "நலப் பொருளியல்' என்ற பெயரோடு நாம் மேற்கொள்ளும் ஆராய்ச்சிகள் யாவும், மாற்று ஏற்பாடு களின் சில குறியீடுகளின் (Indexes) விளைவுகளைப் பற்றிய ஆக்க ஆராய்ச்சிகளேயாகும். ...இந்த ஆராய்ச்சிக்கு முன்னர் மதிப்புத் தீர்ப்பு எதுவும் தேவையில்லை......... இந்த ஆராய்ச்சிகளின் முடிவுகள் விதிமுறை ஆற்றல் உடையன அல்ல... நலப் பொருளி யலின் தேற்றங்கள் (Theorems) இவ்வாறாக ஆக்கப் பொருளியலின் தேற்றங்களாக அமைகின்றன.' அவை, கொடுக்கப்பட்டுள்ள குறிக்கோள்களையும், அவற்றை அடைவதற்குக் கிடைத்துள்ள வழி வகைகளையும் ஆராய்கின்றன. எடுத்துக்காட்டாக, எவ்வாறு முழு வேலை வாய்ப்பை உண்டாக்கலாம் என்பது பற்றிய தேற்றங் களை எடுத்துக்கொண்டால், அவற்றிலிருந்து நலத்தேற்றங்கள் மாறுபட்டனவாக இல்லை. இதே கருத்து, ஹிலா மியின்டின் (Hla Myint) நலச் சிக்கல்கள் பற்றிய பகுப்பாய்விலும் காணப்படு கிறது. தனிப்பட்டவரின் தேவைகள் கொடுக்கப்பட்டுள என்றும், மாறாதவை என்றும் எடுத்துக்கொண்டு, இத் தேவைகளை நிறைவு செய்வதில் பொருளியல் முறையின் இயக்கத் திறமையை மட்டும் நாம் ஆராய்கின்றவரையில் நலப் பகுப்பாய்வில் எத்தகைய தரஞ்சூழ் மதிப்புத் தீர்ப்புகளும் சம்பந்தப்படவேண்டிய அவசியமில்லை என்று அவர் கருதுகிறார்.[24]

பொருளியல் செயல்கள் (actions), நடைமுறைகள் (Practices) மதிப்பீடுகள் (Valuations) என்று அழைக்கப்படும் சில அடி விவரங்களை (Data) பொருளியல் விஞ்ஞானம் ஆராய்கிறது. அதேபோன்று அறிவியலை ஒரு விஞ்ஞானம் என்று சொல்ல முடியாவிட்டாலும், அறநெறிச் செயல்கள், நடைமுறைகள், மதிப் பீடுகள் ஆகியவற்றை அறவியல் முறையாக ஆராய்கிறது என்று சொல்லலாம். பொருளியல் விஞ்ஞானத்தில் உறுதிபடுத்தக் கூடியவை எனக் கூறப்படும் உண்மைகள் யாவும், உண்மையில் பரிமாற்றப் பொருளியல் ஒன்றில் தெரிவிக்கப்பட்ட மக்களின்

[23] Friedman, M: Essays in Positive Economics (Chicago 1953) p. 5

[24] Myint, Hla: Theories of Welfare Economics (London, 1948) p 199.

மதிப்பீடுகளேயாகும். "விஞ்ஞான அறிக்கைகள் (Statements), மதிப்பீடுகள் அல்ல; எனினும் அவை மதிப்பீடுகள் பற்றிய அறிக்கைகளே என்பதில் ஐயமில்லை.' இந்த வாதத்தின் அடிப்படையில், 'பொருளியல் நடைமுறையை (Economic Practice) அறநெறி நடைமுறையோடு (Moral Practice) தொடர்பு படுத்தக்கூடிய, அதே முறைப்படி, அறநெறிக் கோட்பாட்டுடன் பொருளியல் கோட்பாட்டைத் தொடர்புபடுத்த முடியும் என்னும் கருத்தினை ஏற்றுக்கொள்ளும்படி செய்ய' முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன.

நலப் பொருளியலை விஞ்ஞான முறைக்குப் புறம்பானது எனக் காரணங் காட்டிப், பின்னணியில் ஒதுக்கித் தள்ளும் போக்கை எதிர்க்கும் பொருளியல் வாதிகளில் ஆர்க்கிபால்டும் ஒருவர். குறிக் கோள்களைப் (Ends) பற்றிக் கவலைப்படுவது பொருளியலின் வேலையல்ல; அது மனிதருக்குக் குறிக்கோள்கள் உண்டு என்பதாகக் கருதிக் கொண்டு, அக்குறிக்கோள்களை அடையும் முயற்சியைச் செல்வாதாரங்களின் பற்றுக்குறை (Searcity of means) எவ்வாறு பாதிக்கிறது என்ற வினவை எழுப்புகிறது. ராபின்ஸின் இந்த விளக்கத்தை ஆக்கப் பொருளியலின் விவரணமாக (description) ஏற்றுக் கொண்டால், "நலப் பொருளியலை ஏன் தனியாக ஒதுக்கி வைக்க வேண்டு மென்பது புரியாத புதிராக இருக்கிறது.' அவர் நலப் பொருளியலில் மாற்று நடைமுறை ஒன்றைக் கூறுகின்றார்' தனிப்பட்டவர்களின் தனித்தன்மை வாய்ந்த தேர்வுமுறை ஒன்றை எடுத்துக்கொண்டு, கிடைக்கக்கூடிய தேர்வுகளைப் பல்வேறு ஏற்பாடுகள் எவ்வாறு மாற்றுகின்றன என்று வினவலாம். தேர்வுத் தெளிவிலக்கணத்தை (Choice Criterion) ஒரு நலக் குறியீடாக (Index of welfare) அழைப்பது வசதிக்காகவேயாகும். அதில் மதிப்புத்தீர்ப்புகளோ அல்லது விதியமைப்பு உட்பொருள் களோ (Prescriptive implication) அடங்கியிருக்கவில்லை.

மற்றொரு தீவிர நேர் காட்சிவாதி டி. டபிள்யூ, ஹட்சிசன் ஆவார். அவர் நலக்கோட்பாடுகளுக்கு அனுபவ அடிப்படையைச் (Empirical basis) சேர்க்கின்றார். அன்றாட நடவடிக்கையில் மன நிறைவுகள் 'இயல்கடந்தனவாகக்' (Metaphysical) கருதப்படாமல் 'அனுபவத்தில் சோதனை செய்யக்கூடியனவாகக் (empirically testable) கருதப்படுகின்றன. 'விஞ்ஞான காரியங்களுக்கெனக் குறிப் பிட்ட நிகழ்ச்சிகளுக்குத் துல்லியமான பொருள் விளக்கங்களைக் கூறி, இக்கோட்பாடுகளைச் சோதனைக்குரியதாக்க இயலும். எனவே, சோதிக்க இயலாத இயல்கடந்த மதிப்புத்தீர்ப்புகளை நலப்பொரு

ளியல் பயன்படுவதாகக் கூறி, அதைத் தூர எறிந்துவிட வேண்டுமென வாதிடுவதற்குக் காரணமே இல்லை'.[25]

'குறிக்கோள்களுக் கிடையில் பொருளியல் முற்றிலும் நடுநிலையானது' என்பதை நிறுவுவதற்குப் பேராசிரியர் ராபின்ஸாலும் இயலவில்லை. பொருளியல் குறிக்கோள்கள் எதுவுமில்லை என்றும், குறிப்பிட்ட குறிக்கோள்களை அடைவதற்குரிய பொருளியல் அல்லது பொருளியலற்ற வழிமுறைகள்தான் உண்டென்றும் கூறிய அவர் மேலும் தொடர்ந்து,' குறிப்பிட்ட குறிக்கோள்களை அடையும் முயற்சியினைப் பொருளியலற்றது என நாம் கூற இயலாது; ஏனென்றால், குறிக்கோள்கள் பொருளிலயற்றவை அல்ல; செல்வாதாரங்களின் தேவையற்ற செலவினங்களோடு குறிக்கோள்களை அடைய முயல்வதையே பொருளியலற்றது என்று சொல்லலாம்' என்கிறார். ஆனால், அவசியமற்ற செலவினம் என்பது தவறான செலவினத்தையே குறிக்கும்; பொருளியலற்ற செலவினம் தவறானது என்றால், 'சிக்கனம்' என்பது (Economy) அடையத் தக்க ஒன்று என்பது தெளிவாகிறது; சிக்கனம் என்பது ஒரு குறிக்கோள்; விரயம் தீங்கானது இவ்வாறாக, ராபின்ஸின் கருதுகோள்களிலிருந்து, 'நேர்மையான (Rational) தேர்வு, அதாவது, சிக்கனமான தேர்வு என்பது நாம் அடையத்தக்க ஒன்று என்றும், அக்குறிக்கோளை அடைவதில் பொருளியல்வாதி அலட்சியப் போக்குடன் இருக்க இயலாது என்றும் நாம் முடிவுசெய்ய நேர்கிறது. இவ்விதமாக, மனித நடத்தையையும், மனிதரின் தேர்வையும் அவற்றின் இயல்பான குறிக்கோளிலிருந்து தனித்துப் பிரிப்பதோ அல்லது முற்றிலும் குறிக்கோள்களுக் கிடையிலான பொருளியல் விஞ்ஞானம் ஒன்றை உருவாக்குவதோ நடைமுறையில் இயலாத காரியம்'. இவ்வகையில் ராபின்ஸின் கருத்து அளவுக்குமீறி ஒரு சார்புடையதாகக் காணப்படுகிறது.

பொருளியலின் குறிக்கோள் சமூகநலம் என்று கேம்பிரிட்ஜ் பொருளியலறிஞர்கள் குறிப்பிட்டார்கள். ஆனால் அக் குறிக்கோளைப் பொருளியலுக்கு வழங்க ராபின்ஸ் தயாராக இல்லை. ''பொருளியலுக்குக் குறிக்கோள்கள் இல்லை'' என்ற ராபின்ஸின் கூற்றைப் பேராசிரியர் பிரேசர் (Fraser) கானன் இருவரும் கண்டிக்கிறார்கள். ராபின்ஸ் பொருளியலைப் 'பின்னணிக்கு''த் (back brack) தள்ளிவிட்டார்; பொருளியல் வாதிகளிடையே பிளவை உண்டாக்கி விட்டார், சமூக நலத்தை உச்சநிலைக்கு உயர்த்துவதில் அக்கறை

[25] Hutchison, T. W: The Significance and Basic Postulates of Economic Theory — A Reply to Professor Knight—Journal of Political Economy, Vol. 49, 1941, p 743

கொண்டவர்களின் பரிவுணர்வைக் கெடுத்துவிட்டார்'' என்று அவர்கள் கருதுகிறார்கள்.

நியாயமாகச் சொல்லவேண்டுமானால், மதிப்புத்தீர்ப்புகளைக் கூறும் பொருளியல்வாதிகள் அனைவரையும் ராபின்ஸ் எதிர்பார்க்க வில்லை. மதிப்புத் தீர்ப்பை அவர் வெளிப்படையாகவே ஆதரிக்கிறார். அதற்குப் பொருளியல் என்ற பெயரைக் கொடுக்கவே அவர் மறுக்கிறார். சிலவற்றுக்குத் தவறான இடத்தில் முக்கியத்துவம் கொடுப்பது தான் அவர் செய்யும் தவறாகும்[26]

மதிப்புத் தீர்ப்பை ஒதுக்கித் தள்ளிவிட்டு அறிஞர் ஸ்டிக்ளர், எல்லாம் தழுவிய பொருள் நலத்திற்கு மாற்றுத் திட்டங்கள் கூற முயல்கிறார். பொருளியல் பகுப்பாய்வின் குறுகிய வரம்புகளைப் பொருத்தமான காரணங்களுடன் பொருளியல்வாதி மீறிச்செல்ல லாம். பொருளியல் கொள்கைக்கு இசைவுடைய சமுதாயக் குறிக் கோள்களை நிருணயிப்பதற்கு 'இரண்டாவது விதிமுறை' (Second discipline) ஒன்றை அவர் உருவாக்கலாம். இந்த விதிமுறையை, ஜே என். கெயின்ஸ் கூறியபடி, 'பயில் முறை அறவியல்' (applied ethics) என்று சொல்லலாம். இந்தப் பயில் முறை அறவியல் துறைக்கும் சிறந்த எதிர்காலம் உண்டு.[27]

இதேபோன்று, நலப்பொருளியல் மீக்கோள் தரங்களை விஞ் ஞானமுறையானதாகவும், ஆக்க முறையானதாகவும் ஆக்குவதற்கு அறிஞர் பென்ஹாம் (Benham) மேற்கொண்ட மூன்று மாற்றுகளை (alternatives) ஏற்கனவே குறிப்பிட்டோம் இவற்றுள் மூன்று வது மாற்று முக்கியமாகக் கருத்தில் கொள்ளத்தக்கது; ஏனெனில் அது நடைமுறைப்பயனுக்கு உகந்தாத இருக்கிறது. இது நலப் பொருளியலில் ஒரு மாறுதலையும் செய்யாது. இதன்மூலம், பொருள் நலத்தின் குறியீடுகளை Indicia) பொருள் நலமென்றே கருதலாம்; பொருள் நலத்தை முற்றிலும் குறிக்கோள்சார்ந்த கோட்பாடு என்றும் கொள்ளலாம். இதற்கு நாம் 'வாழ்வளம்' (Prosprity) என்ற மற்றொரு பெயரும் கொடுக்கலாம். அப்பொழுது, நமக்குத் தனியான வசதியானதொரு 'குறிக்கோள்தரம்' (objective standard) வேண்டியதிருக்கும். இந்தத் தீர்வின்கீழ் எல்லா யூகங்களையும் கூறிவிடலாம்; எல்லாவகை அளவுகளையும், ஆதாரங்களையுத் திட்டமாகவும் தெளிவாகவும் வகுத்துவிடமுடியும். இவ்வாறாக, விஞ்ஞான முறை விவாதங்களில்தனியார் தீர்ப்புகள் தலைகாட்டுவதற்கான வாய்ப்பை அடியோடு அகற்றிவிடலாம்.

[26] Wiles, P: "Crowth Versus Choice." Economic Journal June 1956. p 255

[27] Stigler G. J: "New Welfare Economice" American Economic Review June 1943, 355-358

# 7. பொருள் நலத்தை அளவிடல்

## நலப் பொருளியலில் முக்கிய கருதுகோள்கள் :

முந்திய அத்தியாயத்தில் மதிப்புத் தீர்ப்பு (Value judgmemt) பற்றி விரிவாக விவாதிக்கப்பட்டது. அதின், நலப்பொருளியலில் காணும் இரு முக்கிய கருதுகோள்கள் பற்றியும், அவற்றின் உட்பொருள்கள் (Implications) குறித்தும் ஆராய்ந்தோம். இக் கருதுகோள்கள் (1) நலத்தின் அளவிடுந் தன்மை அல்லது பயன்பாடு: (2) பயன்பாட்டின் ஒப்பிடுந் தன்மை (Comparablity) அல்லது ஆரக்கால் ஒப்பீடுகள் (Interpersonal Comparisons). பெரும்பாலான நூலாசிரியர்கள் (authors), பயன்பாடு (utility), மனநிறைவு (Satisfaction) என்ற சொற்களை ஒரே பொருளில் பயன்படுத்துகின்றார்கள். எனினும் இவ்விரண்டுக்கும் வேறுபாடு உண்டு. தனி நபரின் மனநிறைவுகளைக் குறிப்பிடப் பயன்பாடு என்ற சொல்லைப் பயன்படுத்தலாம்; இந்த மனநிறைவுகளுக்குச் சமுதாயம் அளிக்கும் மதிப்பைக் குறிப்பிடுவதற்கு 'நலம்' என்னும் சொல்லைப் பயன்படுத்தலாம். தனி நபர் மனநிறைவுகளின் ஆரக்கால் ஒப்பீடுகளில் கவனம் செலுத்துவதால், இந்த வேறுபாட்டைக் கருத்தில் கொள்வது மிக முக்கியமாகும். ஆனால், சமுதாயத்தின் பொருள் நலத்தை உச்ச நிலைக்கு உயர்த்துவதே நலப் பொருளியலின் நோக்கமாக இருப்பதால், சமுதாயத்தின் மனநிறைவுகள் குறித்த ஒப்பு மதிப்புகள் பற்றிய மதிப்புத் தீர்ப்புகள் சம்பந்தப்பட்டதாகவே உண்மையான சிக்கல் அமைந்துள்ளது.[1] ஆகவே, சமூகப் பயன்பாடு என்றால் என்ன? அதை அளவிடுவது எவ்வாறு? என்ற இரண்டுமே தீர்வு காணவேண்டிய முக்கிய சிக்கல்களாக உள்ளன.[2]

பயன்பாட்டின் ஆரக்கால் ஒப்பீட்டுத் தன்மை பற்றிய யூகம், நலப் பொருளியலின் ஒவ்வொரு பிரிவிலும் அடிநிலையாக அமைந்

[1] Winch, D. M. 'Consumer' surplus and compensation Principle, American Economic Review. June. 1965, p 406.

[2] Majumdar, T. 'Armstrong and the Utility Measurement controversy' Oxford Economic Papers February 1957, Vol. 9. No. 1. p 30.

இருக்கிறது; தொகுதி நலப் பொருளியலில் (group welfare economics) ஆரக்கால் ஒப்பீடுகள் பெற்றுள்ள இடம், 'மூலத்தத்துவங்களில்' (first principles) ஒன்றுசு விளங்குகின்றது. ஆரக்கால் ஒப்பீடுகளுக்கான யூகம் தவறானதென மெய்ப்பிக்கப்படுமானுல், முற்போக்கு வரிவிதிப்புத் திட்டத்தின் (Progressive Taxation) அடிப்படையாகக் கருதப்படும் குறைந்த முயற்சியால் நிறைந்த பலனை அடையும் கோட்பாடு (Theory of bcst aggregate sacrifice) முற்றிலும் பயனற்றதாகப் போய்விடும்.

பயன்பாட்டைப் பணத்தின் மூலமாக அளவிட முடியும் என்று தொன்மைப் பொருளியல் வாதிகளும் நம்பினுர்கள். இச்சிக்கல் குறித்து மார்ஷல் அதிகமாகக் கவலைப்படவில்லை; விருப்பங்களையோ (Desires) அல்லது அவற்றை நிறைவு செய்வதால் உண்டாகும் மன நிறைவையோ நேரடியாக அளவிடுதல் இயலாது என்றும், நினைக்கவும் முடியாதது என்றும் வற்புறுத்திக் கொண்டிருக்க முடியாது என்று அவர் தமது 'பொருளியல் தத்துவங்கள்' என்னும் நூலில் குறிப்பிடுகிருர். ஆனுல், விருப்பங்களையோ மனநிறைவையோ நேரடியாக அளவிடுதல் இயலாத காரிய மாதலால், பொருளியல் வழங்கியுள்ள அளவின் (Measurement) உதவியை நாம் மீண்டும் நாட வேண்டியுள்ளது; 'செயலுக்கான தூண்டல் (Motive) அல்லது இயக்கத் திறனை (Moving force) அளவிடுவதற்கான முறையையே பொருளியல் வழங்கியுள்ளது. இதையே செயலைத் தூண்டும் விருப்பங்களையும், அச்செயல்களினுல் உண்டாகும் மனநிறைவுகளையும் அளவிடுவதற்குப் பயன்படுத்தலாம்.' இவ்வாறு கூறுவதன் மூலம் நடைமுறையில் பயன்பாடுகளை அளவிட இயலாது என மார்ஷல் குறிப்பாகத் தெரிவிக்கிருர். ஆனுல், அவை அளவிட முடியாதவை என ஒரு கொள்கையாக அவர் வகுத்துக் கொள்ளவில்லை. 'இது நழுவிச் செல்வதற்குரிய ஒரு வழியாக அமைந்துள்ளது.'[3] மனநிறைவின் அளவானது மனத்தாலேயே அறியக்கூடிய ஒன்றுகையால், சடப் பொருள்களை அளவிடுவதைப் போல் மனநிறைவை அளவிட இயலாது. அளவுடைப் பருமானம் (Cardinal magnitude), படிநிலைப்பருமானம் (ordinal magnitude) என்ற பாகுபாட்டினை முதன் முதலில் வகுத்தவர் அறிஞர் எட்ஜ்வொர்த் ஆவார்.

'சமூக வாழ்வில் எதையும் அளவிடுவதற்கு எளிதான கருவியாக விளங்குவது பணம்'; அந்தப் பணத்தை அளவு கோலாகக் கொண்டு நலத்தை அளவிட முடியும் என்று பிகோ தமது 'நலப்பொருளியல்' என்னும் நூலில் நம்பிக்கையுடன் கூறுகிருர். ஆனுல் பணத்துக்கும்

[3] Pigou, A. C: Marshall and Currernt Thought. (London, 1953) p 41.

மனநிறைவு அல்லது பயன்பாட்டுக்கு மிடையிலான தொடர்பு நேரடியானது அன்று; விருப்பங்கள், வெறுப்புகள் மூலமாக அத் தொடர்பு உண்டாகிறது.' இச் சிக்கல் பற்றிய பிகோவின் ஆழ்ந்த கருத்துகளை நலப் பொருளியல் குறித்து அவர் பின்னர் எழுதியுள்ள கட்டுரையிலிருந்து அறிந்து கொள்ளலாம். 'இன்ப நுகர்வுகள் (Pleasures), மனநிறைவுகள், பயன்பாடுகள்' ஆகியவை ஆழ்ந்த பருமானங்களை (Intensive magnitudes) உடையவை; அளவிட முடியாதவை. அவற்றை வரிசையான அளபுடை எண்களுடன் (Extensive magnitude) ஒன்றுடன் தொடர்பு படுத்தி மறைமுக மாக அளவிட முடியும் என்பது உண்மைதான்.' 'மனநிறைவுகளை வரிசையான அளபுடை எண்களுடன் தொடர்புபடுத்தப் பணம் நமக்கு உதவி புரியாது; அந்த வகையில் மனநிறைவுகளை அளவிட இயலாது என்பதை நாம் ஒப்புக்கொண்டாக வேண்டும்.[4] கொள்கை யளவில், அளவிடும் தன்மைக்கும், நடைமுறையில் அளவிடும் தன்மைக்கும் உள்ள வேறுபாடு பற்றிக் கூறுகையில் 'ஒரிணைப் பருமானங்களுக் கிடையிலான வித்தியாசம் இன்னொரு இணைப் பருமானங்களுக் கிடையிலான வித்தியாசத்தைவிடக் கூடுதலாக அல்லது குறைவாக இருப்பதாகக் கொள்கையளவில் சொல்ல முடியுமானால் மனநிறைவுகளையும் கொள்கையளவில் அளவிட இயலும் என்பதை பிகோ ஒப்புக் கொள்கிறார். வித்தியாசங்களுக் கிடையிலான வித்தியாசங்களைப் பற்றிக் கூறவும் நம்மால் இயல வேண்டும். இதன் காரணமாகப் பயன்பாடுகளை நடைமுறையில் அளவிட இயலாது என்றாலும், கொள்கையளவில் இறுதிநிலைப் பயன்பாட்டு விளைகோடு ஒன்றைக் கற்பனை செய்து கொள்ளவும், அக்கோடு மேலும் கீழும் சாய்வாகச் செல்வதுடன் வலமிருந்து இட மாகச்செல்லுங்கால் அக்கோடு ஏறத்தாழச் செங்குத்தாகச் செல் கிறதுஎனக் கொள்ளவும் நம்மால் முடிகிறது. வேறு விதமாகச் சொல்ல வேண்டுமானால், 'இப்போதுள்ள விதியமைப்புகளின்படி, மனநிறைவுகளை நம்மால் அளவிட முடியாது என்றாலும், கொள்கை அளவில் அளக்க இயலும் என்றும், நடைமுறையில் அவற்றை அள விடுவதற்குரிய அளவுகோல் ஒன்றை வகுக்க முடியும் என்றும் கூறலாம்.

'உயர்வுகளை ஒப்பிடுவதற்கு உதவக் கூடிய குறைந்துசெல் பயன்பாட்டு விதியை (Law of Diminishing utility) நாம் ஏற்றுக் கொண்டால், பயன்பாட்டின் மொத்தங்களை (Totals) அளக்க முடியும்' என்பதைக் கணிதப் பொருளியல் வாதிகளில் சிலர், குறிப்பாக - டாக்டர் லாங் (Dr. Lange) நிரூபித்துக் காட்டி

[4] Pigou, A. C: 'Some Aspects of Welfare Economics' American Economic Review, June 1951 p 289—291.

யுள்ளார்கள். இக்கருத்தை பிகோ முற்றிலுமாக ஏற்றுக்கொள்கிறார். 'குறைந்துசெல் பயன்பாட்டு விதியானது உள்முக நோக்கின் (Introspective observation) வாயிலாக உறுதியாக நிலை பெற்றுவிட்டதாகத் தோன்றுகிறது; அதை எவ்விதமான கருத்தாய்வு வாதத்தினாலும் (abstract argument) அசைத்துவிட இயலாது' என்று பிகோ கூறுகிறார்.

பயன்பாட்டின் அளவிடும் தன்மையை (Measurability of utility) கருத்தில் கொள்ளாமல், நலப் பொருளியல் கோட்பாடு ஒன்றை உருவாக்குவதற்கு பாரிட்டோ முதல் எல்லாப் புதிய நலப்பொருளியல் வாதிகளும் முயற்சி மேற்கொண்டார்கள். பணத்தின் இறுதிநிலைப் பயன்பாட்டை மாறாததாக (Constant) எடுத்துக்கொள்ளலாம் என்ற மார்ஷலின் யூகத்தை பாரிட்டோ மீண்டும் மீண்டும் கண்டித்தார். பயன்பாட்டின் அளவிடும் தன்மை, ஒப்பிடும் தன்மை இவற்றைக் கருத்தில் கொள்ளாமலே பாரிட்டோ பகுப்பாய்வின் முக்கிய சூத்திரங்களை (Formulas) எல்லாம் நிரூபித்துவிடலாம். 'எவ்வகையாலோ விளக்கிக்கூறவும் அளவிடவும் கூடியதாக உள்ள பணத்திற்கு மாறாத இறுதிலைப் பயன்பாடு உண்டு என உண்மையில் கருத முடியுமானால், (ophelimity-ன் குறியெண்களை (indices) தள்ளிவிடக்கூடிய பெரும்பேறு நமக்கு உண்டாகும்' என்ற முடிவுக்கு பாரிட்டோ வருகிறார்.[5]

பயன்பாட்டை அளவிடுவதற்குரிய சீரான முறை ஒன்றை வகுப்பதற்கு இக்கால நலப் பொருளியல் வாதிகள் தீவிரமாக முயன்றுவருகிறார்கள். அதுபற்றி இவ்விவாதத்தில் நாம் விரிவாக ஆராயப் போவதில்லை. எனினும், பயன்பாட்டையும், நலத்தையும் அளவிட முடியும் என்று நம்புகின்ற சில பொருளியல் வாதிகளின் கருத்துகளைச் சற்றே சிந்திப்பது நலம். சமுதாயத்தின் பல்வேறு உறுப்பினர்களின் முக்கியத்துவத்தை நேரடியாக மதிப்பிடுவதற்கான முறையொன்றை ஆஸ்கார் லாங் (Oscar Lange) குறிப்பிட்டுள்ளார்.[6] நல முற்கோளை (Proposition) அவர் இரு பகுதிகளாகப் பிரிக்கிறார்: D u என்னும் ஏவரையை (Vector) உச்ச நிலைக்கு உயர்த்துவதை அடிப்படையாகக் கொண்டது முதற் பகுதி. வேறொருவருடைய பயன்பாட்டையும் குறைக்காமல், ஒரு தனிநபரின் பயன்பாட்டை உயர்த்துவதற்கு அனுமதிக்கின்ற நிலைமையைப் பற்றியது இது; (2) உச்ச நிலைக்கு உயர்த்தப்படுகின்ற

[5] Wilson, E. B: 'Pareto Versus Marshall' Quarterly Journal of Economics 1938. Vol. 53. pp. 648—649.

[6] Lange, O: 'The Foundations of Welfare Economics Econometrica July—October, 1942. pp. 213-224.

சமூக மதிப்புச் சார்பலன் (Social Value function) ஒன்றை உரு வாக்கவேண்டிய அவசியத்தை உண்டாக்குவது இரண்டாம் பகுதி. ஆகவே, உச்ச நிலைமையைப் பல்வேறு தனி நபர்களுக்கு அனுமதிக் சப்பட்ட பொருள்கள், வருமானங்கள் இவற்றின் அளவிலோ அல்லது தனி நபர்களின் இறுதிநிலைப் பயன்பாடுகளின் அளவிலோ குறிப்பிட முடியும். ஆனால், சமூக மதிப்பீட்டையோ அல்லது தனி நபர்களின் பயன்பாடுகளையோ அளவிட வேண்டிய அவசியமில்லை; அவற்றை முறைப்படுத்தினாலே (ordered) போதும். ஆனால், பயன்பாட்டை முறைப்படுத்துவது மட்டுமின்றி, அளவிடவும் இயலும் என்றும் ஆர்ம்ஸ்டிராங் தீவிரமாக நம்புகிறார்.[7]

பயன்பாட்டை அளவிட முயன்றவர்களில் தபாஸ் மஜூம் தாரும் (Tapas Majumdar) ஒருவர். அவர், 'இரு துருவங்களாக அமைந்துள்ள அளபுடைமைக் கொள்கைக்கும் (Cardinalism), நடத்தைக்கொள்கைக்கும் (Behaviourism) இடைப்பட்ட நடுநிலைக் கொள்கையைக் கையாள்கிறார்; இக்கொள்கை மிகவும் இசைவான தாகவும் நம்பக் கூடியதாகவும் அமைந்துள்ளது.'[8] இதன் தொடர் பாக அறிஞர் நைட் (Knight) தெரிவித்துள்ள கருத்து மிகவும் பொருத்தமாகவும், முற்றிலும் ஆதரிக்கத் தகுந்ததாகவும் விளங்கு கிறது. பயன்பாடு என்பது 'ஒருவகையில் அளவறி முறையில் அமைந்தது (Quantitative); ஏனென்றால். அகநிலையும் (Subjective state) அளவறி முறையி லமைந்ததேயாகும். அதே வகையில் பார்த்தால் பயன்பாடு, குறிக்கோள் இயல்பு (Objective quality) வாய்ந்ததாகவும் தோன்றுகிறது; ஏனெனில், அதை அளவிடுவதற் குரிய ஒப்புக்கொள்ளப்பட்ட வழி முறை எதுவும் கிடையாது'... 'அளவிடுவதற்குரிய வழிமுறை ஏதும் இல்லாதிருப்பதால், அக நிலைக்கும் குறிக்கோள் இயல்புக்கு மிடையே தெளிவான பாகுபாடு எதையும் காண முடிவதில்லை.'

## அளபுடைப் படிமுறைப் பயன்பாட்டுச் சர்ச்சை

பொருளியலில் ஆக்க—தரஞ்சூழ் சர்ச்சை மட்டுமின்றிப் பயன் பாட்டின் அளபுடைத் தன்மை (Cardinality) பற்றிய கருத்து வேறுபாடுகளும் நிலவி வருகின்றன. புதிய சம்பிரதாயப் பொரு ளியல் வாதிகள், நுகர்வோர் தேவை (Consumer demand) பற்றிய தங்கள் பகுப்பாய்வின் ஒருபகுதியாக அளபுடைப் பயன்பாட்டுக் கோட்பாட்டை வகுத்தார்கள். 'நுகர்வோரின் மனநிலை, அவ

[7] Armstrong. W. E: 'Determinateness of Utility Function' Economic Journal, September, 1939, pp. 453, 467.
[8] Majumdar, Tapas: Measurement of Utility. (London 1958) Foreword by Liord Robbins, P.X.

ருடைய விருப்பங்களின் அளவு, அவருக்காக இருக்கக்கூடிய மாற்று நடவடிக்கைகளினால் உண்டாகும் உளஞ்சார்ந்த ஆதாயங்கள், நாட்டங்கள் இவற்றின் அளவுகள் ஆகியவை பற்றிய தகவல்களைத் தெரிவிப்பதற்காக இந்த அளபுடைப் பயன்பாட்டு அளவு வகுக்கப் பட்டது.'

அளபுடைப் பயன்பாட்டுக் கோட்பாட்டு வாதிகள் கையாளுகின்ற பயன்பாடு, இறுதிநிலைப் பயன்பாடு, முழு மன நிறைவு, இவைபோன்ற சொற்கள், சம நோக்கக்கோடுகள், விருப்ப நிலை (Preferred position), விலை நிலைநிறுத்தக் கோடுகள் என்பன போன்ற சொற்களைவிட அதிகப் பொருத்தமானவையாகவும் புரிந்துகொள்ளக் கூடியனவாகவும் இருக்கின்றன. அளபுடைத் தன்மைவாதிகளும், படிமுறை வாதிகளும் அளவுக்கு மீறிய சர்ச்சையில் ஈடுபட்டுள்ளார்கள். பயன்பாட்டை அளவிடுவதற்குத் திட்டவட்டமான அளவுகோல் ஒன்றை உருவாக்க இயலும் என அளபுடைத் தன்மைவாதிகள் மிகையாக வலியுறுத்துகிறார்கள் என்றால், இரு நிலைமைகளுக்கும் இடையிலான வேறுபாட்டை அளவிடுவதற்கு முனையாமல் அவ்விரு நிலைமைகளையும் ஒன்றுக்குமேல் ஒன்றை வைத்து ஒப்பிடுவதுடன் நாம் நின்றுவிடவேண்டுமென்ற கருத்தைப் படிமுறை வாதிகள் அளவுக்கு அதிகமாகவே வற்புறுத்துகிறார்கள். ஆனால், நடைமுறையில் இரண்டுமே சரியானவை யல்ல.[9] பயன்பாட்டுச் சார் பலனை அறுதியிடுதல் (determinateness) பற்றி ஆர்ம்ஸ்டிராங்கும், ராதன்பெர்க்கும் எழுப்பிய இந்த அளபுடை-படிமுறைச் சர்ச்சையின் விளைவாக, அவர்கள் எழுதியுள்ள கட்டுரைகளிலும், மறுப்புரைகளிலும், கிடைத்தற்கரிய மிகப் பல உண்மைகள் நமக்குக் கிடைத்துள்ளன.

இங்கு பயன்பாட்டை அளவிடுவதற்காக நியூமான்—மார்கன்ஸ்டெர்ன் வகுத்துள்ள அளவீட்டு முறை பற்றிக் குறிப்பிடவேண்டியது இன்றியமையாததாகும். N-M அளபுடைப் பயன்பாட்டுக் கோட்பாட்டுக்கும், புதிய சம்பிரதாய வாதிகளின் பயன்பாட்டுக்கோட்பாட்டுக்கும் தொடர்பு யாதுமில்லை. அவற்றின் அளபுடைத் தன்மையைப் பொறுத்தவரையில் இவ்விரு பயன்பாட்டு அளவிடு முறைகளுக்குமிடையே பொதுவான அம்சம் ஏதுமில்லை.

நட்ட அபாயம் (Risk) ஏற்பட்டபோதிலும் சில நுகர்வோர் நடத்தையின் தனிப்பொருளை வலியுறுத்தி, அளபுடைப் பயன்பாட்டுக் குறியீட்டெண் (Cardinal utility index) ஒன்றை

[9] Hicks, J. R: 'The Measurement of Real Income' Oxford Economic Papers, New Series, June 1958, Vol. 10, No 2. p. 131

நியூமான் —மார்கன்ஸ் டெர்ன் விளையாட்டுக் கோட்பாடு உரு வாக்குகிறது. அந்தக் கோட்பாடு ஒரு நிலை இயக்கக் கோட் பாடாகும் (Static Theory); அதில், இனிவரும் பொருள்களிடை யிலான தேர்வுகளுக்காக நடப்பு மதிப்பீடுகள் (Current Valuations) முன் நிறுத்தப்படுகின்றன. ஆனால், உண்மையான எதிர்காலத் தின் மிக முக்கியமான இயல்புகளில் ஒன்றாகிய உறுதியின்மையை (uncertainty) உறுதியற்றதாக்குகின்ற (unfreezes) நிலையற்ற கோட்பாடாக (non-static theory) அது விளங்குகிறது. தேர்வு நிலையைப்பின் வருமுறையில் வகைப்படுத்திக் கூறலாம்; A அல்லது B பொருள் தொகுதியை ஒரு தனி நபர் விரும்புகிறாரா? — அல்லது C அல்லது D என்னும் பொருள் தொகுதியைப் பெறுவதற்குரிய குறிப்பிட்ட வாய்ப்பினைப் பெற அவர் விரும்புகிறாரா? இங்கு தேர்வு என்பது பல்வேறு பொருள் தொகுதிகளுக் கிடையி லானதல்ல; பொருள் தொகுதிகளைப் பெறுவதற்கான பல்வேறு **வாய்ப்புகளுக்** கிடையிலானதாகும். அப்படியானால், ஒவ் வொரு மாற்றிலும் இரண்டு அம்சங்கள் அடங்கியுள்ளன: (i) ஒரு நிலைமையிலிருந்து எதிர்காலத்தில் பொருள் தொகுதிகள் வெளிப் படுவதற்குரிய வாய்ப்பு. (ii) அவ்வாறு வெளிப்படும் பல்வேறு பொருள்களைப் பெறுகின்ற வாய்ப்பின் ஒப்புத்திறன்கள் (Relative strengths), இவ்விரு அம்சங்களில் எது மாறுதலடைந்தாலும், வாய்ப்பும் (Prospect) மாறுகின்றது. இது பற்றிய நியூமான்-மார்க்கன்ஸ்டெர்ன் கருதுகோள் இதுதான்: நட்ட அபாய வாய்ப்பு க..ரக (Risk prospects) உள்ள மாற்றுகளிலிருந்து தேர்வு செய்ய வே..டிய நிலை தனிநபருக்கு ஏற்படுமானால், கணித முறைப்படி பய..பாடு மிக அதிகமாக இருக்கும் என எதிர்பார்க்கக் கூடிய ஒரு மாற்றத்தைத்தான் அவர் தேர்ந்தெடுப்பார்.

எதிர்பார்க்கும் வாய்ப்புகளை (expectations), அதாவது எதிர் பயன்பாட்டை (expected utility) அறநெறிப்படி உச்ச நிலைக்கு உயர்த்தும் வகையில், தனி நபர்கள் தேர்வுகளைச் செய்தல் வேண்டு மென முதன்முதலில் கூறியதால் அவர்களுடைய கருத்துக்கு முக்கி யத்துவம் ஏற்பட்டுவிடவில்லை. மாறாக, இக் கருதுகோளை வருவிப்ப தற்குத் தேவையானதும், போதுமானதுமான முற்கோள்களின் (Postulates) தொகுதி ஒன்றை வகுத்தமையாலேயே அவர்களு டைய பணி முக்கியமானதாகக் கருதப்படுகின்றது.[10] 'அளபுடைப் பயன்பாடு பொருள் பொதிந்ததாக இருக்கும் வகையில் நடை

[10] Friedman, M: The Expected utility Hypothesis and the surability Journal of Political Economy, Vol. LX: December, 1952. p. 466.

முறை உலகை வரையறுத்துக் கூறுவதற்காக அவர்களுடைய முற்கோள் வகுக்கப்படவில்லை. மாறாக, அது நடைமுறை உலகைப் பற்றிய ஓர் உண்மையான முற்கோளாகும்;[11] இம்முற்கோளை அனுபவமுறைப்படி (Empirically) மறுத்து விடவும் கூடும்.

சூதாட்டம், இன்சூரன்சு ஆகியவற்றுக்கு நியூமான்-மார்கன்ஸ்டெர்ன் கோட்பாட்டை நடைமுறையில் பயன் படுத்தக்கூடிய சாத்தியத்தினால், வருமானத்தின் வளர்ந்து செல் இறுநிலைப் பயன்பாடு (Increasing marginal utility) பழைய கோட்பாட்டுக்கு முரணானதாக இருக்க வில்லை என்று புலப்படுகிறது. (பாரீட்டோ-ஹிக்ஸ்-அலென்-ஸ்லட்ஸ்கி வகுத்த மாதிரியிலான படிமுறைக் கோட்பாடே பழைய கோட்பாடு என்பதாகும். இப் பழைய கோட்பாட்டில், A,B என்ற ஒவ்வொரு இணைப்பொருள் தொகுதி மாற்றுகளையோ அல்லது A,B,C என்னும் ஒவ்வொரு மூன்றன் தொகுதி பொருள் மாற்றங்களையோ முறைப்படுத்தும்படி (order) தனிநபர் தற்காலிகமாகக் கேட்டுக் கொள்ளப் படுகிறார்).

நியுமான் – மார்கன்ஸ்டெர்ன் வகுத்த மாதிரியிலமைந்த அளபுடைப் பயன்பாட்டுச் சார்பலன் மூலமாக, மரபான நட்ட அபாயமற்ற (Riskles) அளபுடைப் பயன்பாட்டுச் சார்பலன் வாயிலாகப் புலனாகக்கூடிய செய்தியுடன் ஒப்பிடத்தக்க, அதே தரஞ்சூழ் இயைபுடைய (Normative relevance) விருப்பத் தூண்டல்கள் (Preference intensities) பற்றிய செய்தி புலனாகின்றது. வேறுவிதமாகச் சொல்ல வேண்டுமானால், இது ஒரு அனுபவக் கருதுகோள் (empirical hypothesis). 'அளபுடை முறையாலும், படிநிலை முறையாலும் வகுக்கப்பட்ட பயன்பாட்டுக் குறியீட்டெண்களுக்கு (utility indices) இடையில் மிக உயர்ந்த அளவு ஒத்திசைவைக் (Correspondence) காண நாம் முயல வேண்டும் என்பது இக் கருதுகோளின் உட்கருத்தாகும்.

உள்முக மகிழ்ச்சித் தூண்டலை (Introspective pleasure intensity) அளவிடுவதற்கு ஒருவகை அளவு முறையே வகுப்பது N. M. குறியீட்டெண்ணின் நோக்கமன்று. விளையாட்டுக் கோட்பாட்டை நியூமானும்( மார்க்ஸ்டெர்னும் வகுக்கும்பொழுது, நிகழ்ச்சித்தகவுகள் (Probabilities) சம்பந்தப்பட்ட படிமுறை நிலைமைகளுக்கான (ranking situations) அளபுடைப் பயன்பாட்டு அளவுமுறையை வகுத்தார்கள். இங்கு 'அளபுடை, (Cardinal) என்னும் சொல்

11 Baumol, W. J: The Neumann - Morgenstern utility Index - An Ordinatist View' Journal of Political Economy Vol. LIX. Feb. 1951, pp. 61-66

தவறாகக் கையாளப்படுகிறது. நியூமான்-மார்கன்ஸ்டெர்ன் வகுத்த அளவு முறையும் புதிய சம்பிரதாயப் பயன்பாட்டு அளவுமுறையும் ஒருபோலக் காணப்படுவதற்கு 'அளபுடை' என்ற சொல்லை இவ்வாறு தவறாகப் பயன்படுத்துவதே காரணமாகும்.

எனவே, பழைய வழக்குப்படி பார்க்கும்பொழுது N-M அளபுடைக் குறியீட்டெண் உண்மையில் அளபுடைப் பயன்பாடு அல்ல. 'கண்டிப்பான புதிய சம்பிரதாய வாதிக்கு, N - M, குறியீட்டெண் என்பது ஓநாய்த்தோல் போர்த்திய ஓரு ஆடு'; அவருக்கு அது படிமுறை அளவேயன்றி வேறெதுவுமில்லை'

பயன்பாட்டை அளவிடுவதில் உள்ளடங்கியுள்ள அகநிலைச் சிக்கல்களைக் (Subjeetive intricacies) கருத்தில் கொண்டு ஹிக்ஸ் கருதுவதுபோல், பயன்பாடு என்பது 'வெறும் புனைந்துரையே (mer construct); அது அளவிடுவதற்குரிய ஒரு பொருளாகப் போதுமான அளவுக்கு வரையறுத்துக் கூறப்படவில்லை' என்ற முடிவுக்குத் தான் நாம் வரவேண்டியிருக்கிறது. 'பயன்பாட்டை அல்லது நலத்தை அளவிடலாம் என்னும் கருத்து ஒரு முட்டுச் சந்து (blind-alley) போன்றதாகும். (Hicks) ஆனால், பயன்பாட்டை அளவிட இயலும் என்ற கருத்தை ஏற்காமல் ஒதுக்கித் தள்ளுவதன் விளைவாகப் பொருள் நலம் பற்றிய விவாதத்தில் அறவியல் அல்லது அரசியல் அடி விவரங்களை (data) நாம் 'இறக்குமதி செய்ய வேண்டிய இன்றியமையா நிலைமை உண்டாகும். அல்வாறு செய்யாவிடில் பல்வேறு நபர்களின் இலாப நட்டங்களை ஒப்பிட வேண்டிய அதாவது, வருமானத்தை மறு பகிர்வு (Redistribution) செய்ய வேண்டிய சங்கட நிலைமைகளை நம்மால் சமாளிக்க இயலாமல் போய்விடும்.

## பயன்பாட்டின் ஆரக்கால் ஒப்பீடுகள் :

நலப் பொருளியலில் அளவிடுதலைவிடப் பயன்பாட்டின் ஒப்பீடுகளுக்கான சாத்தியத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. 'இத்தகைய ஒப்பீடு மிக முக்கியமான ஒன்றாகும்; அளவிடும் தன்மை குறித்துக் கருத்து வேறுபாடு கொள்பவர்களும் அதன் முக்கியத்துவம் பற்றி உடன்படுகிறார்கள்.' ஆரக்கால் ஒப்பீடுகள் (Inter personal Comparisons) இயலாத காரியம் எனக் கூறுவோரின் கருத்து பற்றி பிகோ குறிப்பிடுகையில், 'இக் கருத்தைத் தெரிவிக்கின்றவர்கள், கொள்கையளவில் இந்த ஒப்பீடுகள் இயலாது எனக் கருதுவதாக நான் நினைக்கவில்லை. ஆனாலும், வசதியான நுட்பமுறை ஒன்றை உருவாக்காமல், ஒருவருடைய மனம் மற்ற ஒவ்வொருவருடைய மனத்தையும் ஆராய்ந்தறிய இயலாது என்

அவர்கள் எண்ணுவதாக நான் கருதுகிறேன்' எனக் கூறுகிறார். பயன்பாடுகளின் ஒப்பீடுகள் பற்றிய இக் கருதுகோள் மிக முக்கிய மான ஆதாரக் கல்லாக அமைத்துள்ளது; இதை அடித்தளமாகக் கொண்டுதான் நலப் பொருளியல் என்னும் மாளிகை எழுப்பப் பட்டுள்ளது. ஒப்பீடுகள் இயலாதவை என்ற கருத்து ஏற்றுக் கொள்ளப்படுமானால்: 'அது நலப் பொருளியலைத் தவிடு பொடியாக் கக்கூடிய பேரிடியாக அமைந்துவிடும்;' இக் கருத்து நலப் பொருளி யலைச் சீர்குலைப்பது மட்டுமின்றி, நடைமுறைச் சிந்தனைக்குரிய ஓர் அரிய சாதனத்தையே அடியோடு அழித்துவிடும்.' 'ஒப்புமை analo-gy), கூர்நோக்கு (observation) தொடர்பு (Intercourse) ஆகிய வற்றின் அடிப்படையில் முறையாக ஒப்பீடுகள் செய்ய முடியுமென பிகோ மனமார நம்புகிறார். தனி நபர்களுக்கிடையே ஒப்பீடு செய்ய முடியாவிட்டாலும்கூட, தனி நபர்களின் தொகுதிப் பிரதிநிதிகளுக் கிடையிலாவது இந்த ஒப்பீடு சாத்தியமேயாகும். நலப் பொருளிய லின் இந்தப் பிரிவு இயங்குவதற்கு நாம் செய்ய வேண்டியதெல்லாம் இவைதாம்.'

ஆரக்கால் ஒப்பீடுகளைச் செய்யும்பொழுது, சோதனை முறை ஒன்று இல்லாமையால், முறையான 'விஞ்ஞானத் துறையின் வரம்புக்கு அப்பால் சென்று விடுகிறார்கள் என்று குறை கூறப்படு கிறது. அறிஞர் ஹராட் இக்கருத்துபற்றிக் குறிப்பிடுகையில், இவ்வளவு விரைவில் இத்தகைய முடிவுக்கு வருவது சரியல்ல என்கிறார். 'பொருளியல் ஒரு முதிர்ச்சியடைந்த துல்லியமான விஞ்ஞானமாக இருக்குமானால், இந்த மறுப்புரைக் கருத்தை வலு வுடையதெனக் கருதலாம். ஆனால் உண்மையில் வரையறைக்குட் பட்ட ஒரு துறையில் அதன் வெற்றிக்குப் பலவகையான இடை யூறுகள் எதிர்ப்படுவதால், இத்தகைய கொள்கையை ஒரு பொரு ளியல் வாதி மேற்கொண்டது எள்ளி நகையாடுதற்குரியது என்னும் கருத்தை ஒப்புக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது.'

பொருள் நலம் பற்றிய குறிப்பு ஒன்றில் அறிஞர் மெல்வில் (Melville) மேலும் ஒருபடி மேற்சென்று, 'ஏழை பணக்காரர் இரு சாராரும் அடங்கிய பல்வேறு மக்கள் குழாங்களில் செலவினத்தை அனுபவிப்பதற்குச் சரிசமமான திறமை (Equal capacity) இருந்து வருகிறது என்பதை நிரூபிக்க முடியும்' என்று கூறுகிறார். ஆகவே, உயர்ந்துள்ள பொருள் நலத்திற்குரிய வருமான மறு பகிர்வுக்காகக் கொள்கைகளைப் பொருளியல் வாதி வகுக்கும்பொழுது, சமத்துவம் பற்றி ஏதோ ஒருவகை முற்கோளை (Postulate) யூகித்துக்கொள்ள வேண்டிய அவசியமமில்லை' என்றும் அவர் கருதுகிறார்.[12] ஆனால்,

12 Melville, L. G: 'Economic Welfare'. Economic Journal. September, 1934. p 523.

அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தேர்ந்தெடுத்த தனி நபர்களைக் கொண்ட தொகுதி முறை (Random grouping) ஏற்றுக்கொள்ளத் தக்கதல்ல. இதற்குப் பதிலாக, வேறொரு வகையான கருத்து தெரிவிக்கப்பட்டுள்ளது. மன நிறைவுக்கான திறமையில் எல்லா வேறுபாடுகளும் வலுவில் கொள்ளப்பட்டவை எனக் கொள்வோம். ஏழைகளின் தொகுதிகளுக்குச் சாதகமாக வருமானத்தை மறு பகிர்வு செய்வதன்மூலம் செலவினத்தை அனுபவிப்பதற்கான அதிகத் திறமையை அவர்கள் பெறுவதற்குரிய பணவசதி கிடைக்கிறது. தலைமுறைகள் தோறும் அவர்களுக்கு இந்த வசதி கிடைக்குமானால், சமூகநலம் உயர்வடையும். மன நிறைவுக்கான திறமையில் மாறுதல் உண்டாக வழிவகுக்கும் வகையில் பணத்தைப் பகிர்வு செய்வதற்குத் திருந்திய முறை ஒன்றை வகுப்பதற்கு இத்திட்டம் வகைசெய்கிறது.

கூடுதலான நலம் உண்டாவதற்கு எந்த அளவுக்கு வருமான மறு பகிர்வு நடைபெற வேண்டுமென்பதை அறிவது மேற்கண்ட திட்டத்தில் கடினமாக இருக்கிறது. வருமானங்களைச் சமப்படுத்துவதன் மூலமாக அனுபவிப்பதற்குரிய திறமைச் சமத்துவத்தை ஏற்படுத்திவிட இயலாது. எனினும், தொடக்கத்தில் ஒப்பிடுந்தன்மையை யூகித்துக் கொண்டு, பின்னர் சமூக நலனை உயர்த்துவதற்கு வருமானத்தை மறுபகிர்வு செய்யவேண்டுமென்று மட்டும் வலியுறுத்தும் கொள்கைக்கு இது ஒரு மாற்றாக அமைந்துள்ளது. பல்வேறு மக்களின் அனுபவிக்கும் திறன் பற்றிய உண்மை மதிப்புகள் துல்லியமற்றவையாகவும் தெளிவற்றனவாகவும் இருக்கின்றன; மேலும் அறநெறி மதிப்புகள் வெவ்வேறு விதமாகக் கூறப்படுகின்றன. இவ்விரு காரணங்களினாலும், வருமானப் பகிர்வுக்காகத் தெரிவிக்கப்படும் மாறுதல்கள் குறித்த கருத்து வேறுபாடுகள் எழுகின்றன. பயன்பாடுகளைத் துல்லியமாக ஒப்பிடமுடியும் எனக் கொண்டாலும், ஒரு தனி அறிநெறிக் கோட்பாடு இல்லாமல், செயல்விதிகள் (Imperatives) எதையும் வகுக்க இயலாது.[13]

ஆரக்கால் ஒப்பீடுகளை மறுப்பதனால் அபத்தமான (absurd) விளைவுகள் ஏற்படுகின்றன. நலப் பொருளியலில் மதிப்புக் கருதுகோள் (value premises) குறித்து ஆழ்ந்த ஆராய்ச்சிகள் நடத்திய அறிஞர் ஐ. எம். டி. லிட்டில் (I-M,D, little) 'ராபின்ஸின் தனித் தூய்மைக் கொள்கையை' (Purism) வன்மையாகக் கண்டிக்கிறார். விஞ்ஞான முறையிலான நல ஆரக்கால் ஒப்பீடுகள் சாத்தியமில்லை

[13] Streeten, P: 'Economics and Value Judgments'. Quarterly Journal of Economics. 1950. Vol. 64 pp 592-93

என்னும் கொள்கை, தொகுதி நலம் பற்றிய முற்கோள்களுக்கு (Propositions) பொருந்துவ தன்று, என்று அவர் காரணம் கூறு கிறார். பல்வேறு தனிநபர்களின் (அளபுடைப்) பயன் பாடுகளை ஒன்றாகக் காட்ட வேண்டுமெனத் தொகுதி நலம் பற்றி முற்கோள் கள் விதிவகுப்பதாக ஒருவரும் நம்பவில்லை என்ற ஒரே காரணத் தைக் கொண்டே இக்கொள்கை பொருத்தமற்றதெனக் கூறிவிட லாம். நடைமுறையில், நல ஒப்பீடுகளை அனுமதிப்பதற்கு எதிராகக் கூறப்படும் பொதுவான வாதங்களில் குறைந்தது ஒன்றாவது, நல ஒருங்கிணைப்பை (welfare aggregation) அனுமதிப்பதற்கு எதிரான வாதமாக அமைந்துள்ளது. மேலும், மனிதன் என்பவன் ஒரு சமூகப் பிராணி: எந்த ஒரு மனிதனும் தன்னுடைய அண்டை அயலவர்களைச் சார்ந்திராமல் முற்றிலும் தனித்து வாழ இயலாது: ஒவ்வொரு தனிமனிதனின் நலமும் ஓரளவுக்கு எல்லாருடைய நலத்தையும் பொறுத்திருக்கிறது. ஆகவே, நலம் என்பது சமூக உறுப்பினர்களின் கூட்டுத் தொகையை விட அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

ஏற்கனவே குறிப்பிட்டதுபோல், சமத்திறமைகளை யூகமாக ஏற்றுக்கொள்ள ஹராட் தயாராக இருக்கிறார். ஆனால் ராபின்ஸ் அதற்குத் தயாராக இல்லை. இந்த யூகம் 'உத்தரவாதம் செய்ய முடியாதது.' (unwarrantable) என்பது ராபின்ஸன் கருத்து. பயன் பாட்டின் ஆரக்கால் ஒப்பீடுகளின் விஞ்ஞானத் தகுதி பற்றி ராபின்ஸ் தெரிவித்துள்ள கருத்துகளுக்கு கால்டாரும் 'முழு உடன்பாடு'[14] தெரிவிக்கிறார். 'சமத்துவம் பற்றிய ஏதாவது ஒரு வகை முற்கோளை ஊகித்துக்கொள்ளாமலே, வருமான மறுபகிர்வு சம்பந்தமான கொள்கைகள் குறித்து விதிமுறைகளைக் கூறப் பொரு ளியல் வாதியினால் முடியும். பெரும்பாலான பொருளியல் சிக்கல் களுக்குத் தீர்வு காண்பதற்கு, இறுதிநிலை உயர்வுகளின் (Marginal increments) பயன் பாட்டை இரண்டு தனி நபர்களுடன் ஒப்பிட வேண்டியதில்லை; சமுதாயத்தின் தொகுதிகளுடன் (groups) ஒப் பிட்டாலே போதும். தனிநபர்களிடம் ஏற்படும் பொருளியல் விளைவுகளைக் கண்டறியும் ஆர்வத்தில் ராபின்ஸ் இந்த உண்மையை உணரத் தவறி விட்டார்'

ஆரக்கால் ஒப்பீடுகள் குறித்த ராபின்ஸின் கருத்தை கால்டார் நேரடியாக மறுக்காமல், விதியமைப்புக் கூற்றுகள் பொருத்தமற் றவை என மறுக்கிறார். பொருளியல் திறமையை அறிவதற்குரிய குறிக்கோள்சோதனையே நட்ட ஈடு (compensation) என்பதை

14 Robbins, L: 'Interpersonal comparison of utility. A comment. Economic Journal. December, 1938. pp. 135.

உணர்ந்துகொள்ள வேண்டுமென வலியுறுத்தும் கால்டார், அதன் அடிப்படையி லமைந்த விதிமுறைகள் யாவும் எத்தகை மதிப்புத் தீர்ப்போடும் தொடர்பு கொள்ளாத விஞ்ஞானத் தகுதி உடையனவாகும் என்கிருர்,[15]

ஆரக்கால் ஒப்பீட்டை யாரும் மறுக்க இயலாது. அவ்வாறு மறுப்பது, மற்ற உள்ளங்களும் (other minds) உள என்பதை மறுப்பதாகும். மற்றவர் எண்ணங்களுக்குச் சான்ருக நடத்தையை (Behaviour) ஒருவர் ஏற்றுக் கொள்வாராஞல், இந்தச் சான்றின் அடிப்படையில் ஒப்பீடு செய்யவும் இயலும் என்பதையும் அவர் ஒப்புக்கொள்ள வேண்டும்.

## பொருள் நலத்தை அளவிடல்

எல்லாத் தனி நபர்களின் பயன்பாடுகளேயும் அவற்றுக்கு உரிய மதிப்போடு ஒன்று சேர்த்துக் கூட்டிக், கூட்டுத் தொகையைக் காண் பது பொருள்நலத்தை அளவிடுவதற்குரிய எளிய நேரடியான முறையாகும். அவ்வாறு கூட்டுவதால் கிடைக்கும் சமூக நலச் சார்பலன் $W = \sum w_i u_i$. இதில் i-ஆவது தனிநபரின் பயன்பாடாகிய $u_i$-இன் கொடுக்கப்பட்ட மதிப்பு $w_i$. ஆனல், அளவீடு அல்லது கூட்டுத்தொகை (aggregation) என்பதே சர்ச்சைக்குரிய ஒரு கருத்தாகும். இச் சிக்கலேக் கருத்தில் கொண்ட பிகோ, சமுதாயத் தின் பொருள் நலத்தைக் கணக்கிடுவதற்குப் பயன்பாடுகளேக் கூட்டு வதற்குப் பதிலாகப் பயன்பாடுகளின் குறியீடுகளே (Indicators), அதாவது, தலா தேசிய வருமானத்தை (Per capital national dividend) அவர் சேர்த்துக் கூட்டுகிருர்.

பொருள் நலத்திற்கு இரு பரிமாணக் குறியீடுகளே (Two dimensional indicia) பிகோ வகுத்துள்ளார். அவை, (1) தேசிய வருமானத்தின் அளவு; (2) வருமானப் பகிர்வு. பொருள் நலத்தை உண்மையான வருமானத்துடன் தொடர்பு படுத்தியதன் மூலம் தேசிய வருமானத்தின் அளவில் ஏற்படும் மாறுதல்களேக் கணக்கிடு வதற்கு முழு விவரங்களடங்கிய அளவுமுறை ஒன்றை உருவாக்க பிகோவிஞல் முடிந்தது. இந்த அளவுமுறை பொருள்நலம் குறித்து பிகோ கூறியுள்ள பொருள் விளக்கத்திற்கு ஏறத்தாழ ஒத்ததாக இருக்கிறது. ஒரு தனி நபருக்கு முன்பொருதடவை கிடைத்த உண்மையான வருமானம் உயர்வாக இருக்குமாஞல், அதஞல் பொருள் நலத்திலும் ஓர் உயர்வு ஏற்பட்டாக வேண்டும். தனி

[15] Kaldor, N. Welfare Proposition Economics, Economic Journal September 1939 p. 549.

நபர்கள் தொகுதி (group) ஒன்றில், மாறுதலுக்குப் பிறகு பகிர்வானது முன்பிருந்ததை விட வேறுபட்டதாக இருக்குமெனில், உண்மை வருமானத்தில் இனி ஏற்படவிருக்கும் ஓர் உயர்விஞல்; பொருள் நலத்திலும் இனி ஓர் உயர்வு உண்டாகும் என்று நாம் கூறலாம். பிஷரின் (Fishers) சீரிய குறியீட்டெண்களை (Index Numbers) பிகோ கையாள்கிருர். வருமானம் (அல்லது உற்பத்தி), பகிர்வு ஆகிய இரண்டுக்குமிடையிலான வேறுபாட்டைக் குறிப்பிட்டுக், 'கொடுக்கப்பட்டுள்ள' ஆரம்ப மாற்றைவிடச் சிறந்ததாக அல்லது மோசமானதாக இருக்கக் கூடிய மாற்றுகள் (alternatives) பற்றிய சிக்கலில் கவனத்தைத் திருப்ப, மாதிரி (Model) ஒன்றை பிஷர் உருவாக்குகிருர்;[16] ஆனல், தேசிய வருமானம் பற்றிய பிகோவின் பொருள் விளக்கத்திற்கு இசைவானதாக இருக்க வேண்டுமெனில், சுவைகளிலும் (tastes) பகிர்விலும் ஏற்படும் மாறுதல்களைக் கணக்கிடுவதற்குரிய ஓர் அளவு முறை இன்றியமையாத தாகும்.

பொருள் நலத்தின் ஓர் குறியீடாக (Indicator) உண்மை வருமானத்தைக் கொள்ளும் இந்தக் கொள்கையை அறிஞர் ஹிக்ஸ் தம்முடைய ஆராய்ச்சிக் கட்டுரைகள் பலவற்றில் விரிவாக ஆராய்ந்துள்ளார்.

உண்மை வருமானத்தை மதிப்பிடுவது குறித்து ஹிக்ஸ் இரண்டு முக்கியமான வாதங்களைத் தெரிவித்துள்ளார்; (1) இயல்பான வடிவில் (real terms) அளவிடுதல் என்பது, பயன்பாடு குறித்த அல்லது அடக்கவிலை (cost) பற்றிய மதிப்பீடு (valuation) என்றே பொருள்படும். இந்தப் பொருள்கள் (Meanings) கொள்கையளவில் வேறுபட்டவை; (2) பயன் பாட்டு அளவையானது, பயன்பாடுகளின் ஒருங்கிணைப்புச் சாத்தியத்தைச் சாராமல் தனித்து இயங்குவதாகும். முதலாவது வாதம் எதிர்ப்புகளைச் சமாளித்து நிலைபெற்று விட்டது. அதன் நடைமுறை விளைவுகள் குறித்து கஸ்னட்ஸ் (Kuznets) மற்றும் சிலர் கண்டனங்கள் தெரிவித்த போதிலும், பாகுபாடு பற்றிய கோட்பாட்டுத் தகுதியை யாராலும் மறுத்துப் பேச முடியவில்லை. இரண்டாவது வாதத்தின் குறைபாடுகளை (fallacies) ஹிக்ஸ் மற்றொரு ஆராய்ச்சிக் கட்டுரையில் சுட்டிக் காட்டுவதுடன், அத்தவறுகளைத் திருத்தி, சாமுவல்சன் எழுப்பும் மறுப்புகளுக்கும் பதிலளிக்கிருர்,[17] உண்மை வருமானத்தின் அடக்கவிலை அளவையைத் தூர ஒதுக்கி விட்டுப் பயன்பாட்டு

[16] Fisher. F. M: 'Income Distribution Value Judgments and Welfare. The Quarterly Journal Economic Vol. LXX Aug. 1950 p. 388-424.

[17] Samuvelson P. A: Evaluation of Real Income. Oxford Economic Papers new series Vol II: 1950

அளவை மீது அவர் தமது கவனத்தைச் செலுத்துகிறார். அவர் தமது ஆராய்ச்சி நெடுகிலும், PQ மாதிரியிலமைந்த ஓர் எளிதான விலை மதிப்புக் குறியீட்டெண்ணைக் கையாள்கிறார்.

முதலில், 'உருமாதிரியான நலச்'சிக்கலை (typical welfare problem) இருநிலைமைகளின் ஒப்பீடாக ஹிக்ஸ் எளிதாக்கி விடுகி றார். இவ்விரு நிலைமைகளில் ஒன்று இயல்பான நிலைமை (actual position) ; மற்றொன்று உத்தேச மாற்று நிலைமை. பிறகு, அவர் இந்த மாற்றுகளுக்கிடையிலான தேர்வைப் பகுப்பாய்வு செய்ய முயல்கிறார். 'இது ஒரு பயனுள்ள பகுப்பாய்வாகும்; மொத்த உண்மை வருமானத்தில் ஏற்படும் மாறுதலாயும், அவ்வருமா னத்தைப் பகிர்வு செய்வதில் ஏற்படும் மாறுதலையும் பாகுபடுத்திக் காட்டி, இயல்பான A-இலிருந்து உத்தேச B-க்குச் செல்வதால் உண்டாகும் மாற்றத்தை உற்பத்தி சார்ந்த கூறுகளாகவும் (Prouductional Components), பகிர்வு சார்ந்த கூறுகளாகவும் (Distributional Components) பகுப்பது அறிவார்ந்த செயலாகும்' என்று ஹிக்ஸ் கூறுகிறார்.

நடப்பு உற்பத்திப் (current output) புள்ளியின் வழியாகச் செல்கின்ற கூட்டுச் சமநோக்க வளைகோட்டின் வளைதளப் பரப்பை (Surface), உண்மை வருமானம் (Real income) என்று ஹிக்ஸ் குறிப் பிடுகிறார். எனவே, அந்த வளைதளப்பரப்பில் பொருத்தமான சில நிலையளபுருக்களைக் (Parameters) கணக்கிடுவதாகவே இந்த அளவிடும் சிக்கல் அமைந்துவிடுகிறது. ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட மாறுதலைப் பொறுத்த வகையில் ஒருபடித்தாக (Homogeneous) உள்ள உறுப்பினர்களைக் கொண்ட தனித் தனிக் குழுக்களாகச் (groups) சமுதாயத்தை உட்பிரிவு செய்வதன் மூலமாகவும், ஒவ்வொரு தனிக் குழுவிலும் ஏற்படும் வருமான விளைவுகளைக் (income effects) கருத்தில் கொள்வதன் வாயிலாகவும் முன்னர் குறிப்பிட்ட வருமானப் பகிர்வு தொடர்பான சங்கடங் களைச் சமாளிக்க இயலும்'

நலப் பகிர்வை அளவிட இயலாது என்ற சிக்கல் எதுவும் எழவில்லை. அளபுடைப் பெயர்த் தொகுதிகளை (Cardinal nomencalture) எதிர்பார்க்க இயலாது எனினும், கொள்கை யளவில் படிமுறை வரைபடம் (ordinal mapping) வரைவது இயலும். படிமுறை வரைபடத்தில் m- பரிமாண இடைவெளி யில் (dimensional space), ஒவ்வொரு பகிர்வும் ஒரு புள்ளி யாகும்; ஒவ்வொரு பரிமாணமும் ஒரு தனி நபரின் பயன்பாடு

அல்லது நலத்தின் அளவைக் குறிக்கின்ற தன்னிச்சையான ஒரே சீரான குறியீட்டெண்ணின் arbitrary monotone index) மதிப்புகளைக் குறிப்பிடுகின்றது, இதன் ஒரு குறிப்பிட்ட வடிவமே சாமுவல்சனின் பயன்பாட்டுச் சாத்திய நியமப்பாதையாகும் (utility possbility locus). இரு நபர்களுக்கான பயன்பாட்டுச் சாத்திய வரை கோட்டை (படம் 5-இல்) காணலாம். $P_1$, $P_2$, $P_3$ ஆகியவை




குறிப்பிட்ட பொருள் தொகுதியின் (Commodity bundle) முழு மொத்தத் தொகையைக் (lumpsum) குறிப்பிடுகின்றன; ஒவ்வொரு வளைகோடும் (curve) வெவ்வேறு பொருள் தொகுதியைக் குறிக்கிறது. மறுபகிர்வைப் பின்வருமாறு விளக்கலாம்' $P_1$-இல் A என்ற ஏதேனும் ஒரு புள்ளி ui-இன் மிக அதிக அளவு சாத்திய மதிப்பு (highest posssible value) என்று நிருணயிக்கப்படுகிறது. இரண்டாவது நபரின் நலக் குறியீட்டெண் OB ஆக இருக்கும் வகையில் முதல் நபருக்கும் இரண்டாம் நபருக்கும் இடையில், $P_1$-ஆல் குறிக்கப்படுகின்ற பொருள் தொகுதியை மறுபகிர்வு செய்வதன் மூலம் மிக அதிக அளவு சாத்திய மதிப்பு Ui) பெறப்படுகிறது. பொருத்தமான பொருள் தொகுதி கொடுக்கப்பட்டிருக்குமானுல், பலவிதச் சாத்திய மறு பகிர்வுகளின் மூலம், OP-இன் அளவை அறிய முடியும்.[18]

ஆனுல், ஹிக்ஸ் கூறியுள்ள இந்த முறைமை பயன்பாட்டுப் பொருளில் உண்மை வருமானத்தைக் குறிப்பிடத்தக்க

[18] Rothenberg. J: Measurement of Welfare. (New Jersey 1961) pp 63-64.

அளவில் அளவிடுவதற்கு வழிசெய்யவில்லை. நலப் பொருளியலுக்கு மட்டும் தனி முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கொள்ளப்படும் சில குறிப்பிட்ட அம்சங்களைக் கருத்தில் கொண்டு கீழ்க்கண்ட மறுப்புகள் தெரிவிக்கப்படுகின்றன: முதலாவது மறுப்பு மறுபகிர்வு பற்றியதாகும். B என்ற நிலைக்கு ஒத்த வகையில் A என்னும் நிலையில் வருமானத்தை நாம் மறுபகிர்வு செய்யலாம் என்பதற்கு எவ்வித உத்தரவாதமும் இல்லை. பொருள் தொகுதியின் அமைப்பில் எவ்வித மாறுதலும் ஏற்படாத வகையில் வருமானத்தை மறுபகிர்வு செய்யலாம் என்ற உத்தரவாதமும் இல்லை. இரண்டாவதாக - பொருள் தொகுதியின் அளவும் அமைப்பும் மாறுதலடையும் போது, 'அதே' வருமானப் பகிர்வுகளின் இயல்பு எவ்வாறு இருக்கும் என்பது ஐயத்திற் கிடமாக உள்ளது. மூன்றாவதாக - A, B என்ற இரு நிலைகளுக்குமிடையிலான ஒப்பீட்டுக்கு ஒரே ஒரு தனித் தரத்தை (Standard) மட்டும் பேராசிரியர் ஹிக்ஸ் நம்புவதும் எதிர்ப்புக்குரியதாக அமைந்துள்ளது. A என்ற வருமானப் பகிர்வுக்கு ஏற்ற முறையில் B என்னும் தொகுதிகளைப் பகிர்வு செய்யக் கூடிய நடுநிலை ஒன்றை ஏன் மேற்கொள்ளக்கூடாது என்பதற்குத் தர்க்க முறையிலான காரணம் எதுவும் கூறப்படவில்லை.

எனவே, ஒரு பொருள் தொகுதி அளவையைக் கையாளலாம் என்ற ஹிக்ஸின் கருத்தைப் பலவகைக் காரணங்களுக்காகத் தள்ளி விட முடியும். ஒரு தனி நபரின் நலத்தை அளவிடுவதாக இருப்பினும் அளவு கோலுடன் அளவையும் மாறுதலடைகிறது. இந்தக் குறைபாட்டை ஹிக்ஸ் தாமே குறிப்பிட்டுள்ளார். ஒன்றுக்கு மேற்பட்ட தனி நபர்களைக் கொண்ட ஒரு சமுதாயத்தில் பொருள் தொகுதி அளவையைப் பயன்படுத்துவதால், அந்த அளவுகோல் ஒரு சார்புடையதாக ஆவதுடன், அளவும் தவறாகப் போய்விடுகிறது. விருப்பங்களின் அடிப்படையில் ஒரு படித்தான குழுக்களாகச் சமுதாயத்தை உட்பகுப்பு செய்வதிலும் இது உதவியாக இல்லை. எல்லா உறுப்பினர்களின் வருமானமும் சரிசமமாக இல்லாமலோ, எல்லாப் பொருள்களும் வருமானத் தேவை நெகிழ்வு அலகு (Unit income elasticity of demand) ஒன்றை உடையதாக இல்லாமலோ இருக்கும் வரை, முற்றிலும் ஒருபடித்தான குழுவுக்குரிய இந்த அளவையானது ஒரு சார்பானதாகவும், தவறானதாகவுமே அமையும்.[19]

நலத்தில் ஏற்படும் மாறுதல்களை அளவிடுவதற்குப் பொருளியல் அமைப்பின் (economic organisation) செயல் திறனைச் சோதிப்

[19] Wellisz, Stanislaw: A Note on the Measurement of Real Income Oxford Economic Papers. New Sevics. Feb. 1960. Vol. 12 No. 1 pp 112-121.

பதற்கு ஆலோசனை தெரிவிக்கப்பட்டுள்ள பல்வேறு அளவை முறைகளில் (Measures) மூன்றை முக்கியமாகக் குறிப்பிடலாம். முதலாவதாக - சமுதாயத்திற்கு நன்மை பயப்பது எது என்பதை ஆராய்ச்சியாளர் தாமே முடிவு செய்துகொண்டு, அச்சோதனையின் மூலமாகப் பொருளியல் அமைப்பின் செயல் திறத்தை அவர் மதிப்பிட வேண்டும். இந்த முறை விஞ்ஞான்முறைப்படி அமைந்ததல்ல என்று ஒரு சாரார் கண்டிக்கிறுர்கள். இரண்டாவதாக - பல்வேறு முறைகளால் பெறப்படும் வெவ்வேறு அளவுகளை ஒருங்கிணைத்து மொத்தமாக்கிப் பார்க்கவேண்டும். இதுதான் மார்ஷல், எட்ஜ்வொர்த், பிகோ ஆகியோர்[2] கையாண்ட முறையாகும். இந்த முறையும் ஏற்புடையதன்று. ஏனென்றல், உள்ளடங்கிய பகுதிகளின் (Component Parts) மதிப்பைக் கணக்கில் கொள்ளாமல், மொத்தமாகக் கூட்டுவது குறைவுடையதாகும். இந்த முறையினுல் பலன்கள் உண்டாகக்கூடும். ஆனுல், அவற்றின் துல்லியம் ஐயத்திற்கிடமானதாக இருக்கிறது. மூன்றுவது முறை கால்டார் தெரிவித்ததாகும். பொருளியல் முறையின் பொதுத் திறனைச் சோதிப்பதற்கு நட்டஈட்டுத் தத்துவத்தைப் பயன்படுத்துவதே இந்த முறையாகும்.

பொருளியல் மேம்பாட்டின் தலா வருமான அளவு முறையில் குறைபாடுகள் காணப்படுவதன் காரணமாக, வருங்காலத்தில் எதிர்பார்க்கப்படும் தலா வருமானத்தின் முதலீடாக்கிய Capitalised) மாற்று அளவை (alternative measure) ஒன்று ஆலோசனை கூறப்பட்டுள்ளது. இதில் வருங்காலத்தில் எதிர்பார்க்கப்படும் தலா வருமானம், நடப்பு வருமானத்தைமட்டுமின்றித் தனிநபர்களின் எதிர்கால வருமானத்தையும் பொறுத்ததாக அமையும்; மேலும், நடப்புப் பொருள் நலத்துக்கு எதிர்கால மேம்பாடும் எத்துணை அவசியமானது என்பதையும் இந்த முறை மிகத் தெளிவாக உணர்த்துகின்றது. அமெரிக்க நகரங்கள் பலவற்றில் பொருள் நலத்தைக் கணிப்பதற்கு இந்த முறைதான் கையாளப்படுகிறது.

பொருள் நலத்தை அளவிடுவதற்கு டின்பெர்கென்ஸ் (Tinbergens) வகுத்த முறையும் இங்கு குறிப்பிடத்தக்கதாகும். நுகர் பொருள்கள், முதலீட்டுப் பொருள்கள் ஆகியவற்றிற்கு ஒரு நாடு செய்த செலவினத்தின் மதிப்புதான் (X) அந்நாட்டின்

[20] Burton. A. W: An Expected Income Measure of Economics Welfare Journal Political Economy. August. , 1962 p. 355

Weisbrod. B. A: 'An Expected Income Measure of Economic Welfare' Journal of Political Economy August 1962. p. 357, 366.

நலத்தைக் குறிப்பிடுவதற்கு மிகவும் தகுதி வாய்ந்த தனி எண் (figure) ஆகும். நலத்தை ஒரு பரிமாணமுடையதாகக் கருத முடியாது. 'X-ஐ முழுமையாக்குவதற்கு மக்களில் சில குழுவின ரிடையே X-ஐப் பகிர்வு செய்வது குறித்துக் குறைந்தது ஒருசில தோராயக் குறிப்புகளாவது அவசியம்.' சமுதாயத்தின்இரு பெரும் 'வர்க்கங்களுக்கு' (classes) இடையிலான பகிர்வைக் குறிக்கும் சாதனமாக (Indicator) உண்மையான மொத்த உழைப்பு வருமான மாகிய (Total real labour income) 'L'-ஐ எடுத்துக்கொள்வதும், வேலை பார்ப்போருக்கும் (Employed), வேலையில்லாதோருக்கும் (unemployed) இடையிலான பகிர்வைக் குறிப்பிடும் சாதனமாக வேலை வாய்ப்பாகிய (Employoment) a-ஐ எடுத்துக் கொள்வதும் மற்ற இரு பயனுள்ள கருதுகோள்கள் (Concepts) ஆகும்.

X என்னும் இந்த அளவும் நாட்டின் உற்பத்திப் பொருள்களின் அளவும் ஒன்றல்ல. அது நாட்டின் செலவினமாக ஆவதற்கு அதன் ஒரு பகுதியாவது பரிமாறப்பட வேண்டும்; உற்பத்திக்கான (Productivity) ஒரு நிலையிலிருந்து இன்னொரு நிலைக்கு மாறு கின்றபொழுது, அதன் மதிப்பை இந்தப் பரிமாற்றம் மாற்றி விடக்கூடும். உற்பத்தித் திறனில் ஏற்படும் உயர்வு, நலத்தில் உயர்வு ஏற்பட வழிவகுகின்றது என்னும் பழைய கருத்தைத் தவறாகப் புரிந்து கொள்ளலாகாது. பல சந்தர்ப்பங்களில் பின்விளைவுகள் (Consequences) பலதரப்பட்ட இயல்புகளை உடைய தாயிருக்கின்றன. உற்பத்தித் திறன் பெருக்கத்தினால் எல்லாச் சமயங்களிலும் உண்மையான மொத்தச் செலவினம் (Total real expenditure) அல்லது தொழிலாளர்களின் உண்மை வருமானம் (real workers income) உயர்ந்துவிடும் என்று சொல்ல இயலாது

டால்டனும் மற்றப் பொருளியல்வாதிகளும், பொருள் நலத்தைப் பெறுவதற்குரிய வழி வருமானந்தான் என்ற யூகத் திலிருந்து ஆரம்பித்துப், பகிர்வுத் தரப்பில் தற்போதைய வருமான ஏற்றத்தாழ்வுகளைக் குறைத்துக்கொண்டு, வளர்ந்துசெல் மொத்தப் பொருள் நலச் சாத்தியம் (Possibility of increasing total economic Welfare) பற்றி ஆராய்கிறார்கள். 'முழுமையான வருமானச் சமத்துவம் விரும்பத்தக்க தல்ல என்றாலும், இன்றையச் சமுதாயங்களில் காணப்படும் பெருத்த ஏற்றத்தாழ்வைப் பெரு மளவில் குறைப்பதால் பொருள் நலம் வெகுவாகப் பெருகும் என்பதில் ஐயமில்லை.'

21 Tinbergen J: 'The Influence of Productivity in Economic Welfare' Economic Journal, March. 1952. pp. 68-69

வருமான மறுபகிர்வு பற்றிய சிக்கலில், பொருளியல் கோட்பாட்டுக்கு மிகக் குறைந்த அளவு முக்கியத்துவமே உண்டு. உடனடியான குறிக்கோளை அடையும் சாதனமாக அன்றி, மிகுதியான சில குறிக்கோள்களை அடைவதற்குரிய வழி துறையாக மறுபகிர்வைக் கருதும் பொழுதுதான், கொள்கைகளின் நல்வியல்புகள் (Merits) குறித்துப் பொருளியல்வாதி தமது கருத்தை இன்னும் அதிகமாக வலியுறுத்திக் கூற வேண்டியவராக உள்ளார். ஒரு குறிப்பிட்ட மறுபகிர்வைச் செயலாக்குவதற்குரிய மாற்று வழிகளில் எதைத் தேர்ந்தெடுப்பது என்ற நிலை பொருளியல் வாதிக்கு உண்டாகுமானுல், 'அவற்றின் ஒப்புப் பொருளியல் திறனை அல்லது மறுபகிர்வுக்கான பல்வேறு வடிவங்களின் நல அம்சங்கள் குறித்து, முறையாக ஆராய்வதற்கான வாய்ப்பு அவருக்குக் கிடைக்கிறது.'[22] ஹராட் இதற்கு மாறுன கருத்து ஒன்றைத் தெரிவிக்கிறுர். அவர் கருத்துப்படி, வருமானப் பகிர்வானது சமூக, அரசியல் சக்திகளின் துலாக்கோலுடன் (Balance) நெருங்கிய தொடர்புடையதாக இருப்பதால், அதைப்பற்றி ஆராய்வது பொருளியல்வாதியின் ஆராய்ச்சி எல்லைக்கு அப்பாற்பட்டது.'

நலத்தை அளவிடுவதற்குக் குறை ஏதும் இல்லாத, எல்லோரும் ஏற்றுக் கொள்ளத்தக்க அளவுமுறை ஒன்றை வகுக்க இயலுமா என்பது ஐயத்திற்கிடமாகவே உள்ளது. 'பொது நலத்தை' (general Welfare) அல்லது முழு மனநிறைவை அளவிடுவதற்கு ஒருதனி அளவுமுறை எதுவும் இருக்க முடியாது. 'நடைமுறை விவகாரங்களில் முக்கியமெனக் கருதப்படுவது இந்த அம்சமல்ல. எனினும் இதை ஒரு தனி அளவாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கும் வரையில், நலத்தின் அளவை நாம் பெறமுடியும்: அதனுல், முக்கியமான சிக்கல்கள் தீர்ந்துவிடும்,'[23]... பொருள் நலம் என்ற கோட்டையே உதறித் தள்ளிவிடுவதில் பென்ஹாம் மிகுந்த ஆர்வம் காட்டுகிறுர். ஒவ்வொரு ஆளுக்குமான சராசரித் தேசிய வருமானத்தைக் குறிக்கோள் குறியீடுகளாகக் (objective indicie) கொள்ளலாம் என்றுகூறும் அவர் 'நலப் பொருளியல்' முழுவதுமே பெரும்பாலும் குறிக்கோள் குறியீடுகள் பற்றியதாக இருக்கிறதே யன்றிச் செல்வாதாரங்களின் அக நிலைகளைப் (Subjective States of mine) பற்றியதாக இல்லை என்று இதற்குக் காரணம் கற்பிக்கிறுர். 'பயன்பாட்டுக் கோட்பாடு என ஏற்றுக் கொள்ளப்பட்டி

22 Peacock. A. T: Income Redistribution and Social Policy (Londen. 1958) p. 41.

23 Rado Mysler. A: 'Economic Welfare and Economic Policy Economics, August 1946. p. 201

ருப்பது உண்மையில் அகப்பகுப்பாய்வு என்ற திருடப்பட்ட சொல்லைக் கொண்டு வழங்கப்பட்டுள்ள குறிக்கோள் சார்ந்த விலைக் கோட்பாடேயாகும்' என்பதை வைனரும் (Viner) ஒப்புக் கொள்கிறார்.

'ஐயுறவு வாதிக்கும் (Sceptic) நேர்காட்சி வாதிக்கும் (Positivisit)' இடையே நடைபெறும் இந்த விவாதத்தில் நம்முடைய நிலை என்ன என்பதை நாம் தீர்மானிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். அதாவது நேர்காட்சி வாதியின் உடனடி முடிவுகளை (Summary Conclusions) ஏற்றுக் கொள்வதற்கு நேர்காட்சி வாதக் கோட்பாடு போதுமானது என ஒப்புக் கொள்ளலாமா என்பதை நாம் முடிவு செய்தாக வேண்டும். பொருள் நலத்தை அளவிடுவதற்கு ஏதாவது ஒரு வழியில் குறியீட்டெண்களைப் பயன்படுத்தியாக வேண்டும். மேலும் பொருள் நலத்தை மேம்படுத்துவதற்கு அரசியல் பொருளியல் எதைக் குறிக்கோளாகக் கொண்டிருக்கிறதோ அதை நேரடியாக அளவிட இயலாது என்னும் உண்மையிலிருந்தே குறியீட்டெண் 'சிக்கல்' முழுவதும் அல்லது பெரும்பாலும் எழுகிறது என்ற உண்மையினையும் நாம் உணர்ந்துகொள்ள வேண்டியது அவசியம்.

இதுகாறும் தெரிவிக்கப்பட்டுள்ள அளவு முறைகள் யாவும் குறைபாடுடையவை என்பதையே மேற்கொண்ட பகுப்பாய்வு தெளிவாக்குகிறது. தேசிய உற்பத்தி பற்றிய விவரங்களும், தேசிய வருமானப் புள்ளி விவரங்களும் பொருளியல் முறையின் திறமையைத் தோராயமாகக் குறிப்பிடக் கூடுமேயன்றி, அதற்கு மேல் அவற்றால் ஒரு பயனும் இல்லை. 'தனிப்பட்ட நுகர்வோரின் மன நிறைவை அளவிடவோ அல்லது வெவ்வேறு நபர்களின் மன நிறைவை ஒப்பிட்டு ஒன்றாகக் கூட்டவோ ஒரு அளவுகோலை உருவாக்க நம்மால் இயலாது; எனவே தேசிய நலத்தை அளவிடுவது நம்மால் முடியாது' என்பது சைட்டோவஸ்கியின் கூற்று.

மனநிறைவுக்குரிய சரிசமமான திறமை (equal capacity for satisfaction) உண்டு என்னும் முற்கோளினால் (Postulate) பெருந் தொல்லைகள் ஏற்பட்டுள்ளன; எனவே அக்குறிக்கோளை அறிவார்ந்த முறையில் பயன்படுத்த வேண்டுமெனில் அதை இன்னும்[24] சீராக செம்மைப்படுத்த வேண்டும். மனநிறைவைச் சம்பந்தப்படுத்தாத சமத்துவ முற்கோள் ஒன்று இன்னும் அதிகப் பொருத்தமானதாகவும் சாத்தியமானதாகவும் இருக்கும்.

[24] Robbins L : Interpersonal Comparison of Utility Economic Journal. December. 1938. p. 640.

பயன்பாட்டு வளைகோட்டுப் பகுப்பாய்வின் (utility curve analysis) உதவி கொண்டு, பயன்பாட்டை அளவிடும் சிக்கலை ஏறத் தாழத் தீர்த்துவிட முடிகிறது என்றும் அது பயன்பாட்டின் பங்கை விலக்குகிறது, திருத்தியமைக்கிறது, வலுப்படுத்துகிறது என்றும் ஒரு கருத்து நிலவுகிறது; இதற்கு மாறாக, 'நடப்புப் பயன்பாட்டி லிருந்து நலப் பகுப்பாய்வுக்கும், அதேபோல் நலப்பகுப்பாய் விலிருந்து நடப்புப் பயன்பாட்டுப் பகுப்பாய்வுக்கும்[25] எவ்வித இலாபமும் கிடைப்பதில்லை என்றும் ஒரு சாரார் கருதுகிறார்கள். இந்நிலையில், ஹிக்ஸின் கருத்தையொட்டிப் பயன்பாடுகளின் அள விடும் தன்மை அல்லது ஒப்பீட்டுத் தன்மை பற்றி ஒருவர் தாம் விரும்பும் எவ்விதக் கருத்தையும் மேற்கொள்ளலாம்; எனினும் அக் கருத்து நலப் பொருளியல் வாதியின் வேலிக்கு' உட்புறம் அல்லது வெளிப்புறம் அமைந்திருக்க வேண்டுமா என்பது இன்னும் உறுதி யிடப்படாத ஒன்றாகவே இருக்கிறது.

---

[25] Alchain, A. 'The Meaning of Utility Measurement' American Economic Review, 1953 p. 50.

# 8. திறனாய்வு

**தொகுப்புரை:**

பொருளியல் கோட்பாட்டில் நலப் பொருளியல் ஒரு மையமான இடத்தைப் பெறுவதற்கு எதிராகக் கூறப்படும் கண்டனம் குறித்து முந்திய பிரிவுகளில் விரிவாக ஆராய்ந்தோம். நலப் பொருளியல் என்ற பெயரில் அழைக்கப்படும் கோட்பாட்டுக்குப் பொருளியலில் விஞ்ஞானத் தகுதி கிடையாது என்பது ராபின்ஸின் கூற்று. இதற்குப் பதிலளிக்க வேண்டுமானல், இக்கூற்று சரியானதன்று என்றும், மதிப்புத் தீர்ப்புகளின் உட்பொருள்களை ஆயாய்வது பொருளியல் பகுப்பாய்வின் 'சட்டபூர்வமான காரியமே' (legitimate exercise) என்றும் நாம் சுட்டிக் காட்ட வேண்டியுள்ளது. பொருளியல் பகுப்பாய்வின் 'அரசாட்சி எல்லைக்கு' Imperlal domain) உட்பட்டதே நலப்பொருளியல். மனித நடவடிக்கைகள் யாவும் சுயமேம்பாடு (sel -betterment) அல்லது சுயநலத்தை இறுதிக் குறிக்கோளாக உடையவை என்பதிலிருந்தே மேற்கண்ட கருத்து தெளிவாகும். அதேபோன்று, ஒன்றுபட்ட மக்கள் தொகுதியின் (Corporate body) 'நலமே' அரசாங்கத்தின் குறிக்கோள்ஆகும்[1]. எனவே பொருளியல் வாதி, மார்ஷல் கூறுவதுபோல் வாழ்க்கையின் 'இந்த இறுதிக் கோள்களில் கவனம் செலுத்த வேண்டும்' என்பதில் சிறிதும் ஐயமில்லை. இறுதி மேம்பாடு பற்றிய இந்த நம்பிக்கையை மனத்தில் கொண்டுதான், பொருளியல் பேராசிரியர்களை நியமிக்கக் கொடையாளர்கள் நிதி உதவியளிக்கிறார்கள்; பொருளியல் சொற்பொழிவுகளை மக்கள் கேட்கிறார்கள்; பொருளியல் நூல்களை வாங்குகிறார்கள்! உண்மை இவ்வாறிருக்க, 'மேம்பாடு, (better off) என்றால் என்ன என்பதைத் தங்களால் புரிந்துகொள்ள இயலவில்லை என்பதாகக் கூறிக் கொண்டு ராபின்ஸ் போன்ற பொருளியல் போசிரியர்களும்

[1] Galbraith' J: K: The Affluent Socieiy (Bosten 1958) p 1.

Metha J. K: A,Social Welfare. Refinement Political and Economic Theory of the End of the State' IndianEconomic Journal 1935 Vol. 16, p: 196.

'இந்த ஆராய்ச்சியைச் சீர்குலைக்க'[2] 'முயல்வது வியப்பாக இருக்கிறது.

நலத்திற்குத் தெரிவிக்கப்பட்டுள்ள பொருள் விளக்கங்களின் பலதரப்பட்ட இயல்பு காரணமாக நலத்தின் உள்ளடக்கத்தில் (Content) தொலை நோக்கம் (Perspective) காணப்படவில்லை என்பது உண்மைதான். இதன் காரணமாகவே, இப்பொருள் பற்றி எழுதிய பல்வேறு எழுத்தாளர்களிடையே முரண்பாடுகளும், ஒருமைப்பாடின்மையும் காணப்படுகின்றன. பொருள்நலம் என்னும் சொல் சர்வ சாதாரணமாகப் பயன்படுத்தப்படுகிறது; ஆனால் வரையறை யற்றது (indefinite); அதற்கு, எல்லோரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய திட்டவட்டமான ஒரு தனிப் பொருள் விளக்கம் இதுவரையில் கூறப்படவில்லை.

நலப் பொருளியல் விஞ்ஞானத் தகுதியைப் பெறவேண்டுமானால் அது விதி வகுத்தலை (Prescribing) அதிகமாக வலியுறுத்தக் கூடாதென்றும், மாற்றுக் கொள்கைகளிலிருந்து தேர்வு செய்வதற்கு உதவும் ஒரு சாதனமாகவே அது பயன்பட வேண்டும் என்றும் ஒரு சாரார் கருதுகிறார்கள். ஆரக்கால் ஒப்பீடுகள் (Interpersonal Comparisons) செய்வது இயலாதென்றும், விஞ்ஞான முறைக்கு முரணானதென்றும், அதனால் இத்தகைய மதிப்புக் கருதுகோள்கள் (Value premises) பற்றி விதியமைப்புக் கூற்றுகளைக் (Prescriptive statements) கூறுவது அனுமதிக்கத் தக்கதல்ல என்றும் இவர்கள் வாதத்திற்கு முக்கிய காரணங்களாகக் கூறுகிறார்கள். இன்னும் சற்று யதார்த்த முறையிலான கருத்தை ஹராட் தெரிவித்துள்ளார். விதியமைப்புகளைச் செய்வது அனுமதிக்கத் தக்கதே என்பது அவர் கருத்து. 'பயன்பாட்டின் ஒப்பிட இயலாத் தன்மையை விடாப்பிடியாக வற்புறுத்திக் கொண்டிருந்தால் நலக்கருத்தாளர்களின் (Welfare school) விதியமைப்புகளை (Prescription) மட்டுமின்றி, எல்லா வகையான விதியமைப்புகளையுமே ஒதுக்கித் தள்ள வேண்டியதிருக்கும்;'[3] உற்பத்தியிலும் பரிமாற்றத்திலும் 'காரண காரியத் தத்துவங்களின் (Cause and effect) சில தெளிவற்ற தொடர்புகளை (obscure connnections) வெளிப்படுத்துவதைத் தவிர' அரசுக் கொள்கைகளில் தங்கள் செல்வாக்கை நிலை நாட்டுவதில் ஆர்வம் காட்டாத ஒரு போக்கையே பொருளியல்வாதிகளிடையே பொதுவாகக் காண முடி.

2 Nath. S. K: 'Are Formal Welfare Crite ion Required? Economic Journal. September, 1964 p. 574.

3 Harrod. R. F :Scope and Method of Economics'Journal. 1938, pp. 396r397.

கிறது. ஆயினும், அரசின் கொள்கை எவ்வாறு இருக்க வேண்டும் என்பதற்குத் தெளிவிலக்கணங்களை (Criteria) வகுப்பதற்குப் பொருளியல் வாதிகளில் பலர் விரும்புவதும் உண்மையே. நலக் கோட்பாட்டின் இன்றியமையா இயல்புகளைப் பற்றிப் பொருளியல் வாதிகள் போதுமான அளவில் அறிந்துகொள்ள வில்லை. எனினும். 'கோட்பாட்டை நடைமுறையோடு இணைக்கும், தங்களுடைய முயற்சியில், 'கொள்கைக்கு அரை குறை வழிகாட்டி. (rough guide to policy) என்ற 'வரம்பிற்குள்' (within limits) விரிவுரையாளர்கள் (elucidators) என்ற வகையில் அவர்கள் நமக்கு உதவியாக இருப் பார்கள். பொருள் நலத்தை உருவாக்கும் இந்தச் சிறிய காரியத் திற்கும், கொள்கைகள் பற்றிய மூன்று முக்கிய 'குறுக்குப் பாகு பாடுகளை'' (cross classifications) ஒருவர் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியது அவசியம். அவை, (1) கட்டமைப்புச் சீரமைவு (Structural adjustments) மாறுபட்ட இறுதிநிலைச் சீரமைவுகள் (Marginal adjustments); (2) நடுநிலை நோக்கங்களுக்கு (Considerations of equity) ஒப்பான திறமை நோக்கம் (consideranions of efficiancy); (3) இரண்டாவது சிறந்த வகைக் கொள்கைக்கு ஒப் பான கற்பித இலட்சியக் கொள்கை (utopian policy).

நலப் பொருளியல் தனது தொன்மை வடிவில் (classical form) சமூக உத்தமத்தை (Social optimum) அடைவதற்கு நிறைவுப் போட்டியை (perfect competition) ஆதரித்தது. பின்னர் லெர்னர், ஆஸ்கார் போன்ற திரிபுச்' சோசலிசப் பொருளியல்வாதிகள்' (Sophisticated socialist economists) இந்த வாதங்களைச் சோச லிசத்திற்கு ஆதரவாகப் பயன்படுத்தினார்கள். சந்தைப் பொரு ளியல் (Market economy) ஒன்றில், நிறைவுப் போட்டி இயலா தாகையால், முதலாளித்துவத்தின் (Capitalism) கீழ், ஒரு சமூக உத்தமத்திற்குரிய இறுதிநிலை நிபந்தனைகளை (Marginal Conditons) நிறைவு செய்யலாகாது என்றும், அதையே நோக்கமாகக் கொண்ட திட்டமிடப்பட்ட சோசலிசப் பொருளியல் ஒன்றில்தான் அவ்வாறு நிறைவு செய்ய இயலும் என்றும் அவர்கள் வாதிட்டார்கள்.

திட்டமிட்ட பொருளியல் (Planned economy) ஒன்றில் ஒரு துல்லியமான விலை நிருணய முறையைப் (Pricing system) பயன் படுத்துவதில் கோட்பாடு அல்லது தர்க்கமுறைச் சிக்கல்கள் ஏதும் எழவில்லை என்பது நிருபிக்கப்பட்டுள்ளது. தலையிடா முறைகளி லிருந்து (Laissez faire systems) திட்டமிட்ட பொருளியல் சிறிதளவு மாறுபடுகிறது; எனவே அது பொருளியல் நுண்கணிப்புச் சிக்கல்களைத் (problems of economic calcules) தீர்ப்பதற்கு அவற்றைவிட அதிகத் தகுதியுடையதாக இருக்கிறது. இதன் விளை

வாக மத்திய ஆட்சி (Central authority) ஒன்றின் கட்டுப்பாட்டில் இயங்கும் ஒரு தொழில் முறையில் (Industrial system), ஒரு பொருளியல் அல்லது பயன்பாட்டு நுண்கணிப்பைத் (utilitarian calculus) தேடிக் காண்பதற்கான முயற்சியைக் கைவிடுவதற்குக் காரணம் ஏதுமில்லை என்ற லெர்னரின் கருத்துக்கு அண்மைக் காலமாக ஆதரவு பெருகி வருகிறது.

## பிகோவின் பகுப்பாய்வும் - பிகோவிற்குப் பிற்பட்ட பகுப்பாய்வும்

முறைமையியலைப் பொறுத்த வரையில் பிகோ தம்முடைய குருவாகிய மார்ஷலையே பின்பற்றுகிறார், ஆனால் அவர் தமது ஒரு பகுதிப் பகுப்பாய்வில் (Partial analysis) மட்டுமே வெற்றி பெற்றிருக்கிறாரேயன்றி, முழுமையாக வெற்றி பெற்றுள்ளதாகக் கூற இயலாது. பிகோவின் முறையை இரு பகுதிகளாகப் பிரித்து, நட்ட ஈட்டுத் தத்துவத்தின் (Compensation principle) வாயிலாக அவருக்கு கால்டார் ஆதரவு நல்குகிறார். இவ்விரு பகுதிகளுள் முதலாவதில், மொத்த உற்பத்தியைப் (aggregate production) பெருக்குதல் பற்றிய எல்லாக் குறிக்கோள்களும், (propositions), வேலை வாய்ப்பை உயர்த்துவது தொடர்பான எல்லாச் சிக்கல்களும், சமூக நிகர உற்பத்திப் பொருள்களைச் சரிசமமாக்குதலும் (Equalisation social net products), இறுதிநிலை அடக்க விலைகளுடன் (Marginal costs) விலைகளைச் சமமாக்குதலும் ஆகிய அனைத்தும் அடங்கியுள்ளன. இப்பகுதிதான் பொருளியல்வாதிக்கு 'உறுதியான நிலைக்களன்' (sure ground) ஆகும். இதில், கொள்கை பற்றிய அவருடைய கூற்றுகளை யாரும் மறுத்துப் பேச இயலாது. இரண்டாவது பகுதிதான் முறைமையியல் காரணங்களுக்காக மிகுந்த கண்டனங்களுக்கு உள்ளாகியுள்ளது. இதில் எவ்வித விதியமைப்பிலும் ஈடுபடாமல் பொருளியல்வாதி கவனமாக இருக்க வேண்டும்; சில அரசியல் குறிக்கோள்களை ஈடேற்றுவதற் குரிய பல்வேறு வருமுறைகளின் ஒப்புச் சாதகங்களைச் (Relative advanteges) சுட்டிக் காட்டுவதுடன் அவர் நின்றுவிட வேண்டும். நலப் பொருளியல் பற்றிய பல்வேறு எழுத்துகளில் இது போன்ற முரண்பாடுகளைத்தான் நாம் காண்கிறோம். எனினும் 'பொருள் நலம் குறித்து முடிவுகளுக்கு வருவதில் விஞ்ஞான ஆய்வு முறைகளைப் பொருளியல்வாதிகள் பயன்படுத்தவில்லை; முறை ஏதும் இல்லாமையால் முறைமையியல் (Methodology) ஏதும் இருக்க இயலாது' என்ற லிட்டிலின் கூற்றை நியாயமான விமரிசனமாகக் கொள்ள முடியாது. 'ஒரு செயலில் இறங்குவதற்கு முன்னதாக' அச் செயலுக்குரிய முறை குறித்து எப்பொழுதும் விவாதித்துக் கொண்டிருப்பது சமூக விஞ்ஞானங்களே

(Social Sciences) ஆகும். உண்மையிற் பொருளியல் அத்தகைய சமூக விஞ்ஞானங்களுள் ஒன்றன்று;'[5]

எந்த ஒரு பொருளியல்வாதியின் முழு உழைப்பையும் பயன் படுத்திக் கொள்ளக் கூடியதாகவும் நலப் பொருளியல் தோன்ற வில்லை. பொருளியல்வாதிகள் இத்துறையில் 'சிறிதுநேரம்' பொழுது போக்கி விட்டுப், பிறகு அதைவிட்டுச்சென்று, பின்னர்'மனச்சாட்சி யின் உறுத்தல் (Troubled) காரணமாக மறுபடியும் இத்துறைக்குத் திரும்பி வருவது வழக்கமாக இருந்து வருகிறது. இதனாலேயே, நலப் பொருளியல் பற்றிய வாதங்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்டனவாக வும், ஒரே சீராக இல்லாமலும் அமைந்திருப்பதுடன், வேதனை தரத்தக்க அளவுக்கு இணைவுப் பொருத்தமின்மையும்; (distressing disconnectedness)[6] ஏற்பட்டுள்ளது. இந்த முக்கிய குறைபாட்டை நீக்குவதற்கு லிட்டிலின் திறனாய்வுரை (Critique) வெகுவாக உதவி யிருக்கிறது. மேலும் நலப் பொருளியல் குறித்து அண்மையில் வெளி வந்துள்ள நூல்களின் பலனைப், பொருளியலின் பிரிவுபற்றி மேலும் ஆராய்ச்சிகள் நடத்துவதற்குப் புதிதாகப் பல வாய்ப்புகள் ஏற் பட்டுள்ளன.

பொருளியல் அமைப்பின் (Economic organisation) செயல் திறனை (effeciiveness) மதிப்பிடுவதற்கு, ஒரு சமநிலையில் (Equili-brlum) பொருளியல் முறையை (Economic system) அவை எவ்வாறு பாதிக்கின்றன என்பதை மட்டுமின்றி இயக்க முறையில் (Prosses of movement)அதை அவை எவ்வாறு பாதிக்கின்றன என் பதையும் நாம் ஆராய்தல் வேண்டும். இதில், நலத்தை உச்சநிலைக்கு உயர்த்தும் செயல் கோட்பாடு (Concept of welfare maximising course), அதாவது, இயக்கநிலைச் சூழலில் (Dynamie setting) அமைந்த நலப் பொருளியல் அடங்கியுள்ளது. விரைவாக இயங்கி வரும் இன்றைய உலகில், நிலை இயக்க நலத்தெளிவிலக்கணங்களைப் (Static Welfare Criteria) பயன்படுத்துவதில் நாம் எச்சரிக்கை யோடு நடந்து கொள்வதற்கு இயக்க ஆற்றல் வாய்ந்த இவ்வகைப் பகுப்பாய்வு நமக்குத் துணைபுரிகிறது. மேலும், விளைவியல் பொரு ளியல் (applied economiis) துறையிலும் இது முக்கியமானது. ஏனென்றால், நீண்டகாலப் பலன்கள் (long-run benefits) ஏற்படும் என வாக்குறுதியளிக்கும் கொள்கைகள், இயக்க நிலையிலும் (dyna-

[5] Klappholz, K and Agazzi, J: Methodological Prescriptions in Economics'. Economics, Feberuary 1959, p. 73

[6] Mishan. E. J: 'A Survey of Welfare Economics, 1939-1959 Economic Journal, June 1960 p. 197.

mic), நிலை இயக்கத்திலும் (Static), ஒருவேளை சீரானவைகளாக இருக்கலாம்; ஆனால், இடைக்கால நிலைகளுக்கென (Transitery situations) வகுக்கப்பட்டுள்ள கொள்கைகளைத் 'தகுந்த தயக்கத்துடன்' நிலை இயக்க நலத் தெளிவிலக்கணங்களினால் (Static Welfare Criteria) மட்டுமே மதிப்பிட வேண்டும். நலப் பொருளியல் பற்றிய மரபான முற்கோள்கள் (Traditional propositions) பலவற்றுக்கு இயக்கநிலைக் குறுக்கு விசாரணையினால் சிறிதும் தீங்கு நேராது.

திட்டவட்டமான, ஆக்க முறையிலான முடிவுகள் எதையும் செய்ய இயக்கநிலை 'நலப்பொருளியல் வழி வகுக்காது என்றும், அதனால் அத்தகைய இயக்க நிலை நலப்பொருளியல் ஒன்று வளர்ச்சியடைவது ஐயத்திற் கிடமானது என்றும் விட்டில் கருதினர். அவருடைய இக் கருத்து சிறிதும் நியாயமானதன்று; ஏனென்றால், நலப் பொருளியல் துறை இன்னும் வெற்றிகரமாக ஆராய்ந்தறியப் படவில்லை. நிலை இயக்க நலப் பொருளியல் (Static welfarc economic) கால அம்சங்களைக் கருத்தில் கொள்ளாமையால், அதுபற்றித் தெரிவிக்கப்படும் கண்டனங்கள் நியாயமானவையே. இக்கண்டனங்களின் கடுமையினையும் (seriousness) நியாயத்தையும் மதிப்பிட வேண்டுமானால், ஒப்பீட்டுத் தரமாக (Standard of Comparison) உதவக்கூடிய வகையில், நலப் பொருளியலின் இயக்கநிலை மாதிரி (Dynamic model) ஒன்றை ஒருவர் வைத்துக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம்.

அண்மைக் காலமாக நடவடிக்கை ஆராய்ச்சி (operation research), செயல் பகுப்பாய்வு (activity analysis), முழுமைப்பொருள் செயல்முறை வகுப்பு (Integer programming) முதலிய புத்தம் புதிய துறைகளில் நலப் பொருளியல் கையாளப்பட்டு வருகிறது. நடவடிக்கை ஆராய்ச்சி மாதிரியாலமைந்த, அரசினரின் தனிப்பயன் சிக்கல்கள் (Specific problems) பற்றிய பகுப்பாய்விலும் இது பயன்படுகிறது. நடவடிக்கை ஆராய்ச்சியாளர்களுக்குப் பயிற்சிச் சாதனமாகவும் இது பயன்படுகிறது. எடுத்துக் காட்டாக, புறச் சிக்கனங்கள் (external economics), சிக்கனக் கேடுகள் (diseconomics) பற்றிய கருத்தின் மூலமாக ஒரு நிறுவனத்தின் பல்வேறு பிரிவுகள் ஒவ்வொன்றுக்கும் உத்தம விளைவுகளை உண்டாக்கவல்ல கொள்கைகள் குறித்து நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் எனக் கற்றுக் கொண்டிருக்கிறோம்; ஏனெனில், அந்நிறுவனத்தின் பிற பகுதிகளில் அதன் முடிவுகளின் விளைவுகளைக் கருத்தில் கொள்ளாவிட்டால், பிரிவு வாரியான கொள்கை வகுப்பின் மூலம்,

அந்நிறுவனம் முழுமைக்கும் உத்தமத்திற்குக் குறைவான விளைவுகளே ஏற்படக்கூடும். இவ்வாறாக 1930 முதல் 1950 வரையிலான இருபது ஆண்டுக் காலத்தில் வெறும் கருத்தாய்வு நுதல் பொருளாக (abstract subject matter) இருந்து வந்த நலப் பொருளியலானது, அன்றாடப் பொருளியல் முடிவுகளினால் எழும் கடினமான சிக்கல்களைத் தீர்ப்பதற்கு உதவக்கூடிய பயில்முறை விஞ்ஞானமாக வலுவோடு வளர்ந்திருப்பதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

செல்வாதாரங்களின் உத்தம ஒதுக்கீடு (optimum allocation of resources) மூலமாக உச்ச அளவு நலத்தை உண்டாக்குவதில் நிறைவுப் போட்டிக்கு (perfect competition) உள்ள குறைபாடுகளை மரபுக் கோட்பாடு (Traditional thought) பற்றிய வாதம் வெளிப்படுத்தியுள்ளது. இந்தத் தோற்றத்தின் (Theorem) செயல் பகுப்பாய்வு நிரூபணம் (activity analysis proof) ஒன்று அண்மையில் வகுக்கப்பட்டுள்ளது.

நலப் பொருளியலில் உள்ளது போன்ற 'குறிக்கோள் நோக்குடன் அமைந்த பகுப்பாய்வு முறைகள், செயல் பகுப்பாய்வு- நடவடிக்கை ஆராய்ச்சி ஆகியவற்றுடன் காரணப் பகுப்பாய்வுக்கு (Instrumental analysis) உள்ள தொடர்பை விரிவாக ஆராய்வதற்கும் நிறைய வாய்ப்பு உள்ளது. குறிப்பிட்டுள்ள குறிக்கோள்களை (given ends) அவடவதற்குரிய வழி துறைகளை நிருணயிப்பதில் கவனம் செலுத்துவதே அவற்றுக்கிடையிலான பொதுமைப் பண்பாகும் (comannality).

பொருள் நலம் பற்றிய எழுத்துகள் யாவும் வழக்கமாக ஏற்கெனவே நிறுவப் பெற்றுள்ள பொருளியல் தத்துவங்களிலிருந்து (இத்தத்துவங்களும் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படாதவை) தொடங்கி, பொருளியல் விஞ்ஞானத்தின் குறுகிய எல்லைகளுக்குள்ளேயே சுற்றி வருகின்றன. சமூக விலங்கு (Social animal) என்ற முறையில் தனி நபர்களுடனும் (individuals), ஒரு தனி அமைப்பு என்ற வகையில் சமுதாயத்துடனும் செயல் தொடர்பு கொள்ள வேண்டிய இயல்பு கொண்டதாகப் பொருள் நலம் அமைந்துள்ளமையால், பல்வகை ஒழுங்கு முறைகளுடன் (Inter disciplinary lines) இத்துறை வளர வேண்டியது அவசியம். இங்கு நலப் பொருளியலுக்கும், அறவியல், தத்துவம், உளவியல், அரசியல் ஆகியவற்றுக்கு இடையிலான நெருங்கிய உறவு குறித்து இங்கு குறிப்பிட வேண்டிய அவசியமில்லை. பொருளியலை அதன் பிறப்பிடமான அறவியல்,

தத்துவம் இவற்றிலிருந்து முற்றிலும் துண்டித்துவிட வேண்டுமென பெருங் கூக்குரல் எழுப்பப்பட்ட போதிலும்கூட, பொருளியலானது அறவியல் சார்பற்ற தன்று' (non-ethical) என்று புலப்படுத்தும் படியும் 'அவசரக்காரர்களின் (impatient) பாய்ச்சலையும்' 'உணர்ச்சி வாதிகளின் (emotionalists) எழுச்சியையும்' மட்டுப்படுத்தும்படியும் சகப்பொருளியல் வாதிகளிடம் புகழ்பெற்ற பொருளியல்வாதிகள் கெஞ்சிக் கேட்பதை நாம் அடிக்கடி கேட்கமுடிகிறது[7]. இந்தத் தத்துவ நோக்கு அரை நூற்றாண்டு பழமையானது. அந்த வகையில், பொருளியல்வாதிகள், 'உன்னதமான, விஞ்ஞானமுறைப் பொருளியல் பணியில்' ஈடுபட்டிருக்கும் அதே சமயத்தில் 'அறவியல் தொண்டினையும் (Ethical Service) ஆற்றி வருகிறார்கள். உண்மையைச் சொன்னால், ஒவ்வொரு தலைமுறையைச் சேர்ந்த பொருளியல் வாதிகளும் பொருளியலுக்கும் அறவியலுக்குமிடையே ஒருவகைப் பிணைப்பை (union) ஏற்படுத்த வேண்டுவது அவசியம் என்பதை உணர்ந்து கொண்டு வருகிறார்கள்.

சமூக மனப்போக்கில் (Social influence) மாறுதல் உண்டாக்கவும், கொள்கைகளின் குறிக்கோள்களைத் தெளிவாக்கவும், குறிப்பிட்ட வழிதுறைகளுக்கும் குறிக்கோள்களுக்குமிடையிலான உறவுகளின் முரண்பாடுகளை எடுத்துக் காட்டவும் வேண்டுமானால், அதற்கு நலப்பொருளியலானது பயில்முறை அறவியலை (applied ethics) விலக்கி ஒதுக்குவதற்குப் பதிலாக அதன்மேல் 'படையெடுப்பது' (Invade) பயனுடையதாக இருக்கும். ஆரோ (Arrow), பிளாக் (Black),[8] இருவரும் அண்மையில் எழுதியுள்ள நூல்கள் இத்தகைய இயல்புகள் வாய்ந்தனவாக அமைந்துள்ளன. உண்மையில் இந்தத் துறையில் எதிர்காலத்தில் பொருளியலும், அரசியலும் இணைந்த ஒருவகை இடையுறவு விஞ்ஞானம் (Inter - disciplinary science) உருவாவதற்கு வாய்ப்பிருக்கிறது, ஒரு சார்பான தனியார் சுவாதீனக் கொள்கைக்கும் (Individulism), போதிய பயன்தராத கூட்டாண்மைக் கொள்கை அல்லது தேசியக் கொள்கைக்கும் (Short-sided collectivism or nationalism) இடையில் பாதுகாப்பான வழியைக் காட்டிச் செல்வதற்குப் பொருளியல்வாதிக்குச் சிறிதளவு சமூகவியலறிவு (Social Knowledge) அமைந்திருக்க வேண்டியது இன்றியமையாததாகும். மேலும், பொருளியல் கொள்கையின் முரண்பட்ட குறிக்கோள்களில், இறுதிச் சிக்கல்கள் எல்லாம் உண்

7 Goshen G. J: 'Ethics and Economics' (Presidential Address Economic Journal, 1893, Vol 3. pp. 386 397.

8 Black, Duncan: 'The Unity of Ecnomics and Political Science' Economic Journal September 1950. pp. 506-514

மையில் இயல் கடந்த (Metaphysical), அறவியல், சமூகவியல் (Socialogical) அம்சங்களைப் பொறுத்தாக இருக்கின்றன.

நலப் பொருளியலானது ஓர் அறவியல் விளக்கத்துடன்கூடிய ஒரு நுண்கணிப்பாகும் (Calculus); நலப் பொருளியலின் பரிந்துரைகளை நடைமுறையில் செயல்படுத்தும்பொழுது அரசியல் மாற்றங்கள் ஏற்படுவது தவிர்க்க முடியாததாகையால், நலப் பொருளியல் கோட்பாடுகளை ஆராய்வதில் அரசியல் ஒரு மையமான இடத்தைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. கொள்கை முடிவுகளுக்கு ஆதாரமாகக் காட்டுவதற்குரிய ஒரு கோட்பாட்டை உருவாக்க, நலப் பொருளியலில் 'சிறிதளவு அரசியலைப்' புகுத்துவதை லிட்டிலைப் போலவே 'அறிஞர் கிராப்பும் (Graff)[9] ஆதரிக்கிறார். லாங் லங்காஸ்டர், லைபன்ஸ்டீன், ஆரோ ஆகியோர் அண்மையில் ஆராய்ந்து அறிவித்துள்ள கருத்துகளின் மூலமாக, நலப் பொருளியல் வெகுவாக விரிவடைந்து, அறவியல், அரசியல் ஆகியவற்றின் சமூக விஞ்ஞானத்தைப் போன்று உருப்பெறக் கூடிய வாய்ப்பு ஏற்பட்டுள்ளதைக் காண்கிறோம். 'பொருளியல் தத்துவங்கள், பயில்முறைப் பொருளியல் இவற்றை மட்டும் ஆராய்வதுடன் பொருளியல் வாதிகள் நின்றுவிடாமல்' அதற்கு அப்பாலும் சென்று ஆராய்ச்சிகளை நடத்த வேண்டுமென தீவிர நேர்காட்சி வாதியாகிய (ardent positivist) ராபின்ஸ்கூட வலியுறுத்துகிறார். 'வேறு பல பொருளியல் முறைகளையும் ஆராய்வதற்கு நாம் ஆயத்தமாக இருக்க வேண்டும்; அப்பொழுதுதான் பொருளியல் துறையில் குறிப்பிடத்தக்க தொண்டு ஆற்றுவதற்குரிய ஆற்றலைப் பொருளியல்வாதிகள் பெறமுடியும்'.[10]

எதிர்காலத்தில் இத்தகைய வளர்ச்சிப் போக்கு ஏற்படும் என்பதை பிகோவும் உணர்ந்திருந்தார். 'நலப் பொருளியல்' என்ற நூலை அவர் வெளியிடுவதற்கு முன்னரே, 'அரசியல்உலகு பொருளியல்உலகு இரண்டையும் இயக்கநிலைக் கண்ணோட்டத்துடன் நோக்க வேண்டுமேயன்றிப் புள்ளிவிவரக் கண்ணோட்டத்துடன் நோக்குதல் கூடாது' என்று பிகோ குறிப்பிட்டுள்ளார்.[11] இதே கருத்தை அறிஞர் கானனும் (Cannan) தெரிவிக்கிறார். அவர் பொருளியலுக்கு வழங்கி வந்த 'அரசியல் பொருளியல்' (Political econo-

9 Graaf. J. de V. 'In Making Recommendations in a Democracy' Economic Journal June 1962 pp. 293-298.

10 Robbins. L: The Economist in the Twentieth Century London, 1954) pp. 16-17

11 Picrou. A. C: 'The Parllel Between Economic Political Theory' Economic Journal. 1902, Vol 12 p 277

my) என்னும் பெயர் மறைந்து போனதற்கு வருந்துகிறார். பொருளியல் கோட்பாட்டின் நடைமுறைப் பயன் தனியார் வாணிகத்தில் இல்லை, அரசியலில்தான் உள்ளது, என்ற உண்மையை அந்தப் பெயர்தான் உணர்த்துகிறது என்று அவர் கருதுகிறார்.[12]

நலப் பொருளியலின் கடந்த 30 ஆண்டுக் காலமாக வளர்ச்சியில், அதில் காணப்படும் குறைபாடுகளை (Short comings) நோக்கும் பொழுது, அது தற்சமயம் 'மிகவும் வருந்தத்தக்க நிலையில்' (unhappy state) இருக்கிறது என்பது மிகத் தெளிவாகப் புலனாகிறது. உள்ளீடற்ற வெறுங்கூடாக (hollow shell) நலப் பொருளியல் மாறியதுதான், பொதுவான கொள்கை ஒன்றை வகுப்பதற்கு நூலாசிரியர்கள் தொடர்ச்சியாகத் தீவிர முயற்சி மேற்கொண்டதனால் ஏற்பட்ட பலனாகும். நிறைவுப் போட்டியின் கீழ் விருப்பத் தன்மைக்கு (optionality) முக்கியத்துவம் கொடுத்து நலத்தை மரபு முறையில் கையாள்வதற்கு )traditional treatment) எதிராக எழுந்த புரட்சியின் (Revolt) துணை விளைவே (by - product) இதுவாகும்.

சோதனைக்குரிய, அளவிடுவதற்குரிய இயல்புகளை மட்டுமே ஆராய்கின்ற முறையில் பொருளியல் விஞ்ஞானத்தின் எல்லைகளைக் கட்டுப்படுத்துவதற்குச் செய்யப்படும் முயற்சிகளுக்கு எதிராக முக்கியமாகப் புரட்சி எழுந்தது. இத்தகைய கட்டுப்பாட்டை விதிக்க முயன்றவர் ராபின்ஸ். அவர், நலத்தை ஓர் குறிக்கோளாக ஆராய்வதற்குரிய உரிமையைப் பறிக்க முயல்கிறார். 'பொருளியலுக்குப் புறம்பான மீக்கோள் தரங்களை' ஏற்றுக் கொள்ளும் நிபந்தனையுடன் பொருளியல்வாதிகள் விதிகளை வகுக்க அவர் அனுமதிக்கிறார். விஞ்ஞானமுறை பயன்படுத்துவதற்குரிய துறைகளில் இவ் விஞ்ஞானத்தின் உரிமைகளுக்கும், முறையிலான நிரூபணம் (Scientific proof) தெரிவிக்க இயலாத நிலையில் உள்ள சிக்கல்கள் பற்றிய தீர்ப்புகளுக்கான (judgments) விஞ்ஞான அனுமதியைப் பெறும் உரிமைக்கும் இடையில் தெள்ளத் தெளிவான வேறுபாடு காணப்படுகிறது. முந்தியது பகுத்தறிவு வாய்ந்த மனிதன் மீதான ஒரு கட்டுப்பாடு ஆகும்; பிந்தியது, 'ஆன்மீக உறுதியின்மையின் (Spiritual uncertainty) சூழ்ச்சித் திட்டமாகும்;'

இதே காரணங்களைக் கொண்டு, யூகங்களின் நடைமுறை எதார்த்தத்தைப் (factual realism) பொறுத்து நலப் பொருளியல்

[12] Cannen E : The Practical usefulnees of Economic Theory Smyth, K L (Ed) Essays in Economic Method (London 1962)

[13] Buchanan, J. M. 'Positive Economics Welfare Ecomics and Political Economy' Journal Law and Economics, October 1959 p. 1251

பயனுடையதாக இருக்கும் என வாதிக்கப்படுகிறது.[13] எதார்த்தம் பற்றிய இந்தச் சிக்கல் குறித்து நேர்மாறான கருத்துகள் தெரிவிக்கப் படுகின்றன. ஒருசாரர் நலக்கோட்பாட்டைக் கடுமையாக வெறுக்கிறார்கள்; இன்னொரு சாரர் அதன்மீது வியக்கத்தக்க நம்பிக்கை வைத்துள்ளார்கள். எனினும், எதார்த்தத் தன்மையினைச் சோதித்துப் பார்ப்பதற்கு எவரும் தீவிர முயற்சி மேற்கொண்டதாகத் தெரிய வில்லை. அறிவியல் கோட்பாடுகளுடன் அவர்களுக்குள்ள தொடர்பே இதற்குக் காரணம் என்பது தெளிவு. இதன் விளைவாகச் சமநிலை சீர்குலைந்து போய், நலக்கோட்பாட்டின் முடிவுகளை வன்மையாகக் கண்டிக்கின்ற அல்லது தீவிரமாக ஆதரிக்கின்ற நிலை ஏற்பட்டுள்ளது. தனியாரை ஆய்வு செய்யும் பொருளியல்வாதி அல்லது கொள்கை வகுப்பவரை எல்லாம் அறிந்தவர் அல்லது நிறைபேரறிவுடையவர் (ominiscience) எனக் கருதுவது நலப் பொருளியலில் கண்டனத்திற் குள்ளாகும் யூகங்களில் ஒன்றாகும்.

## பிகோவிற்குப் பிற்பட்ட கோட்பாட்டின் குறைபாடுகள் :

பொருள் நலம் குறித்து பிகோவிற்குப் பிறகு வெளிவந்துள்ள நூல்களில் பெரும்பாலானவை-சிட்ஜ்விச் (Sidwich), எட்ஜ்வொர்த் பிகோ மற்றும் இவர்களுடைய சமகாலத்தவர்களின் நூல்களோடு ஒப்பிடும்பொழுது 'நல்லனவற்றை ஏற்றுக்கொள்ளும் (eclectic)[14] விரிந்த மனப்பாங்கைப் புலப்படுத்துகின்றன. இவர்கள் வழக்க மாகத் தங்களின் காரண காரிய ஆராய்ச்சியில் (Reasoning) குறைந்த கவனமுடையவர்களாகவும், கொள்கை சார்ந்த மூற் பண்புகளைக் (doctrinal antecedents) குறைவாக உணர்ந்தவர் களாகவும் இருக்கிறார்கள். புதிய நலப் பொருளியல் வாதிகள் என்று தங்களுக்குப் பெயர் சூட்டிக்கொண்ட போதிலும், அவர்கள் புதி தாக எதையும் கூறிவிடவில்லை;[15] பாரிட்டோ, பாரோன் (Barone) ஆகியோரின் வழக்கமான எளிமையாக்கும் யூகங்களை (Simplfiying assumptions) ஏற்றுக் கொண்டு, உத்தம நலத்திற்கென (optimum welfare) லாங் முழுதும் விரிவாக்கித் தெளிவாகக்கூறியுள்ள நிபந்தனைகளை இவர்கள் தனியாகப் பிரித்தெடுத்துள்ளார்கள்.[16]

ஆனால் பொருளியலை மதிப்பிடுவதற்கென்று பாரீட்டோ வகுத் துள்ள மறுக்க முடியாத, பயன்பாட்டுக்குப் பிற்பட்ட தரங்களை

[14] Myrdal, G, The Political Element in the Development of Economic Theory London. 1955 Preface, ppv - Vi

[15] Samuelson P. A. 'Founder Commentery on Welfare Economics. American Economic Review September 1943. p. 605

[16] LANGE. O. 'The Foundations of Welfare Econometrica Economica. July-October, 1942. pp 215 228.

(Post - utilitarian standards), ஒரு குறிக்கோள் ஆராய்ச்சியாக (objective study) ஆக்குவதற்கு மேற்கொண்ட முயற்சிகள் தோல்வியடைந்துவிட்டன.[17] பெர்க்சன், ஹிக்ஸ், சைட்டோவஸ்கி, சாமுவல்சன், லிட்டில் முதலியோர் மகத்தான பணியாற்றியுள்ள போதிலும், நவீன நலப் பொருளியல் இன்னும் 'உறுதியற்ற நிலையிலேயே' (unsettled state) உள்ளது. பிகோவின் நலப் பொருளியலுடன் ஒப்பிடும்பொழுது இவர்களுடைய கருத்துகள் மிகுதியாகப் பரிந்துரை தன்மையுடையனவாகவும், விதியமைப்பு முறையிலமைந்தனவாகவும் காணப்படுகின்றன. திறமை அம்சங்களின் அடிப்படையில் மட்டுமே பொருளியல் கொள்கையைப்பற்றி முக்கியமான முடிவுகளை அறிவிக்க முடியும் எனப் பாரீட்டோ நம்பினார். அதனால் அவர் திறமை பற்றிய அம்சங்களையும், பகிர்வு தொடர்புடைய அம்சங்களையும் தனித்தனியே பகுத்தமைத்தார். பின்னர், புதிய நலப் பொருளியலில் ஏற்பட்ட வளர்ச்சிகள் பாரீட்டோவின் இந்த நம்பிக்கையில் ஐயத்தைத் தோற்றுவித்து விட்டன அதேபோல், சைட்டோவஸ்கி வகுத்த இரட்டைத் தெளிவிலக்கணமும் (double criterion) ஐயத்திற்கிடமாகி விட்டது.

உண்மையான வருமானப் பகிர்வில் பாதகமான மாறுதல் யாதும் உண்டாகாத வகையில் செய்யப்படும் மாறுதல்களையே பிகோ தமது முடிவுகளுக்கு அடிப்படையாகக் கொண்டிருந்தார். ஆனால், இந்த முக்கியமான நிபந்தனையை அண்மைக்கால நலப் பொருளியல் வாதிகள் பலர் பொருட்படுத்தாமல் விட்டு விட்டார்கள். இது பற்றி நான்காம் அத்தியாயத்தில் விரிவாக விவாதிக்கப்பட்டுள்ளது.

பிகோவின் எழுத்துகளில் காணப்படும் யூகங்களுக்காகவே இந்தப் பொருளியல் வாதிகள் அவற்றை முக்கியமாகத் தாக்குகிறார்கள். ஆனால், இந்த முரண்பாடு குறித்து இவர்களிடமும் தெளிவான கருத்து யாதும் இல்லை. ஏனென்றால், நலப்பொருளியல் தனது தற்போதைய வடிவில், 'நுகர்வோரின் சுவை மாறாமலிருக்கிறது' என்பதுபோன்ற இயல்புக்கு மாறான யூகங்களை மேற்கொள்கிறது. பயன்பாட்டுப் பொருளியலின் (Utilitarian economics) கணித, தத்துவ அடிப்படையினையும் புதிய நலப் பொருளியல் வாதிகள்[18] எதிர்க்கிறார்கள். ஆனால், அளவிடுந்தன்மை (measurability), ஒப்பிடுந்தன்மை (comparability) ஆகியவைபற்றிய இரண்டு கருதுகோள்களையும் (premises) தெளிவுபடுத்த இயலவில்லை. இப் பொருளியல் வாதிகள் தங்களின் சொந்தக் கோட்பாடுகளின் அடிப்படையையே மறந்துவிட்டார்கள்; மேலும், புதுமை

[17] BRAYBROOKE David: "Farewell to the New Welfare Economics", Review of Economic Studies: Vol. XXII, 1954–55, pp 180-193.

[18] Harsanyi, J. C.: 'Welfare Economics of Variable Tastes: Review of Economic Studies, Vol. XXI, 1953 - 54. p. 204.

யாதுமில்லாத சிக்கலான 'மடிப்பெண் விருத்தி அமைப்பு முறை'[19] (geometric structure) (சமநோக்குப்பாய்வு) ஒன்றைக் கொண்டு அளபுடைத்தன்மை பற்றிய பயன்பாட்டு யூகத்தை ஒதுக்கித் தள்ளி விடுவதற்கு அவர்கள் மேற்கொண்ட முயற்சியும் வெற்றிபெற வில்லை. நலம், பயன்பாடு ஆகியவற்றின் அறவியல், கணிதப் பின்னணி தொடர்பான சர்ச்சை அவசியமின்றித் தலையிடாமல், விரிவானதொரு துறையை ஆராய்வதற்கு நம்மை அனுமதிப் பதற்குப் பயன்பாட்டு யூகத்தைத் தொடர்ந்து கையாள்வது நலமாக இருக்கும்.

உச்சநிலை நலத்திற்கான நிபந்தனைகளைத் திட்டவட்டமாக வரையறுத்துக் கூறியது புதிய நலப் பொருளியலின் சாதனைகளில் ஒன்று என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். இது பொருளியலில் பயன்பாட்டு மரபிலிருந்து மாறுபட்ட ஒன்றாகும். ஆனால் 'உத்தம நிபந்தனைகளை நடைமுறையில் செயலாக்குவதன் மூலம்',[20] நலத்தில் ஓர் உயர்வு ஏற்பட்டுவிடும் என்று நிச்சயமாகச் சொல்ல இயலாது. இறுதியில், பயன்பாட்டுப் பகுப்பாய்வில் ஏற்பட்ட அதே முடிவுகளே இதிலும் ஏற்படுகின்றன; இரண்டிலும் வருமானப் பகிர்வு பற்றிய நிபந்தனையைக் குறிப்பிடவேண்டியது இன்றியமை யாததாகிறது.[21] மேலும், வகுக்கப்பட்ட நிபந்தனைகளிலும் குறை பாடுகள் இல்லாமல் இல்லை. ஒரு சமூக உத்தமமானது (social optimum), வேறெந்த நிலையையும்விட உயர்வானதுதான் என்று மட்டுமே, இறுதிநிலை நிபந்தனைகள் (marginal conditions) வரை யறுக்கின்றன. ஆனால், உண்மையில் உலகம் முழுவதிலும் வேறெந்த நிலையையும்விட உயர்வானதாக அது இருக்கவேண்டிய அவசிய மில்லை.

நலத் தெளிவிலக்கணங்களைப் பற்றிய சர்ச்சையானது, உத்தம நிலைமைகள் பற்றிய கருத்தாய்வு விளக்கவுரைகளைக் (abstract dissertations) காட்டிலும் அறவியல், உட்பொருள்கள், முற்கோள் களின் தகுதி ஆகிய இரண்டினையும் பற்றிய ஆழ்ந்த நுண்ணாய்வாக எவ்வாறு மாறியுள்ளது என்பது 4, 5 A, 5 B ஆகிய அத்தியா யங்களில் சுருக்கமாக விவாதிக்கப்பட்டுள்ளது. நலமாறுதலுக்கான தெளிவிலக்கணங்களை நிருணயிப்பதுதான் நலப் பொருளியல்வாதி

[19] Kushwaha, D. S.: 'Utilitarianism and the New Welfare Economics' Indian Economic Journal, 1954-55, Vol. 35, p. 151.

[20] Little, I. M. D.: A Critique of Welfare Economics (Oxford, 1957), p. 84.

[21] Arrow, K. J. 'Little's Critique of Welfare Economics', American Economic Review, December, 1951, p. 924.

கள் அனைவரையும் எதிர்நோக்கும் பெருஞ்சிக்கலாகும். இத்தகைய தெளிவிலக்கணம் ஒன்றைத் தாங்கள் வகுத்து விட்டதாகப் புதிய நலப் பொருளியல்வாதிகள் பெருமையடித்துக் கொண்ட போதிலும்[22] மதிப்புத் தீர்ப்புகள் ஏதுமில்லாத, மனநிறைவளிக்கத்தக்க, குறிக்கோள் சார்ந்த தெளிவிலக்கணம் எதையும் எவரும் இதுவரை வகுக்கவில்லை. நலப் பொருளியலின் முடிவுகள் யாவும் தவிர்க்க முடியாத வகையில் மதிப்புத் தீர்ப்புகளாகவே இருக்கின்றன. ஒரு வழிமுறையை ஆர்ச்சிபால்டு தெரிவித்துள்ளார். " நலம் பற்றிய ஒரு பொருள் விளக்கத்துடன் தகுந்த முறையில் நலத் தீர்ப்புகளைப் பிணைத்து விட்டால், நலத் தீர்ப்புகளுக்குக் கட்டுப்படாமல் நலப் பொருளியலை நாம் ஆராய முடியும். இது சாத்தியமான ஒரு வழி தான் என்றாலும், இதிலிருந்து பயனுள்ள பலன் எதுவும் ஏற்படுமென்று தோன்றவில்லை.

22 Stigler, G. J.: 'New Welfare Economics', American Economic Review, June, 1943, p. 357.

23 Archibald, G. C.: 'Welfare Economics, Ethics and Essentialism' Economica, November, 1959.

## மேற்கோள் நூற்பட்டியல்

## (BIBLIOGRAPHY)


Allen, R. G. D., 'Mathematical Economics' (London, 1957).

Arrow, K. J., 'Social Choice and Individual Values' (London, 1951).

Baumol, W. J., 'Welfare Economics and the theory of the State' (London, 1952).

Baumol, W.J., 'Economic-Theory and Operations Analysis' (New Jensey, 1966).

Benham, F. C., 'Economic Welfare', Economica, June, 1930.

Blaug, M., 'Economic Theory in Retrospect' (London, 1964).

Boulding, K. E., 'Economic Analysis' (London 1955).

Clark, J. B., 'Essentials of Economic Theory' (Columbia, 1900).

Galbraith, J. K., 'The Affluent Society' (Boston, 1958).

Graaff, J.de V., 'Theoretical Welfare Economics' (London, 1957).

Haley, B. F., (Ed.) 'Survey of Contemporary Economics', Vol. II (Illinoisė, 1952).

Hicks, J. R., 'The Foundations of Welfare Economics,' Economic Journal, December, 1939.

Hicks, J. R., 'The Valuation of Social Income', Economica, 1940.

Hicks, J. R., 'Essays in World Economics,' (London, 1959).

Hutchison, T. W., 'A Review of Economic Doctrines, 1870-1929' (Oxford, 1953).

Hutchison, T. W., "'Positive' Economics and Policy Objectives," (London, '64).

Lerner, A. P., 'Economics of Control' (NewYork, 1946).

Little, I. M. D., 'A Critique of Welfare Economics', (2nd Edn Oxford, 1957).

Majumdar, T., 'Measurement of Utility' (London, 1958).

Meade, J. E., 'Trade and Welfare' (Oxford, 1955).

Mishan, E. J., 'A Survey of Welfare Economics' (Economic Journal), April, 1960.

Myint, Hla., 'Theories of Welfare Economics' (London, 1948).

Pigou, A. C., 'Wealth and Welfare' (London 1912).

Pigou, A C., (Ed.) 'Memorial of Alfred Marshall' (London, 1925).

Pigou, A.C., 'Economics of Welfare,' (4th Edn.) (London, 1932).

Pigou, A.C., 'A Study in Public Finance' (3rd edn. London, 1951).

Pigou, A. C., 'Some Aspects of Economic Welfare', American Economic Review, June, 1951.

Reder, M., 'Studies in the Theory of Welfare Economics' (New York, '47).

Robins,-Lionel, 'An Essay on the Nature and Significance of Economic Science '(London, 1932).

Rothenberg, J., 'Measurement of Welfare' (New Jersey, 1961).

Samuelson, P. A., 'Foundations of Economic Analysis' (Cambridge, Mass, 1947, Ch. VIII).

Sctovsky, T., 'A Note on Welfare Proposition in Economics' Review of Economic Studies, November, 1941.

Smith, R.L., (Ed.) 'Essays in Economic Method' (London, 1962).

Stigler, G.J., 'The New Welfare Economics', American Economic Review, June, 1943.

———

# கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Axioms | — | அடிப்படை வாதங்கள் |
| Additive Utility | | கூட்டவல்ல பயன்பாடு |
| Average Cost | — | சராசரிச் செலவு, சராசரி அடக்கவிலை |
| Assumptions | — | எடுகோள்கள் |
| Allocation | — | ஒதுக்கீடு |
| Aggregate real income | — | மொத்த உண்மை வருமானம் |
| Business cycle | — | வாணிகச் சுழற்சி |
| Choice | — | தேர்வு |
| Ceteris paribus | — | மற்றவை மாறுநிலை |
| Cardinality | -- | அளபுடைத் தன்மை |
| Cardinal index | — | அளபுடைக் குறியீட்டெண் |
| Cardinal utility | — | அளபுடைப் பயன்பாடு |
| Consumer | — | நுகர்வோர் |
| Competition | — | போட்டி |
| Closed economy | — | வரையறைப் பொருளாதாரம் |
| Consumption | — | நுகர்வு |
| Consumer's surplus | — | நுகர்வோர் உபரி |
| Capitalism | — | முதலாளித்துவம் |
| Commodities | — | பண்டங்கள், பொருள்கள் |
| Compensation | — | நட்ட ஈடு |
| Constant costs | — | மாறாச் செலவு |
| Criteria | — | தெளிவிலக்கணம் |
| Divisibility of resources | — | வளப்பொருள் பகிர்வு நிலை |
| Decreasing costs | — | குறைந்து செல் செலவுகள் |
| Diminishing marginal utility | — | குறைந்து செல் இறுதிநிலைப் பயன்பாடு |
| Distribution | — | பகிர்வு |

| | | |
|---|---|---|
| Diseconomies | — | சிக்கனக் கேடுகள் |
| Domestic trade | — | உள்நாட்டு வாணிகம் |
| Demand | — | தேவை |
| Economic mechanism | — | பொருளியல் செயல்முறை |
| Equation | — | சமன்பாடு |
| Equilibrium | — | சமநிலை |
| Elastic demand | — | நெகிழ்வுத் தேவை |
| Enterprise | — | தொழில் முயற்சி |
| External economies | — | புறச் சிக்கனங்கள் |
| Empirical | — | அனுபவ |
| External diseconomies | — | புறச் சிக்கனக் கேடுகள் |
| Exchange | — | நாணயமாற்று |
| Factors of production | — | உற்பத்திக் காரணிகள் |
| Free economy | — | தடையிலாப் பொருளாதாரம் |
| Ideal Index Numbers | — | உன்னதக் குறியீட்டெண்கள் |
| Income | — | வருமானம் |
| Indifference analysis | — | சமநோக்குப் பகுப்பாய்வு |
| Income distribution | — | வருமானப் பகிர்வு |
| Interpersonal comparisons | — | துரக்கால் ஒப்பீடுகள் |
| Increasing returns | — | வளர்ந்துசெல் விளைவு |
| Inelastic demand | — | நெகிழ்வற்ற தேவை |
| Increasing costs | — | வளர்ந்துசெல் செலவுகள் |
| Index numbers | — | குறியீட்டெண்கள் |
| Imperfect competition | — | நிறைகுறைப் போட்டி |
| Laissez faire | — | தலையிடாமைக் கொள்கை |
| Labour cost theory | — | உழைப்பு அடக்கவிலைக் கோட்பாடு |
| Mathematical analysis | — | கணிதப் பகுப்பாய்வு |
| Material welfare | — | பொருள்வள நலம் |
| Materiality | — | பொருள்வளத் தன்மை |
| Maximisation of material welfare | — | பொருள் நலம் உச்சப்பாடு அடைதல் |
| Macro economics | — | பருவினப் பொருளியல் |
| Micro economics | — | நுண்ணினப் பொருளியல் |
| Margin | — | இறுதிநிலை |
| Marginal cost | — | இறுதிநிலை அடக்கச் செலவு |
| Market economy | — | சந்தைப் பொருளாதாரம் |
| Monopoly | — | ஏகபோக உரிமை |
| Maximum conditions | — | உச்சநிலைச் சூழல்கள் |

| | | |
|---|---|---|
| Maximum productional allocation | — | உச்ச ஆக்கவள ஒதுக்கீடு |
| Murginal social net product | — | இறுதிநிலைச் சமூக நிகர உற்பத்தி |
| Marginal private net product | — | இறுதிநிலைத் தனியார் நிகர உற்பத்தி |
| Marginal displacement cost | — | இறுதிநிலை இடப்பெயர்ச்சி அடக்கச் செலவு |
| Marginal physical product | — | இறுதிநிலை இயற்பொருள் உற்பத்தி |
| Marginal rate of substitution | — | இறுதிநிலை பதிலீட்டு வீதம் |
| Macro-equilibrium | — | பருவினச் சமநிலை |
| Multiplier approach | — | பெருக்கி அணுகுமுறை |
| Mobility | — | இடம் பெயர்வாற்றல் |
| National Welfare | — | தேசிய நலம் |
| Normative economics | — | தரஞ்சூழ் பொருளியல் |
| National dividend | — | தேசியப் பகிர்வுத் தொகை |
| Necessary condition | — | அவசியச் சூழல் |
| Neo-classical | — | புதிய சம்பிரதாய |
| New Welfare Economics | — | புதிய நலப் பொருளியல் |
| Oligopoly | — | சிலராதிக்கம் |
| Output | — | வெளிப்பாடு |
| Ordinality | — | படிநிலையுடைமை |
| Optional allocation of recourses | — | உத்தமச் செல்வாதார ஒதுக்கீடு |
| Optimum | — | உத்தமம் |
| Overhead costs | — | முதல்நிலைச் செலவுகள் |
| Optimum condition | — | உத்தமச் சூழல் |
| Perfect competition | — | நிறைவுப் போட்டி |
| Per capita income | — | தலா வருமானம் |
| Positive economics | — | ஆக்கப் பொருளியல் |
| Production | — | உற்பத்தி |
| Price economics | — | விலைப் பொருளியல் |
| Policy | — | கொள்கை |
| (Value) Premises | — | கருதுகோள்கள் |
| Postulate | — | அடிக்கோள் |
| Preference function | — | விருப்பச் சார்பு |
| Real income | — | உண்மை வருமானம் |
| Redistribution | — | மறுபகிர்வு |
| Resources | — | செல்வாதாரங்கள் |
| Ranking | — | படிமுறைப்படுத்தல் |

| | | |
|---|---|---|
| Sufficient condition | — | போதிய சூழல் |
| Social value | — | சமூக மதிப்பு |
| Social welfare function | — | சமூக நலச் சார்பலன் |
| Scientific materiality | — | விஞ்ஞானமுறைப் பொருள் வளத்தன்மை |
| Social optimum | — | சமூக உத்தமம் |
| Scientific standards | — | விஞ்ஞானத் தராதரங்கள் |
| Synthetisers | — | தொகுப்பாய்வாளர்கள் |
| Scarcity | — | பற்ருக்குறை |
| Social maximum | — | சமூக உச்சப்பாடு |
| Social production | — | சமூக உற்பத்தி |
| Substitution | — | பதிலீடு |
| Social utility | — | சமூகப் பயன்பாடு |
| Satisfaction | — | மனநிறைவு |
| Theory of Division of Labour | — | உழைப்புப் பகிர்வுக் கோட்பாடு |
| Trade | — | வாணிகம் |
| Utilitaranism | — | பயன்பாட்டுக்கொள்கை |
| Usury | — | கடும் வட்டி |
| Utilities | — | பயன்பாடுகள் |
| Utility possibility curve | — | பயன்பாட்டு நிகழ்திறன் கோடு |
| Value Judgements | — | மதிப்புத் தீர்ப்புகள், மீக்கோள் தரங்கள் |
| Valuation | — | மதிப்பீடு |
| Value | — | மதிப்பு |
| Variability | — | மாறுபடுந்தன்மை |
| Welfare function | — | நலச் சார்பு |